MAR-1951

# பெர்குஸன்

வருஷ முழுவதும் குறைந்த செலவில்
சேவை புரிகின்றது







“பெர்குஸன்” டிராக்டர் ஏராளமான தினுசு கருவிகளுடன் கூடியிருப்பதால், பண்ணை வேலை எதையும் சிக்கனமாயும் சிறப்பாயும் செய்து முடித்து, மார்க்கட்டில் கிடைக்கும் வேறெந்த டிராக்டரையும்விட உழைப்பிலும், அமைப்பிலும் உன்னதமானதாக விளங்கி வருகிறது. இது சம்பந்தமான கல்வி போதனை மற்றும் பழுதுபார்க்கும் திட்டங்களும், இந்தியா முழுவதிலும் கிடைக்கும் ஏராளமான ஸ்பேர் பாகங்களும், ஸர்விஸும் ‘பெர்குஸன்’ டிராக்டர் ஸ்தாபனத்திற்கே பிரத்யேகமான அம்சங்களாகும். படத்தில் காணும் 10'' இரு மழுக் கலப்பை எந்தவிதமான நிலங்களிலும் அப்பட்டமாக வேலை செய்யக்கூடியது.



**கிரெய்ன் டிரில்**

இந்தப்பிரசித்திபெற்ற டிரில் மணிக்கு நாலு ஏகர் நிலங்களில் விதைகளைத் தூவும்



**டாண்டம் டிஸ்க ஹாரோ**

உழுதபின் மண்கட்டிகளை உடைத்து விதைப்பதற்கு பண்படுத்துகின்றது

விநியோகஸ்தர் :—



## கமானி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் லிட்.

கமானி சேம்பர்ஸ், நிகல் ரோட், பாலர்ட் எஸ்டேட், பம்பாய்.

**ஒவ்வொரு ஜில்லாவிலும் ஸ்டாகிஸ்டுகள் தேவை. டிராக்டர்களை ஓட்டிக் காண்பிக்கச் சொல்லுங்கள்**

---

வியாபாரிகள் :

**கமானி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் லிட்.**

“ஸாகர் மான்ஷன்” — நெ. 2, ஜோன்ஸ் தெரு, — ஜி. டி. மதராஸ்

KB LDT. / F1.

# பரிசு ரூ 6000

முதற்பரிசு ரூ 3000
2வதுபரிசு ரூ 2000
3வதுபரிசு ரூ 1000

இப்போட்டியின் சீலிட்ட விடை சென்னை ப்ரீமியர் பாங்க் ஆப் இந்தியாவில் டிபாசிட் செய்யப்பட்டுள்ளது.

★ பிரவேசக்கட்டணம் கூப்பன் ஒவ்வொன்றுக்கும் அணு நான்கு மட்டும் ★

பதினொன்று கூப்பன் அனுப்புபவர் மேற்கொண்டு ஒரு கூப்பன் இலவசமாக அனுப்பலாம்.

## முடிவு தேதி 11—4—51

| | | விடைகள் 1 | 2 |
|---|---|---|---|
| 1 | அறிவாளிகள் பேச்சு இப்படியாக இருப்பது இயற்கை | அடக்கம் | சுருக்கம் |
| 2 | சில காரியங்களில் வெற்றிபெற இது அவசியம் வேண்டும் | பணிவு | துணிவு |
| 3 | இதாக இருப்பவனுக்கு இஷ்டப்படி சாப்பாடு கொடுப்பார்களா ? | கைதி | வியாதி |
| 4 | ......என்றால் முரட்டுத்தனமான முறைகளைக் கைகொள்ளலாமா ? | பெண் | கண் |
| 5 | முன்னணியில் நிற்கும் சேனைக்கு நல்ல இது இருக்கவேண்டும் | தலைமை | திறமை |
| 6 | எப்போதுமே இதுவே பேசுவது என்பதும் சாத்தியமல்ல | பொய் | மெய் |
| 7 | ஒரு படம் வெற்றிபெற முக்கியமாக வேண்டியது திறமைவாய்ந்த இதுதான் | நடிப்பு | பிடிப்பு |
| 8 | ஆண்களைவிட பெண்களிடம்தான் இது அதிகம் எனலாம் | பொறுமை | பொருமை |
| 9 | இது செழிப்பாயுள்ள நாட்டில் பஞ்சம் இருக்கமுடியுமா ? | விவசாயம் | வியாபாரம் |
| 10 | மனைவிமக்கள் என்றால் தலைவனுக்கு இது இல்லாமலிருக்குமா ? | பாசம் | பாரம் |
| 11 | பெரிய மனிதர்களுடன் சமமாக இவனுக்கும் ஸ்தானம் கிடைக்குமா ? | கல்லாதவன் | இல்லாதவன் |
| 12 | திருவிழாப் பிரதேசத்தில்......களை அதிகமாகக் காணலாம் | ஆண்டி | வண்டி |
| 13 | வாழ்க்கையில் சுகம்பெற அவசியம் வேண்டியது இது | மணம் | பணம் |

மேலே உள்ள கட்டத்தில் பதின்மூன்று குறிப்புகளும் அவை ஒவ்வொன்றுக்கும் இரண்டு இரண்டு விடைகளும் தரப்பட்டுள்ளன. அதில் குறிப்புக்கு மிகப் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதவும். விடைகளைச் சாதா காகிதத்திலும் எழுதலாம். அச்சுக் கூப்பன்களும் தேவையானவர்களுக்கு இலவசமாக அனுப்பப்படும். விடைகளை வார்த்தைகளாகவும் எழுதலாம். 1—2 என்ற எண்களை உபயோகித்தும் எழுதலாம். பர்முடேஷன் முறையும் அனுமதிக்கப்படும்.

கட்டணத்தை மணியார்டர் மூலமேதான் அனுப்பவேண்டும். ம. ஆ. ரசீதும் கூப்பனுடன் கண்டிப்பாய் சேர்த்தனுப்ப வேண்டும். மணியார்டர் பாரத்தின் அடிக் கூப்பனிலும் அனுப்புபவரின் முழு விலாசம் எழுதவேண்டும். இப்போட்டியின் சரியான விடை சித்திரை இதழ் காவேரியில் வெளிவரும். நேயர்களுக்குத் தபால் மூலமும் அனுப்பப்படும். மானேஜரின் தீர்ப்பும் எமது நிபந்தனைகளுமே முடிவானதும் சட்டப்படிக் கட்டுப்படுத்துவதுமாகும். நிபந்தனைகள் வேண்டுவோர் எழுதவும்.

கூப்பனும் கட்டணமும் அனுப்பவேண்டிய விலாசம் :- **மானேஜர், வரலக்ஷ்மி கம்பெனி** "ஸ்ரீவாஸ்" பல்மநேர் P. O. (சித்தூர் ஜில்லா)

பாயிண்ட்ஸ் முறை நமக்கில்லை ! ஒரு தப்பு இரண்டு தப்பாக கணக்காக்கப்படமாட்டாது !

**போட்டி 12-ன் சரியான விடை :—**

(1) ஆதாரம் (2) ருசி (3) வேலையாள் (4) நடுங்குதல் (5) கனவு (6) விழி (7) காலம் (8) கவி (9) சுத்தி (10) பொறுமை 1 2 1 1 1 1 1 2 2 2

## வரலக்ஷ்மிப் போட்டி - 11 முடிவு.

வரலக்ஷ்மிப் போட்டி நெ. 11
சரியான விடை

1. சிப்பந்தி ... 1
2. புருவம். ... 2
3. சந்தோசம் ... 2
4. நடை ... 2
5. பக்தி ... 2
6. கற்பனை ... 1
7. மாது ... 1
8. பணியாள் ... 2
9. நாயகன் ... 1
10. ஆராய்ச்சி ... 2

We hereby certify that the above is the Solution in original deposited with us, by VARALAKSHMI COMPANY on 10th Jan 1951 in a sealed cover which was opend in our presence to day and that a copy of the above solution has been lodged with the bank.

For PREMIER BANK OF INDIA LTD
V. Ramaswamy 14.2.51
Agent, (MADRAS.)

முதற் பரிசு (சரியான விடைக்கு)
**தலைக்கு ரூ. 45—0—0 வீதமும்**

2வது பரிசு (ஒரு தப்புள்ள விடைக்கு)
**தலைக்கு ரூ. 3—0—0 வீதமும்**

3-வது பரிசு (இரண்டு தப்புள்ள விடைக்கு)
**தலைக்கு ரூ. 0—12—0 வீதமும்**

பகிர்ந்து வழங்கப்பட்டன.

பரிசுத் துகைகள் யாவும் 19—2—51 அன்று அனுப்பப்பட்டன.

பரிசு பெற்றவர்களின் சுருக்கமான ஜாபிதா.

ஏ. வி. வைத்தியநாதன் 20, தாமோதர ரெட்டித்தெரு சென்னை-17, மீஸஸ், ஜி. டி. ஜேம்ஸ் தொண்டையார் பேட்டை சென்னை, ஆர். விஸ்வநாதன் தண்டபாணித்தெரு சென்னை-17, கே. எம். கௌஸ் வாட்ச் ஹாஸ்பிடல் சிங்கல் பட்டு, எஸ். ராஜகோபாலய்யர் மஹாதானத்தெரு மாய வரம், ஜி. இன்னுசிமுத்து ஹோ அண்டு கோ திருச்சி, ஏ. எல், சுப்பிரமணிய ஆச்சாரி பெரியச்கம்மாளத்தெரு திருச்சி, இ. ஷெய்க் மொஹிதீன் யானைக்கால் தைக்கால்தெரு மதுரை, எம், கமால்தீன் மூலைக்கடை பழனி, எஸ், காசி திரவியபுரம் தூத்துக்குடி, எம், மீனுக்ஷிசுந்தரம் செவ் வாய்ப்பேட்டை அக்கிரகாரம் சேலம், ஸி, ஆர், வெங்கடா சலம் ஸ்டாம்ப்வெண்டர் குடியாத்தம், ஆர். கிருஷ்ணமூர்த்தி நியூபேட் பல்மநேர், எஸ், மதுரம் மெர்க்காரா குடகு, கே. ஸ்ரீனிவாஸ ஜயங்கார் ஜெய்ப்பூர் கோராபுட், ஆர் ராமன் ஷோனேகான் விமான நிலயம் நாகபுரி. [மற்றும் பலர்.]

---

இம் மாதத்திய மெரிட் பரிசு—அழகிய வெள்ளி டம்ளர் பெற்ற கலக்டர்

**ஸ்ரீ எஸ். வி. ராகவாச்சாரி Col. 63**
128, பெரிய சௌராஷ்டிரத்தெரு
திருச்சிராப்பள்ளி

---

## நேயர்களின் நல்லுரைகளில் சில.

### 1

**எம். எஸ். பி. அப்துல்கரீம் சேட், பட்டுக்கோட்டை.**

உயர்திரு வரலக்ஷ்மி கம்பனி மானேஜர் அவர்களுக்கு

ஐயா! தங்கள் போட்டி 10-ல் எனக்கு முதற் பரிசு கிடைத்திருப்பதாய் எழுதிய கடிதமும் மணியார்டரும் பெற்றுக்கொண்டேன். மிகவும் சந்தோஷம்.



எம். எஸ். பி.
அப்துல்கரீம் சேட்

தங்கள் போட்டி, பகுத்தறிவுக்கு ஒரு திறவுகோல் எனத்தகும். தமி ழறிந்தவர்கள் யாவரும் இதில் சேர விரும்புவார்கள் என்பதில் ஐய மில்லை.

1-2 வார்த்தைகளிலிருந்து விடை களை வெகு சுலபமாகப் பொறுக்க முடிகிறது. வரலக்ஷ்மிப் போட்டி யானது யாதொரு ஏமாற்றமும் மோசடியுமில்லாமல் மிக நியாய மான முறையில் நடத்தப்படுவதைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சியடை கிறேன். இப்போட்டி மேன்மேலும் ஓங்கி வளரப் பிரார்த்திக்கிறேன் ★

### 2

**ஆர். கிருஷ்ணமூர்த்தி** நியூபேட் பல்மநேர்

நம்பிக்கையான கம்பெனி

வரலக்ஷ்மி ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம்

தங்கள் குறுக்கு வார்த்தைப் போட்டி — 11ல் நான் முதற் பரிசும், மற்ற பரிசுகளில் பல பங்குகளும் பெற் றுள்ள விவர மறிவித்து எழுதிய கடிதம் கண்டு மிக மகிழ்ச்சி யடைந்தேன்.

தங்கள் போட்டி மிகத் தெளி வாகவும் சுலபமாகவும் இருப் பதால் ப்ரதி மாதமும் முதற் பரிசு அடையலாமென்று நம்பு கிறேன். தமிழ் போட்டிகள் எல்லாவற்றிலும் மிகச் சிறந் தது வரலக்ஷ்மிப் போட்டி ஒன்றே என்று புகழப்படுவதில் அதிசயம் எதுவுமில்லை. நேயர் கள் யாவரும் இப்போட்டி ஒவ் வொன்றிலும் தவருமல் கலந்து கொண்டு மேலும் மேலும் வெற்றியடைவார்களாக! ★



ஆர். கே. மூர்த்தி

---








## பொருளடக்கம்

விக்ருதி மலர் 10 | பங்குனி இதழ் 8



குறிப்பு: 'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளி யல்ல.

# காவேரி

விக்ருதி மலர் 10

"சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்—" பாரதியார்

பங்குனி இதழ் 8


## காலமும் கட்டுப்பாடும்

நமஸ்காரம். காலம் விசித்திரமானது; எவ்விதக் கட்டுப்பாட்டிலும் அடங்காதது. இதைத் திருஷ்டாந்தமாக நம் வாழ்க்கையில் பார்க்கலாம்.

பருவமழை இல்லை என்றால் உடனே நமது உணவு பாதிக்கப்படுகிறது; நம் இல்லங்களைப் பிரகாசிக்கச்செய்யும் மின்சார விசையும் குன்றிவிடுகிறது. உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதில்தான் நமது மந்திரிமார்கள் கைதேர்ந்தவர்களாக இருக்கிறார்கள் என்றால், இம் மின்சாரவிசை விஷயத்திலும் அவர்கள் திறன் வெளியாகிறது.

உணவு விஷயத்தில் என்ன நடக்கிறது? எங்கும் பேச்சு மயம். உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற முழக்கம். காலம் இவ்விஷயத்தில் குறுக்கிட்டுச் சதி செய்கிறது என்னவோ வாஸ்தவம். எனினும் முயற்சி போதவில்லை. தீர்க்க தரிசனம் என்பது மறைந்துவிட்டது. நேற்றுவரை மக்களோடு உரையாடிவந்த மந்திரிகள் மக்களுடன் தொடர்பற்ற அந்நிய அரசாங்கம்போல் ஏட்டுச் சுரைக்காயாக அமுல் நடத்திவருகிறது. மக்களுக்கும் அரசாங்கத்திடம் நம்பிக்கை போய்விட்டது. உணவு உற்பத்திக்கெனச் செலவிடப்படும் ஏராளமான பணமனைத்தும் வீண் போகின்றன. உற்பத்தி பெருகவில்லை. புள்ளிகள் என்னவோ பெருகி நிற்கின்றன. எனவே மக்கள் அவதி அதிகரிக்கிறது. மந்திரிகள் உணவு பங்கீடு என்ற பெயரில் உணவைக் குறைத்துக்கொண்டே போகின்றனர். இது ஒரு பக்கம்.

இதன் எதிரொலி மற்றொரு பக்கம். ஒரு சாரார் பணத்தைப் பெருக்கிக்கொண்டே போகிறார்கள். இதற்குக் கவர்மெண்டார் அறியாமையும் கண்ட்ரோலுமே காரணம். தங்களுக்குத் தெரியாத விஷயங்களிலெல்லாம் தலையிட்டு மாட்டிக்கொண்டு விழிக்கிறார்கள். மக்களின் ஜனத்தொகை அதிகரித்துவிட்டதென்னவோ வாஸ்தவம். ஆயினும் ரேஷன்படி பார்த்தால் மக்கள் இரண்டு பங்கு பெருகிவிட்டதாகப் புள்ளிகள். எப்படிச் சமாளிக்கமுடியும்? ரேஷனைக் குறைக்கிறார்கள், உண்மை உணராமல். இதன் காரணமாக மக்கள் கள்ளமார்க்கட்டில் அரிசி வாங்கி உண்ணவேண்டிய நிர்ப்பந்தம். சர்க்கரை, வெல்லம் எல்லாம் இதே கதி. இந்தக் கண்ட்ரோல்கள் இல்லாமலிருந்தால் மந்திரிகள் கொஞ்சம் நற்பெயரெடுக்கலாம். மக்களுக்கு உண்மையிலேயே தீர்க்கமான நன்மை செய்யலாம். அப்படி ஏற்பட்டால் மந்திரிகளுக்கு இவ்வளவு கிராக்கி இருக்காது.

மேட்டூர் அணையில் நீர்மட்டம் போதவில்லை, எனவே மின்சார வெட்டு என்று கவர்மெண்டார் உத்தரவு. இதன் எதிரொலி பஞ்சு ஆலைகள் பூரணமாக வேலை செய்ய முடியவில்லை. உடனே நூல் ரேஷன். திட்டங்களுக்கு என்னவோ குறைவில்லை. இந்த ராஜ்யத்தில் கண்டிராக்டர்களுக்கு அபரிமிதமான லாபம். அதிகாரிகளுக்குச் செல்வாக்கு. லஞ்சப்பேய் தலைவிரித்தாட வசதி. இவ்வளவுக்கும் மக்கள் வசதி அதிகரிக்கவில்லை. கிராமங்களுக்கு எல்லாம் மின்சாரம் புகுத்தப்படல் வேண்டும், சாகுபடி செய்ய, நீர் இறைக்க மின்சாரம். இப்படியாக விஸ்தரித்துக்கொண்டே போகிறது. மற்றொரு புறம் மின்சார விசை வெட்டு. மந்திரிகளின் தீர்க்க தரிசனத்தைப் புகழாமலிருக்க முடியாது போலும்!

இம் மின்சார வெட்டு, **காவேரி**யையும் பாதிக்காமல் விடவில்லை. ஒன்றுவிட்டு ஒரு நாள் கரண்ட் கிடைக்கிறது. எனவே அச்சிடுவதில் தாமதம் ஏற்பட்டுவிட்டது. காலப் போக்கின் விசித்திரத்தில் இதுவும் ஒன்று.

விவசாயத்துக்கு டிராக்டர்கள்! கவர்மெண்டார் இதை மிகவும் ஆதரிக்கிறார்கள். உற்பத்தியைப் பெருக்க இது ஒரு சிறந்த சாதனம்தான். எனினும் கிராமங்களில் உள்ள பெரும்பாலான மக்களுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுமே, அதற்கு

என்ன செய்வது? அதைப்பற்றி அரசாங்கத்தார் சிந்தித்ததாகத் தெரியவில்லை. பஞ்சாலைகளும் நூற்சாலைகளும் ஏற்பட்டதின் காரணமாக லக்ஷக்கணக்கான நெசவாளர்கள் பட்டினியினால் சாகிறார்கள். அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க முடியாத சர்க்கார் ஏன் கிராமங்களிலுள்ள விவசாய மக்களிடையேயும் வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சிருஷ்டி செய்யவேண்டும்? நஞ்சை நிலங்களிலும டிராக்டர் உபயோகிக்கலாம் என்று ஏற்பட்டுவிட்டால் விவசாயத் தொழிலாளிகளின கதி என்ன ஆவது? புதிய நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவர டிராக்டர் உபயோகித்தால் நன்மை பயக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஜனத்தொகை பெருத்த இந்நாட்டில் மெஷின்களை எல்லாத் துறைகளிலும புகுத்தினால்—அதுவும் வெளிநாடுகளிலிருந்து தருவிக்கும மெஷின்களை—நாட்டின் பொருளாதார நிலை என்னாகும்?

கவர்மெண்டார் கொஞ்சம் சிந்தனை செய்து தீர்க்க தரிசனத்துடன் நடப்பார்களானால் காலத்தையும் வெல்லலாம் என்று தோன்றுகிறது. அப்படியே முடியாவிட்டாலும், அதைச் சமாளிக்கவாவது நாம் சக்தி திரட்டிக் கொள்ளலாம் என்பது திண்ணம்.

இன்னுமோர் முக்கியமான விஷயம். நியூஸ் பிரிண்ட் கண்ட்ரோல் ஆர்டர் ஒன்றை மத்திய கவர்மெண்டார் விடுத்துள்ளார்கள். பத்திரிகையை இன்ன விலைக்கு விற்றால் இத்தனை பக்கங்களுக்குமேல் போடக்கூடாது என்ற கட்டுப்பாடுதான் இந்த ஆர்டரின் முக்கிய நோக்கம். அதன்படி பார்த்தால் அநேகமாக நியூஸ் பேபர்கள் அனைத்தும் இப்பொழுது போட்டுவருமபக்கங்களுடனேயே பிரசுரித்து வரவேண்டுமென்றால் விலையைக் கூட்டி விற்கவேண்டும். அதே விலையில் அதே பக்கங்களோ அல்லது கூடுதலான பக்கங்களோ போடக்கூடாது. ஏற்கனவே பத்திரிகைகள் தாமாகவே பக்கங்களைக் குறைத்துக்கொண்டுதான் வெளிவருகின்றன.

பொருளாதார நிலை மக்களிடையே குன்றிவருகிறது. அத்யாவசியமான பொருள்கள் வாங்கவே மக்களிடம் பணமில்லை. அப்படியிருக்கையில் நியூஸ் பேபரின் விலையையும் கூடுதலாக்குவது என்றால் வாசகர்கள் என்ன செய்வார்கள்? அன்றாடச் செய்திகளைப் பிரசுரிக்கும் பத்திரிகைகள் ஒருவாறு இந்நிலையிலிருந்து தப்பிவிடலாம். பத்திரிகை படிக்கும் பழக்கம் வேரூன்றிவிட்டது. அதை மக்கள் எளிதில் விடமாட்டார்கள். ஆனால் மாதாந்தரப் பத்திரிகைகளின் கதிதான் அந்தரத்தில் நிற்கிறது. இவைகளைக் கவர்மெண்டார் விடுத்துள்ள ஆர்டரில் சேர்க்கவில்லை என்பது உண்மை. ஆனால் இப்பத்திரிகைகளுக்கு வேறு விதங்களில் நெருக்கடி. நியூஸ் பிரிண்ட் விலை விஷம் போல் ஏறி நிற்கிறது. அநேகமாக இப்பத்திரிகைகளுக்கு ஷீட்டுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். இதன் விலை எப்பொழுதும் அதிகம். அதிக விலை கொடுத்து வாங்கி இத்தகைய இலக்கியப் பத்திரிகைகள் நடத்துவதென்றால் மிகவும் கடினமாகத்தான் இருக்கிறது. இலக்கியத் தொண்டு புரியும் பத்திரிகைகள் விலையைக் கூட்டி விற்பதிலும் சங்கடம் இருக்கிறது. மக்கள் படும் அவதியில் இத்தகைய பத்திரிகைகளுக்கு அதிக விலைகொடுத்து வாங்கக் கஷ்டபபடுவார்கள்.

எனவே நிலையைக் கூடியமட்டும் சமாளித்துக்கொண்டு அதிகமாகப் பக்கங்களையும் குறைக்காமல் காவேரி, என்றும் வற்றாமலும், அது பாயுமிடமெல்லாம் இலக்கியச் சுவையுடன் பிரகாசித்து, வாசகர்கள் மனம் குளிரும்படி செய்துகொண்டுவரும். உங்களுடைய ஆதரவு மட்டும குன்றாமல் இருக்குமானால் அது பூரணப் பொலிவுடன் என்றென்றும் பிரகாசித்துவரும்.

வாசகர்களுக்கு உற்சாகமூட்ட வேண்டுமென்று ஓர் அதிருஷ்ட நம்பர் பரிசு திட்டமிட்டிருந்தோம். அதனபடி வாசகர்களுக்கு மதிப்புள்ள பல பரிசுகள் வழங்க உத்தேசித்திருந்தோம். அநேக புதிய வாசகர்களும் இதில் ஊக்கம் காட்டினர். ஏஜண்டுகள் தாங்கள் வரவழைக்கும் பிரதிகளை இரட்டித்து ஆர்டர் கொடுத்திருந்தனர். நியூஸ்பிரிண்ட் கண்ட்ரோல் ஆர்டர் குறுக்கிட்டுத் திட்டத்தைப் பாழாக்கிவிட்டது. மத்திய கவர்மெண்ட் தொழில்—இயல் மந்திரி நியூஸ் பிரிண்ட் கிடைப்பது இனி மிகவும் கடினமாக இருக்கும் என்றும் கூறியுள்ளார். இத் தருணத்தில் ஏராளமான பிரதிகளை அச்சிட்டு வாசகர்களுக்கு அளிக்க இயலாதுபோல் தோன்றுகிறது. மாதாமாதம் விற்பனையாகும் பிரதிகளுக்கே போதிய நியூஸ்பிரிண்ட் கிடைக்கவில்லை. புதிய புதிய சந்தாக்களை வேறு சமாளிக்கவேண்டியிருக்கிறது. அப்படியிருக்க இந் நெருக்கடியில் அதிர்ஷ்ட நம்பர் பரிசு திட்டத்தையும் வைத்தால் காகிதப் பிரச்னை சமாளிக்க முடியாமல் போய்விடும் என்று தோன்றுவதால் அத்திட்டத்தை ஒத்திவைக்கவேண்டியிருக்கிறது.

காலம் விசித்திரமானது. அது எவ்விதக் கட்டுப்பாட்டிலும் அடங்காதது என்பதை இதுவும் எடுத்துக்காட்டுகிறதல்லவா. நற்காலத்தைச் சீக்கிரம் எதிர்பார்ப்போமாக. ●




பொதுமக்களின் மனதில் வெறுப்பும் துவேஷமும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது என்பதாகச் சென்ற இரண்டு கட்டுரைகளில் நான் எழுதினேனல்லவா? அந்த விஷயத்தைச் சிறிது விஸ்தரிக்கிறேன். சராசரியாக யார்மீது வெறுப்பு, யார்மீது துவேஷம்? துவேஷம் குடிகொண்டிருப்பது வியாபாரிகளின்மீது, வெறுப்புத் தட்டியிருப்பது உத்தியோகஸ்தர்களின்மீது. பலவித சந்தர்ப்பங்கள் இதற்குக் காரணபூதமாயிருக்கின்றன. முக்கியமானது என்னவென்றால் உணவுப்பொருள்களில் இழிவுபாடுள்ள வஸ்துக்களை வியாபாரிகள் கலப்பதும், அத்தகைய கலந்து கெடுத்தலை அதிகாரத்தில் உள்ளவர்கள் நிறுத்தமுடியாமல் அவஸ்தைப்படுதலுமே. உதாரணமாக, தீபாவளியின்போது வெல்லத்தில் சாணத்தைக் கலந்து சில வியாபாரிகள் விற்றதாகப் பார்லிமெண்டில் உள்நாட்டு மந்திரி ராஜாஜி அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டது. சென்னை நகரத்தில் இந்தக் கொடுமையைக் கவனித்தவர்களும், அனுபவித்தவர்களும் பலர் இருந்தனர் என்று தெரிகிறது. அனுபவித்தவர்களில் பெரும்பாலர் ஏழை மக்களேயானதால் புகார் கிளம்பிய அளவே அடங்கிவிட்டது. "கையும் பிடியுமாகக் கலப்பட வெல்லத்தையும் அதை விற்ற வியாபாரியையும் பிடித்துக்கொண்டுவந்து நிறுத்தினாலல்லவோ நாங்கள் நடவடிக்கையெடுக்கலாம்" என்று சில அதிகாரிகள் சொன்னார்களாம்! இருக்கலாம், சட்டமும் அதுபோல்தான் இருக்கிறது. "ஆயிரம் குற்றவாளிகள் தப்பித்தாலும் பரவாயில்லை; குற்றவாளியல்லாதவன் ஒருவனேனும் தண்டனைக்கு ஆளாகக் கூடாது" என்பதல்லவோ நமது சட்டத்தின் அடிப்படையான கருத்து? ஆகவே தகுந்த ருஜுவுடன் உணவு இழிவுபாடு குற்றங்களைக் கண்டுபிடித்து, குற்றவாளிகளைத் தண்டிப்பது பிரயாசமான காரியம்போல்தான் காணப்படுகிறது.

ஆனால் தர்க்க சாமர்த்தியமாக இதுபோல் சொல்லிவிட்டால் பொதுமக்கள் திருப்தியடைவார்களா? மாட்டார்கள். இழிவுபாடுள்ள பண்டங்களை விற்பனை செய்யும் வியாபாரிகளை அதிகாரிகளிடம் இழுத்துக் கொண்டுபோவது எங்களாலாகும் காரியமா என்பார் சிலர்? சட்டத்திற்குப் பொருத்தமாயுள்ள ருஜுக்களைத் தயாரிப்பது எங்களாலாகுமா என்பார் மற்றும் சிலர்? அவர்களுக்குச் சக்தியுண்டா, அவகாசமுண்டா, செல்வாக்குண்டா? அப்படிப்பட்ட வியாபாரியின் கடையின் எதிரே சென்று திடமாகச் சொல்ல முயன்றால் நான்கு சிப்பந்திகள் கையால் தண்டப் பிரயோகம் பெற்றல்லவோ ஓடவேண்டும்! ஒவ்வொருவரும் இதற்காகக் கங்கணம் கட்டிக்கொண்டு பத்துப்பேர்களை ஜமா சேர்த்துக் கொண்டு போவதா? அபபடிச் செய்ய முயன்றால் கலகக் குழப்பத்தை உண்டுபண்ணியதாக வல்லவோ தண்டனைக்கு ஆளாவார்கள்? முற்றிலும் நடவாத காரியம்!

உளுந்தில் அதுபோன்ற மண்கட்டி, பயற்றில் அதுபோன்ற மண்கட்டி. அரிசியில்

மணிபோன்ற கல், நல்லெண்ணெயில் கடலை யெண்ணெய், நெய்யில் வனஸ்பதி, வெண்ணெயில் மாவு, எள்ளுப் புண்ணாக்கில் கடலைப் புண்ணாக்கு, இதுபோல் பலவிதமாக உணவுப் பொருள்கள் இழிவு படுகின்றன. இத் தொழிலில் ஈடுபடுகிறவர்களுக்கு கோரமான தண்டனைகளும் சட்டத்தில் காணப்படுகின்றன. ஆனால் சட்டத்தை யொட்டி நடவடிக்கை யெடுப்பதுதான் முடியாத காரியமாயிருக்கிறது. இதற்குத் தகுந்த மார்க்கத்தை யூகிப்பது அரசாங்கத்தின் பொறுப்பேயாகும். பொதுமக்களின்மீது பொறுப்பைப் போடுவது அர்த்தமில்லாத காரியம். இந்தக் கொடுமையால் அதிகமாக அவஸ்தைப் படுகிறவர்களில் பெரும்பாலார். ஏழை மக்கள், சிறிய சம்பளக்காரர், செல்வாக்கற்ற குமாஸ்தாக்கள், திக்கற்ற வயோதிகர்கள் போல் பவரே. இத்தகைய இனத்தினர் தினே தினே படும் பாடுகளுடனும், ஏற்றுக்கொள்ளும் பாரங்களுடனுமு, கவலைகளுடனும், சங்கடங்களுடனும், சட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவது முற்றிலும் ஆகாத காரியம். இதை நன்றாக உணரவேண்டும்.

* * *

சில நாட்களுக்குமுன் இங்கிலீஷ் பத்திரிகை ஒன்றில் ஒரு அறிக்கையைப் பார்த்து எனக்கு அடக்கமுடியாத சிரிப்பு வந்தது. தென் இந்திய ரயில்வே பிரதம டிராபிக் மானேஜர் விடுத்த அறிக்கை. "ரயில்வே ஸ்டேஷன்களில் கொடுக்கப்படும் பிளாட்பாரம் டிக்கட்டுகளின் பின்புறங்களில் வியாபார சம்பந்தமான விளம்பரங்களை அச்சிட உத்தேசித்திருக்கிறோம். ஒவ்வொரு வருஷத்திலும் சுமார் பதினைந்து லக்ஷம் டிக்கட்டுகள் விற்பனையாகின்றன. அவைகளின் பின்புறங்களில் சிறிய விளம்பரங்களை வெளிப்படுத்தினல் வியாபாரப் பெருக்குக்கு அளவில்லாத அனுகூலங்கள் ஏற்படும் என்று கருதுகிறோம். இவ்விஷயத்தில் கருத்துள்ளவர்கள் டெண்டர்களை அனுப்பலாம்" என்றே அறிக்கை. இந்த யோசனையைப்பற்றி என்ன அபிப்பிராயப்படுகிறீர்கள்? சற்று நிதானமாக யோசித்துப்பாருங்கள். டிக்கட்டுகளின்மேல் எவ்வளவு மட்டும் அச்சிடக்கூடும்? இரண்டு அல்லது மூன்று வரிகள்! இதுபோல: "முருகனடி மூக்குத் தூளை உபயோகியுங்கள். முருகனடி கம்பெனி, முருங்கைநல்லூர், மண்டூகம் போஸ்டு" அல்லது "மோக்ஷகுண்டம் கூந்தல் தைலமே சிலாக்கியமானது," அல்லது "அறப்புப்பொடி சோப் அற்புதமான சோப்," அல்லது "எருக்கம்பால் லேகியம் எவ்வித நோய்க்கும் சிலாக்கியம்"—இப்படிப்பட்ட விளம்பரங்களைப் பிளாட்பாரம் டிக்கட்டுகளில் அச்சிட்ட மாத்திரத்தில் வியாபார விருத்தி கைகூடிவிடுமா? பிளாட்பாரம் டிக்கட்டுகளை எத்தகைய ஆட்கள் எந்தச் சந்தர்ப்பங்களில் வாங்குகிறார்கள், அவைகளை எத்தகைய சிரத்தையுடன் பார்க்கிறார்கள், எத்தனை நேரம் அவர்களிடம் தங்குகின்றன, அந்த நேரத்தில் விளம்பரங்களை எவ்வளவு நுட்பமாய்க் கவனிக்கக்கூடும், அவ்வளவு கவனம் வியாபார விருத்திக்குப் பயன்படுமா என்பதைச் சற்று நிதானமாகக் கவனித்திருந்தால், ரயில்வே அதிகாரிகள் அறிக்கையை வெளியிட்டிருக்கமாட்டார்கள். வியாபாரிகளும் அவ்வறிக்கையில் உற்சாகம் காட்டமாட்டார்கள். உற்றார் உறவினர், நண்பர்கள் இவர்களை ரயிலேற்றும் பொழுதோ, ரயில் இறங்கி வரும்போது வரவேற்கும்போதோ நாம் பிளாட்பாரம் டிக்கட்டுகளை, அவசர அவசரமாக, வேண்டா வெறுப்புடன் வாங்கி, சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டு ஓடுகிறோம். காரியம் முடிந்தவுடன் அவைகளை டிக்கட் கலெக்டரிடம் கொடுத்துவிட்டு ஓடிவிடுகிறோம். அவைகளை உற்றுப் பார்க்கக்கூட சந்தர்ப்பம் ஏற்படுவது துர்லபம். பிரயாண டிக்கட்டாயிருந்தாலும் சற்று கவனிப்போம்; சரியான ஊருக்கு ஏற்பட்டதா, கட்டணம் எவ்வளவு என்று; பிளாட்பாரம் டிக்கட்டுகளிலோ அந்தப் பிரச்னைகூடக் கிடையாது. என் அனுபவத்தில் ஒரு பிளாட்பாரம் டிக்கட்டைக்கூட நான் நன்றாகக் கவனித்ததில்லை—எல்லோருடைய அனுபவமும் இப்படித்தானிருக்கவேண்டும்—ஆகவே மேற்கூறிய ரயில்வே அறிக்கை எவ்வளவு அசட்டுத்தனமானது என்று ஏற்படுகிறதா? எனினும் இந்த அறிக்கைக்கு ஆசிரியரான ரயில்வே உத்தியோகஸ்தர் அதிமேதாவியென்கிற சிலாக்கியமான பட்டத்தைப் பெற்றிருப்பார் என்றும் இருக்கலாம். நமது அரசாங்கத்தில் தற்கால நிலைமையில் அவரைப்போன்ற மேதாவிகளுக்கே அதிர்ஷ்டம் அடிக்கிறது. அதிர்ஷ்டவசத்தால் அவர் வெகு மேன்மையையும் அடைவார் என்று சந்தேகமில்லாமல் சொல்லலாம்.

* * *

இந்துக்களின் தர்ம சிந்தனையில் சத்திரங்கள் கட்டிவைப்பது என்பது வெகு சிலாக்கியமான காரியங்களில் ஒன்று என எண்ணியிருந்தோம். அதிலும் சத்திரங்களில் சுபகாரியங்களைச் செய்வதற்கு வேண்டிய வசதிகள் செய்துகொடுத்தால்

உன்னதமான தர்ம காரியமாகவே எண்ணினோம். வெகு பட்டணங்களில் இதுபோலச் சத்திரங்கள் விஸ்தாரமாகக் கட்டப்பட்டு, வேண்டிய அளவு பித்தளை, செப்புப் பாத்திரங்களுடன் அமைந்து இருக்கின்றன. கலியாணங்கள் செய்பவர்களுக்கு இவை வெகு அனுகூலமாயிருந்துவருகின்றன. சென்னையில் அநேக சத்திரங்கள் இருக்கின்றன. நடுத்தரமான அந்தஸ்துள்ளவர்கள் சத்திரங்களில் அநேகவித வசதிகளுடன் கலியாணங்களைச் செய்துமுடிக்கிறார்கள்.

சத்திரங்களைச் சுற்றிலுமுள்ள வீட்டுக்காரர்களுக்குக் கலியாண ஸீஸனில் அபரிமிதமான அசந்தர்ப்பங்கள் ஏற்படுகின்றன. ஒருநாள் கலியாணமென்றால், அதற்கு முந்தினநாள் மத்தியான்னமமுதல், அடுத்த நாள் மத்தியான்னம்வரையில், பிர்ம்மாண்டமான ஒலிபரப்பி (Loud speaker) களுடன் இசைத்தட்டு ஸங்கீதம் பேரொலியுடன் வீசப்படுகிறது. அக்கம் பக்கத்திலிருப்பவர்களுக்குத் தலைமுச்சு வேதனை சொல்லமுடியாதது. கலியாணத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு ஓசையால் திருப்தியிருக்கலாம். அடுத்து வசிக்கும் வாசிகளுக்கு அப்படியிருக்குமா? அதிலும் ஸங்கீதம் எப்படிப்பட்டது? செவிக்கு நாராசம்போன்ற சினிமா ஸங்கீதமே. காதுகளைத் துளைத்து, கண்களைச் சிவக்கடித்து, மண்டையிடி பிரபலிக்கும்படியான இசை யென்னும் கோர ஓசை! இரவுகளில் 12 மணி வரையிலும் இந்த ஓசை; காலையில் 4 மணிக்கே திரும்பவும் துவஙகுகின்றன. குழந்தைகளுடைய தூக்கம் குட்டிச்சுவராய்ப் போம்; இரண்டுபேர் வீட்டுக்குவந்தால் பேச முடியாது; அமைதியாகப் படிக்க முடியாது; இளைப்பாற முடியாது. சத்திரத்தில் வைபவத்தை நடத்துபவர்களோ வெளியேயிருந்து வந்தவர்களா யிருப்பார்கள். அவர்களுக்கு எள்ளளவேனும் நாணம், சங்கோஜம் இராது. அக்கம் பக்கத்திலிருப்பவர்கள் எக்கேடு கெட்டால் அவர்களுக்கென்ன? இரண்டு நாட்கள் இருந்துவிட்டு ஓடிவிடப் போகிறவர்கள். குமமாளம் போட்டுக் கொண்டாடுவதற்கு வேண்டியே வந்திருப்பவர்கள்.

கலியாணங்களைச் செய்பவர்கள் தங்களைப் பொறுத்தவரை ஸங்கீத முழக்கத்தை வைத்துக்கொண்டு, சுற்றுவட்டாரத்திலிருக்கப்பட்டவர்களுக்கு இம்சையில்லாமல் நடந்துகொள்ளுவோமே யென்கிற கருத்துடன் நடந்து கொள்ளலாகாதா? விஞ்ஞானத்தால் உண்டான சம்பத்துக்களில் ரேடியோவும் அதைச் சேர்ந்த கருவியான ஒலிபரப்பியும் வெகு உன்னதமானவைதான. ஆனால் அவைகளைவிட ஒரு மடங்கு உன்னதமானது அவைகளை நிறுத்துவதற்கு ஏற்பட்ட ஸ்விட்சை அமுக்கியமாத்திரத்தில் நிறுத்தும் கண்ட்ரோல் அல்லவா? ஆம்! ஆனால் அடுத்த வீட்டுக்காரன் திருப்பிவிட்டு வேடிக்கை பார்க்கும் கருவியை நம்மால் நிறுத்த முடியவில்லையே! இதுதான் ஒரு பெரிய குறை. இந்தக் குறையையும் தீர்த்துவைக்க விஞ்ஞான சாஸ்திரிகள் ஏதாவது ஒரு கருவியைக் கண்டுபிடித்தால் எல்லோருக்கும் பயன்படும்.

இதனிடையில் சத்திரங்களில் ஒலிபரப்பிகள் உபயோகிக்கப்படலாகாது என்றும், அப்படி உபயோகப்பட்டால் அடுத்து இருப்பவர்களின் அனுமதி வேண்டுமென்றும், ஒலிபரப்பி ஒன்றுக்கு ரூபாய் 500 லைஸன்ஸ் கட்டணம் கட்டவேண்டுமென்றும் உத்தரவிட்டால் நன்றாயிருக்கும். ஆனால் தற்காலத்தில் உள்ள பணப் பெருக்கை உத்தேசித்தால், இந்த 500 ரூபாய்க்கும் தயாராயுள்ளவர்கள் அநேகர் இருப்பார்கள் என்றே சொல்லலாம்!

* * *

**ப**தினைந்து வயதுள்ள ஒரு பையனை ஒரு நாள் தமாஷாக ஒரு கேள்விகேட்டேன். "உன் தகப்பனார் ஒருவருக்கும் பயப்படாதவரும், ஒருவரிடமும் தாக்ஷணியம் காட்டாதவருமாயிற்றே, இப்பொழுதும் அப்படியேயிருந்து வருகிறாரா" என்றேன். "இல்லை, மாறிவிட்டார்; மூன்று தரத்தாரிடம் அவருக்கு அபரிமிதமான பயம் ஏற்பட்டிருக்கிறது" என்றான். "யாரார்?" எனக்கேட்கவே,

(1) ரேஷன் கடைக்காரன்—அவனுடைய அனுக்கிரஹத்தால்தான் நாங்கள் பாதி வயிறு சாப்பிடுகிறோமாம்.

(2) துணிக்கடைக்காரர் — அவருடைய அனுக்கிரஹத்தால்தான் எங்களுடைய மானம் தங்குகிறதாம்.

(3) முனிசிபாலிடி குழாய்க்கார மேஸ்திரி, அவருடைய அனுக்கிரஹத்தால்தான் எங்கள் நெஞ்சில் கொஞ்சமாவது ஈரமிருக்கிறதாம்!

உங்களுடைய அனுபவமும் அப்படித்தானே?




# வஸலமீரா

எம். எஸ். கமலா

அன்று கார்த்திகைமாத முழுமதி விண்ணில் விளையாட ஆரம்பித்ததோ என்னும்படி ஒருபுறம் வெள்ளி மலைக்குவியல்கள்போல் விரியும் வெண்மேகங்களினருகில், நீல ஆகாயத்தில் தன்னிடம் கண்ணாமூச்சியாடும் தாரகைகளைப் பார்த்து மெள்ள மெள்ள நகர்ந்துகொண்டிருந்தான் வெண்மதியோன்.

இயற்கையின் இந்த அற்புத விளையாட்டைக் கண்டு களித்தபடி தம் சப்பிரமஞ்சத்தில் புரண்டு கொண்டிருந்த போஜ மஹாராஜன் மனதில் திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. சந்திரனிடம் களங்கமிருந்தும், அவன் தூய வெண்மை நிறமும் வெள்ளி ஊற்று நிலவும்தானே ஜனங்களைக் கவருகின்றன. அதுபோல் நம் பத்தினி......" என்று தோன்றியதும்,

"சீச்சீ! என்ன அஸம்பாவிதமான எண்ணம். தேவகணமான சந்திரன் எங்கே? மானுஷகணமான இவள் எங்கே? யக்ஷ ராக்ஷஸ, கின்னர கிம்புருஷர்களுக்கிடையேதான் இம்மாதிரி பேதமில்லை. நாம்......" என்று பெருமூச்சுவிட்டபடி விண்ணைப் பார்த்தார். அவர் உடல் அனலில் வெந்தாற்போல் எரியத் தொடங்கியது. படுக்க மனம் ஒப்பவில்லை. எழுந்தார். தம் அரச உடைகளைக் களைந்து தூர எறிந்தார். சாதாரண கூலியாளைப்போல் வேடம் பூண்டார். தம் அரண்மனையைவிட்டு வெளியில் வந்தார். வந்தவர் சற்று நின்று நாற்புறமும் பார்த்துக்கொண்டு அந்தப்புர வாயிலுக்கருகிலுள்ள நந்தவனக் கதவைத் திறந்துகொண்டு வெளியேற, பரபரவென்று நடந்தார். அவர் நடையை இருவர் பேசும் குரல் தடைகட்டி நிறுத்தியது. விசை நிறுத்தப்பட்ட இயந்திரம்போல் நின்றார்.

"என்ன சொன்னீர்கள்? தேவி! நீங்கள் சொல்லவந்ததை முழுவதும் சொல்லுங்களேன்"

அன்பு அதிகமாய் ஆழ்ந்துவிட்டால்

"..................."

"அம்மணி: சொல்லக்கூடாதா? உங்கள் கஷ்டத்தை ஏற்கச் சக்தியற்றவளாயினும் உங்கள் சங்கடச் சொற்களையாவது கேட்டு உங்கள் துயரில் பாதியைப் பகிர்ந்துகொள்ளக்கூடாதா?" என்றாள் கெஞ்சியபடியே.

"வஸந்திகா! அதற்கு............தன் அன்பிற்குத் தாக்குதலேற்பட்டுவிடுமோ? ஏற்பட்டுவிடாதோ? என்ற ஒருமின்னல் தோன்றத்தான் தோன்றும். அதன் தன்மை அப்பேர்ப்பட்டது. அதைத் தவறாக நினைக்கக்கூடாது. அன்பை அழைத்தா சேர்த்துக்கொள்கிறோம்! அது கடவுளின் எண்ணத்தால் தானாக வளர்வது. அதைத் துண்டிக்க முடியாது. தன்னையறியாது தன் அன்பு பதுங்கிய இடத்தில் அது பதுங்கி அல்லல் படுத்தும். விதி எவரையும் விடாது. சிலரைச் சிரிக்க வைக்கும்; விதியே சிலரைக் கண்ணீர் வடிக்கச் செய்யும். மற்றும் சிலரைப் பைத்தியமாக்கிப் பதற அடிக்

கிறது. அதன் முன் ஒவ்வொருவரும் ஒரு சிறு அணுவுக்குச் சமானம். இந்த ரகசியத்தை அறிந்தால் மானிட உள்ளத்திற்குத் துன்பம் குறையும்'' என்றாள்.

''தேவி, தாங்கள் உண்மையில் மனிதர் வாழும் உலகில் பிறந்த பிரத்தியக்ஷ பெண் தெய்வம் தான். நீங்கள்தான் இம்மாதிரி பொறுமையாக''

''பொறுமை சாலவும் சிறந்தது வஸந்தி. அதைக் கடைப்பிடிப்பதுதான் மிகவும் கஷ்டம். அன்பின் அல்லலில் சிக்குண்டவர்கள் அதைத்தான் முதலில் இழக்கிறார்கள். அதனால் ஏற்படும் துடிப்பு, மனக்கொதிப்பு, வேதனை, வெறி இவைகளை அனுபவிப்பவர்கள்தான் அறிவார்கள். எந்த நோய்க்கு ஆளாக்கிடினும் அன்புநோய்க்கு ஆளாக்கி அருகதையற்றவராய்ச் செய்து ஆட்டிவைக்கக் கூடாது. அப்படி ஆட்டி வைத்தாலும் அத்துன்பத்தைச் சகிக்கக்கூடிய சகிப்புத் தன்மையையும், சாந்தத்தையும் கடவுள் அளிக்கவேண்டும்.'' என்று கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

''அம்மணி, நீங்கள் தைரியத்தைக் கடைப்பிடித்து, உங்கள் மனதைப் பண்படுத்திக் கொண்டிருந்தாலும் எங்கள் மனம் பொறுக்கவில்லை'' என்றாள். அந்த இரு பெண் குரல்களிலும் சோகத் துடிப்புத் துடிப்பதைப் போஜர் அறிந்தார். அதற்குமேல் அங்கு நிற்காமல் பரபரவென்று நடந்தார்.

* * *

நடந்தார், நடந்தார், முன்பின் நடந்தறியாத சந்து பொந்துகளெல்லாம் நடந்தார். ஊர் கோடியிலிருக்கும் சேரி யருகில் வந்துவிட்டார். இத்தனை நேரம் பருகிய காற்றிற்கும் இச்சமயம் பருகும் காற்றிற்கும் பேதம் தென்படவே திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தார். தம் கண்ணெதிரில் சில அடி தூரத்தில் சேரி. அந்தச் சேரியின் அழுக்குத் தண்ணீரும், குப்பை கூளமும் கெட்ட வாசனையை எழுப்பிக்கொண்டிருந்தன. அந்தக் குப்பை மேட்டிற்கப்பால் ஒரு வயது நிரம்பிய கிழவன் மூப்பின் அசக்தியைத் தாளாது குப்பை கூளத்தைப்பொசுக்கிக்கொண்டு அந்தக் கணப்பில் கைகால்களுக்குச் சூடேற்றிக்கொண்டே தன்னைச் சுற்றிலும் அமர்ந்திருந்தவர்களைப் பார்த்து,

''காலத்தேர் எப்பவும் ஒருபோல் ஓடுமின்னு நினைச்சு நாம் சந்தோசமா இருப்பது தவறு. மனுச சாதிக்கு மட்டற்ற மகிச்சி என்னிக்கும் சாசுவதமில்லே. எதிர்பாராமெ அதிட்டம் கை கூடும். அதில் அன்பு வலிமை பெறும். அன்பு வலிமை அதிகமாக ஆக ஆனந்தத்துக்கு ஆட்டம் ஏற்படுகிறது. மெதுத் தன்மை மறைந்து முரட்டுத் தனமும் கலக்கமும் அதிகமாகிறது.'' இதைக் கேட்ட அரசனின் முகம் கறுத்தது; கால்கள் தள்ளாடின. மூளை சுழன்றது. தாம் எதைப் பற்றி இவ்வளவு நாளாய்ச் சிந்தித்துக்கொண்டிருக்தாரோ அதைப்பற்றிய வினாவிற்குப் பதில் கிடைத்தாற்போலிருந்தது. அங்கிருந்து அதிவேகமாய் வீட்டின்புறம் திரும்பி நடந்தார். அவர் மூளை சென்ற இரண்டாண்டுகளுக்கு முன்போய் நின்றது.

அன்று கலாதேவியின் பக்தர், கவிதாதேவியின் காதலர், வாணியின் அருள் பெற்றவர்களுக்கு வாகையுடன் வாரி, பொன்னையும் மணியையும் அளிக்கும் போஜராஜனின் சபை கலகலப்புடன் கணக்கற்ற கலைஞர்களுடன் நிறைந்திருக்கிறது. ஒவ்வொருவர் கண்களிலும் ஏதோ ஒருவிதத் துடிப்பு துள்ளிக்கொண்டிருந்தது நன்கு தெரிந்தது. சிங்காதானத்திற்கருகில் ஒரு சாய் மானில் மூடப்பட்ட சித்திரமொன்று வைக்கப் பட்டிருந்தது. ஜனங்களின் கண்கள் எல்லாம் அந்தப் படத்தின்மேல் பதிந்திருந்தன. ஜனசமுத்திரத்தில் எழும்பிய பேச்சலை எத்தனை அடக்கினாலும் அடங்காது அமைதியற்ற தன்மையை அதிகமாக்கிக்கொண்டிருந்தது.

ஸ்ரீ. ஸ்ரீ. ராஜராஜ, ராஜகம்பீர, ராஜபராக்கிரம, ராஜசேகர, கவிதாபோஷ, காருண்ய பூப போஜமஹாராஜருக்கு ஜே! என்ற உரத்த குரல் இமைப் பொழுதில் அத்தனை ஜனங்களையும் மந்திரசக்தியில் கட்டுண்டாற்போல் வாய் பூட்டிட்டு மோன நிலையிலிருத்தியது. சக்கரவர்த்தி போஜர் தம் கம்பீரப் பார்வையை நாற்புறமும் வீசியபடியே காவ்ய சக்கரவர்த்தி காளிதாசருடன் தோளுக்குத் தோள் இணைந்து உரையாடியபடியே சிங்காதனத்தில் சென்றமர்ந்தார். அவர் அருகிலுள்ள மற்றொரு ஆசனத்தில் காளிதாஸ் கற்பனைக் கனவில் களியாட்டமாடிக்கொண்டிருந்த தம் கண்களை மூடப்பட்டிருந்த சித்திரத்தின் மேல் செலுத்தினார். அந்தச் சித்திரத்தினருகில் அடக்க ஒடுக்கமாய்க் கைகளைக் கட்டிக் கொண்டு சித்திரக்காரன் நின்றிருந்தான். அரசர் சித்திரக்காரனின் முகத்தைப் புன்முறுவலுடன் பார்த்தார். சித்திரக்காரன் சித்திரத்தின்மேல் மூடப்பட்டிருந்த திரையை விலக்கினான்.

''அற்புதம்'' என்று ஜனங்கள் ஆனந்த ஒலி எழுப்பினர், அரசன் முகம் பெருமையாலும் ஆச்சரியத்தாலும் மலர்ந்தது. மதயானைபோல் எழுந்து வந்து படத்தின்முன் நின்றார் அரசர். அவர் முகம் விஷப்பூண்டால் தீண்டப்பட்டது போல் கறுத்தது. கண்கள் கோவைப்பழம் போல் சிவந்தன. சித்திரக்காரனைப் பார்த்தார். படத்தின் இடது துடையில் தென்படும் மச்சத்தைச் சுட்டிக்காட்டி ''இம்மாதிரி ஏன் வரைந்தாய்?'' என்று கேட்டார்.

சித்திரக்காரன் நடுங்கியபடியே நேற்றைக்கு முன் தினம் இந்தப் படத்தை நான் சீர்திருத்திக் கொண்டிருந்தபோது என்னையறியாது கையிலிருந்த சலாகை கீழே விழுந்தபோது அதிலிருந்த 'மசி' இந்த இடத்தில் தெறித்துவிட்டது. அதைத் துடைக்க முயலும்போது நம் அரசாங்க கவிஞர் காளிதாஸர் வந்து, ''அதைத் துடைக்காதே! அந்த இடத்தில் மஹாராணியாருக்குப் பிறவி மச்சம் இருக்கவேண்டும். அதனால் தான் அந்த ஒரு இடத்தில் குறிப்பாய் அது பட்டிருக்கிறது'' என்றார். அவர் சொல்லை மீறி அதைத் துடைத்தால் படமே கெட்டுவிடுவதுமன்றி இன்று உங்கள் உத்தரவுப் பிரகாரம் சித்திரத்தை

அவையில் கொண்டுவர முடியாதென்று அறிந்ததால் அப்படியே கொண்டுவந்தேன்" என்ருன். போஜனின் மனம் கொதித்தது. அங்கங்கள் பதறின. சிறுவயதிலிருந்தே வாழ்வின் சிக்கலைத் தாமொருவராகவே விடுவித்துக்கொண்டு பழகியவராதலால் சித்திரக்காரனுக்கு அளிக்கவேண்டிய பரிசையளித்துவிட்டு மௌனமாய் எழுந்துசென்ருர். அவை கலைந்தது காளிதாஸ் தம்வீட்டிற்குள் நுழைவதற்குமுன் அரசாங்க சேவகன் அரசர் அளித்ததாக முத்திரை முடங்கல் ஒன்றையளித்துச் சென்ருன. அதில்,





"கவி!"

உங்கள் கவிதையின் திறமைக்கு என்றும் தலை வணங்குகிறேன். எனினும் உங்களின் விஷய லோலத்வத்தை வெறுக்கிறேன். என் பட்ட மகிஷியின் உடலிலிருக்கும் பிறவி மச்சத்தை...... ஹா: எழுத என் விரல்கள் மறுக்கின்றன. உம்மைச் சிரச்சேதம் செய்யலாம். நண்பனை...... உலகம் போற்றும் கவிஞரைக் கொலைசெய்து நான் வெட்டியானைவிட மோசமானவனாக இருக்க விரும்பவில்லை. நாளை உதய சூரியனை நீங்கள் என் நாட்டில் பார்க்கக்கூடாது என் அரசின் எல்லைக்குள் உங்கள் பாதச் சுவடு தென்படக் கூடாது உங்கள் முகம் இனி தென்படக் கூடாது

கவிதை மோகத்தில் கசடனுடன் நட்புக்
கொண்ட கடையோன்
போஜன்"

* *

மனைவி முகத்தைப் பாராது மஹா யோகிபோல் தம் அரண்மனையில் காவிய ஆராய்ச்சியி லீடுபட்டிருந்தார். அவரைக் களிப்பிலாழ்த்தும் கவிஞனும், காதலியும் அருகிலில்லாது வாழ்க்கை அவருக்கு வெறிச்சென்றிருந்தது. விரைவில் வானப்பிரஸ்தம் செல்லவேண்டி, தம் அருமந்த மைந்தனை ராஜ்ய விஷயங்களி லீடுபடுத்தினர்.

காளிதாஸ் நகரை விட்டுச்சென்று ஆறுமாதங் களாயின. இளவரசன் தன் பரிவாரங்களுடன் வேட்டைக்குச் சென்றான். சென்றவன் வழிதவறி இரண்டு நாட்களுக்குப்பின் நகருக்குள் புகுந் தான். யார் என்ன கேட்டிடினும் "ஸஸேமிரா!" என்று ஒரு சொல்லையே சொல்லிக்கொண்டிருந் தான். அரசருக்கு அங்கம் தளர்ந்துவிட்டது. தம் மைந்தனை இயற்கை நிலைக்குக் கொண்டுவரு பவர்களுக்கு ஏராளமான பொன்னும் மணியும் கொடுத்துதவுவதாக நாடுநாடாய்ப் பறைசாற்றி னர் நாளொரு மந்திரவாதி பொழுதொரு இயந்திரம் கட்டுபவர்களாய், போஜராஜன் சமு கத்துக்கு வந்து சென்றுகொண்டிருந்தனர். அவர் மனம் வெதும்பி வேதனையிலாழ்ந்து தவித்துக் கொண்டிருந்தது. அவர் துக்கத்தைப் பகிர்ந்து கொள்ள காதலியும் அருகில் இல்லை. ஆருயிர் நண்பனும் இல்லை. அன்பு மைந்தனோ............ இம்மாதிரி சஞ்சலக்கீற்றின்மேல் அவர் வாழ்க்கை ரதம் கடையாணி கழன்றுவரும் தறுவாயில் கட கடவென்று நடந்துகொண்டிருந்தது. அப்படியே சிந்தனையிலாழ்ந்திருந்தார். திடீரென்று வான முகட்டில் கிழக்குப்புறமாய் ரத்த ஆறு பாய்வது போல் அருணன் தோன்றுவது தெரியவே வேக மாய் அடி எடுத்துவைக்க ஆரம்பித்தார். அச்சம யம் எங்கிருந்தோ,

"அஹிம்ஸா பிரதம புஷ்பம்
புஷ்ப மிந்திரிய நிக்ரஹ:
சர்வபூத தயா புஷ்பம்
க்ஷமா புஷ்பம் விசேஷத:
சாந்தி புஷ்பம் தப: புஷ்பம்
தியான புஷ்பம் ததைவச்ச
சத்யமஷ்டவிதம் புஷ்பம்
சம்போ: பிரீதிகரம் பவேத்"

என்று கேட்டது. அந்தச் செய்யுளில் புதைந்திருக்கும் அற்புத தத்துவம் அவரை மகிழ்வித்ததெனினும் அவர் உள்ளத்தை நெகிழ்வித்தது. தாம் குற்றவாளியோ என்று கேட்டுக்கொண்டார். ஒருநாளுமில்லாது தம் மனம் அன்று ஏன் அத்தனை சித்திரவதைக்கு ஆளாகவேண்டுமென்று நினைத்தபடியே அரண்மனைக்குள் நுழைந்தார். "ஸஸேமிரா ! ஸஸேமிரா!" என்று கூவிய படியே அவர் மைந்தன் அவர்முன்வந்து நின்று அவரைப் பரிதாபமாய் பார்த்தான். அவர் 'கடவுளே !' என்று வாய்விட்டுக் கதறினர். தந்தையின் சோகக் குரலைக்கேட்ட மைந்தன் அவர் கையைப் பற்றிக்கொண்டான். இருவரும் அங்கேயே அமர்ந்தனர்.

* * *

விடிந்தது. அப்பொழுதும் அவர்களிருவரும் அப்படியே சுவரில் செதுக்கிய சிலைகள் போல் அமர்ந்திருந்தனர். "மகாராஜ்!" என்ற குரல் அரசரை உணர்ச்சிபெறச் செய்தது. "என்ன?" என்ருர் தம்முன் கரங்குவித்து நிற்கும் சேவகனைப் பார்த்து.

"யாரோ ஒரு கிராமப்பெண் வந்திருக்கிருள். இளவரசரைக் குணப்படுத்துவதாகச் சொல்கிருள்"

"மாபெரும் தேவதா உபாஸிகள் எல்லாம் பார்த்துவிட்டனர். மந்திரக்காரர்களும், யக்ஷிணிகளும்கூடப் பார்த்தாயிற்று, குறவர்களும் மறவர்களும்கூடக் குறிபார்த்துச் சொல்லியாகிவிட்டது. இவர்களால் முடியாதது கிராமப் பெண்ணல் ஆகப்போகிறதா? தலையெழுத்து, பணத்தாசை பிடித்த ஒவ்வொருவரும் இந்தச் சாக்கிலாவது அரண்மனையைப் பார்த்துவிட்டு, சொற்ப சன்மானத்துடன் திருப்திப்பட வழியாகிவிட்டது. கவிஞர்களைப் போஷித்து,கலாதேவியைச் சேவித்த கரங்கள் கசடர்களை வரவேற்று உபசரிக்கப் பயன்படுகின்றன. விதியே! உன் திருவிளையாடலில் சிக்காதவர்களில்லையல்லவா?" என்று பெருமூச்சுவிட்டபடியே மகனைப் பார்த்தார். அவருக்குத் துக்கம்பீறிட்டுக்கொண்டு வந்தது. "யாரும் என் மகனைச் சரிப்படுத்தவேண்டாம், விதி அவனைச் சரிசெய்துவிட்டது என்று சொல் போ!" என்ருர் கடுமையாய்.

சிறிது நேரத்தில் அதே சேவகன் மறுபடியும் வந்து, "அந்தப் பெண்ணுக்குப் பொன்னும் புகழும் ஒன்றும் வேண்டாமாம். அவளால் முடிந்தால்தான் அவள் இம்மாதிரி விஷயங்களில் தலையிடுவாளாம். அவள் வந்து ஒரு கேள்வி கேட்பாளாம். அதிலேயே நம் இளவரசர் குணப்படுவதும் படாததும்தெரிந்துவிடுமாம்" என்ருன். அரசர் வேண்டா வெறுப்புடன் தலையசைத்தார்.



அரசருக்கு மந்திரக்காரர்கள் முகத்தைப் பார்த்துப் பார்த்து வெறுத்துவிட்டது. அவர்கள் செய்யும் அட்டகாசத்தைக் காணச் சகியாது தனியறைக்குச் சென்றுவிடுவார். இன்றும் அதுபோல் எழுந்து செல்லும்போது, வாய் நிறைய வெற்றிலையைக் குதப்பிக்கொண்டு, கூந்தலைக் கோதி இடப்புறமாய்க் கொண்டைபோட்டு, அக்கொண்டைக்குள் செவ்வரளியும், மருக்கொழுந்தும் திணித்துக்கொண்டு, நாட்டுச் சேலையைக் கணுக்காலுக்குமேல் கட்டியவள் நாணிக் கோணி அரசரின் முன்வந்தாள். அவள் செம்பட்டை மயிரையும், சிவந்த மேனியையும், ரத்தச் சிவப்புச் சேலையையும், செவ்வரளிப் பூவையும் செஞ்சிவப்பு உதட்டையும் கண்டு அதிர்ந்து நின்றார். அவள் அவரை வணங்கி, அரசகுமாரன் முன்வந்து அமர்ந்தாள். ஐந்து நிமிஷத்தில் அந்தப்புரத்தில் இச்செய்தி பரவி, பணியாட்களெல்லாம் அந்த மந்திரக்காரியைப் பார்க்க ஓடிவந்தனர். அவள் தன் சிவந்த கண்களால் நாற்புறமும் பார்த்துக் கொண்டே இளவரசனின் முன் அமர்ந்து கண்களை மூடி, கடவுளைத் தியானம் செய்து கண்களைத் திறந்து, "இளவரசே, தங்கள் பெயர் என்ன?" என்றாள்.

"ஸஸேமிரா" என்றான்.

"உங்கள் பெயர் ஸஸேமிரா. உங்க பாட்டன் பெயர்?"

"ஸஸேமிரா!"

இப்படி அந்தக் கிராமப் பெண் கேட்ட ஐந்நூறு கேள்விகளுக்கும் "ஸஸேமிரா" என்று சொல்லவே அவள்,

"ஸத்பாவம் பிரதிபன்னனும், வஞ்சனே கிம்விதந்ததா?
அங்கமாருஹ்ய ஸுப்தானும் அனனே கின்ன பௌருஷம்."

"சாதுக்களிடம் வஞ்சனை ஏன் பிறந்தது? மடியில் படுத்திருப்பவனைக் கொல்லப் பார்ப்பதா உத்தம லக்ஷணம்?" என்று கேட்டாள். அங்கே கூடி இருந்தவர்களனைவருக்கும் சிரிப்பு வந்துவிட்டது. அதை மகா கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டனர். ஆனால் இளவரசன் அந்தக் கேள்வியை ஏற்றுக் கொண்டவன்போல்,

"ஸேமிரா" என்றான். அனைவருக்கும் ஆச்சரியமாகிவிட்டது. ஸஸேமிரா என்று சொல்லிக் கொண்டிருந்தவன் ஸேமிரா என்றதைக் கேட்டு, கிராமப் பெண்ணின் முகம் மலர்ந்தது. அடுத்து,

ஸேதுந்த்ருஷ்ட்வா ஸமுத்ரஸ்ய, கங்கா ஸாகர ஸங்கமம்,
பிரம்மஹத்யா ஸமுச்சேதே மித்ரத்ரோகோ நமுச்சதே!

"ஸேதுவில் ஸ்னானம் செய்தாலும், கங்கை கடலில் சந்திப்பதைப் பார்த்தாலும் நண்பனை வஞ்சித்தவனுக்கு மீட்சி கிடையாதென்கிறது. அதே பிரம்மஹத்தி செய்தவனுக்குக்கூட மீட்சி கிடைக்குமாம்" என்று சொன்னதும், இளவரசன்,

"மிரா" என்றான். கிராமப்பெண் தொடர்ந்து சொல்லலுற்றாள்:

மித்ரத்ரோகி க்ருதக்னச்ச, யஸ்துவிச்வாஸ காதுக:
த்ரயஸ்தே நரகம்யாந்தி, யாவச் சந்த்ர திவாகரௌ.

"நண்பனை நன்றியற்று வஞ்சித்தவனுக்குச் சூரிய சந்திரர்களிருக்கும் வரை நரகத்திலிருந்து மீட்சி கிடையாது" என்று.

"இளவரசே! என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டாள் மிடுக்காய்.

இளவரசன் "ரா" என்றான். அங்கிருந்தவர்களில் ஒருவன் ஓடிப்போய், போஜ ராஜனிடம் "அரசே! அந்தப் பட்டிக்காட்டுப் பெண் பலே கெட்டிக்காரி. ஏதோ மந்திரம் சொல்கிறாள். அவள் ஒரு மந்திரம் சொன்னால் நம் இளவரசர் ஒரு எழுத்தைச் சொல்லுவதில்லை. இப்பொழுது "ரா" என்ற கடைசி எழுத்தைத்தான் சொன்னார். அதற்கு அவள் மந்திரம் சொல்லுவதற்குள் உங்களை அழைத்துப்போக வந்தேன்" என்றான் உற்சாகத்துடன். அரசனும் ஆச்சரியத்துடன் தன் மகனிருக்கும் இடத்திற்குச் சென்றார், அச்சமயம் அவள்,

"ராஜன்போ தவபுத்ரஸ்ய, யத்கல்யாணி மிச்சஸி
தானம் தேஹி த்விஜாதிப்யோ, வர்ணனும் பிராம்மணோகுரு:"

"அரசகுமாரா! பிராமணர்களுக்கு ஏராளமாகத் தானதர்மம் செய்தால் உனக்கு மீட்சி கிடைக்கும்" என்றாள். இளவரசன் கண்ணீர் சோர அவள் காலில் வீழ்ந்து "தேவி! என்னைக் காப்பாற்றினீர்கள். உங்களுக்கு என் செய்கை எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான்.

"நீ என்ன செய்தாய் குமாரா?" என்று கேட்டுக்கொண்டே அரசன் அவ்விடம் வந்து நின்றார்.

"அப்பா! நான் அன்று வேட்டையாடிக் கொண்டே வெகுதூரம் அடர்ந்த காட்டிற்குள் நுழைந்துவிட்டேன். இருண்டுவிட்டது. என்னுடன் வந்த பரிவாரங்களெல்லாம் பின்தங்கி விட்டன. கையிலிருந்த அம்புகளெல்லாம் ஆகிவிட்டன. வெறும் வில்லை ஏந்தி வழி தெரியாமல் வெளியில் வர முயன்றுகொண்டிருந்த போது முன்புறத்திலிருந்து ஒரு புலி கரடியைத் துரத்திக்கொண்டு கர்ஜித்து வருவது தெரிந்தது. உயிரைக் காப்பாற்றிக்கொள்ள அருகிலிருந்த மரத்திலேறிக்கொண்டேன் அவசர அவசரமாய். என்னைத் தொடர்ந்து என் வில்லையும், பின்புறம் தொங்கும் என் ஆடையையும் பிடித்துக்கொண்டு என் பின்பே அந்தக் கரடியும் மரத்திலேறிவிட்

டது. எனக்கு மிகவும் பயமாய்ப்போய்விட்டது, அந்தக் கரடி, "மனிதா, பயப்படாதே: நான் உன்னை ஒன்றும் செய்யமாட்டேன். என்னைக் கீழே தள்ளிவிடாதே: கீழே இருக்கும் புலி உனக்கும் எனக்கும் சத்துரு. அது இப்பொழுது நம்மில் யாரையாவது தின்றுவிட்டுத்தான் போகப் பார்க்கிறது. அதனால் நானும் உன்னுடன் இந்த மரத்தில் ஒன்றிக்கொள்கிறேன்" என்றது. என் மனம் பயத்தால் திக்திக்கென்று அடித்துக் கொண்டது அந்தக் கரடி என்னைப் பார்த்து, "நீ என்னை நம்பவில்லை என்பது உன் முகத்தைப் பார்த்தால் நன்கு தெரிகிறது. நீ வசதியாய் உட்கார். நான் உன் மடியில் படுத்துக்கொள்கிறேன். அப்பொழுது நான் உன்னை ஒன்றும் செய்ய முடியாதல்லவா?'' என்றது. நானும் அதற்கு அபயமளித்து அதன் சொற்படி நடந்தேன் ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் கீழிருந்த புலி, என்னை நோக்கி, "அரசனானால் என்ன? ஆண்டியானால் என்ன? மனித புத்தி தானே! எனக்குப் பயந்து பரத்திலேறிக் கொண்டாயே! அங்கே பயமற்று இருக்கிறாயா? மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டாற்போல் நர மாமிஸபக்ஷிணியை மடியிலேயே வைத்துக்கொண்டிருக்கிறாயே: நான் உன்னையும் கரடியையும் விட்டுச் சென்றாலும் அது உன்னைத் தின்றுவிடும். என் பசியைத் தடுத்துக்கொள்ள முடியவில்லை. கடைசியில் என் இரைக்கு அடைக்கலமளித்து என்னைப் பசியுடன் விரட்டி, நீ அதற்கு இரையாகப் போகிறாய். வேண்டாம். என் சொற்படி கேள். உன் மடியில் தூங்கும் என் இரையைக் கீழே தள்ளிவிடு. நான் என் பசியைத் தீர்த்துக்கொண்டு என் வழியே போகிறேன். நீ விடிந்ததும் உன் ஜனங்களுடன் சேர்ந்துகொண்டு நாட்டுக்குச் செல்லலாம்'' என்றது. என்புத்தி அச்சமயம் பயத்தால் பேதலித்திருந்தது. கரடியைக் கீழே தள்ளினேன். அது என்னைக் கெட்டியாய் பிடித்திருந்ததால் விழவில்லை. சட்டென்று எழுந்து ஒரு புறமாய் ஒதுங்கிக்கொண்டு, "கடைசியில் மனித குணத்தைக் காண்பித்துவிட்டாயே? உன்னை நம்பி உன் மடியில் சரணாகதி என்று கிடப்பவனைத் தள்ளினையே!'' என்று என் நாக்கில் தன் நகத்தால் 'ஸஸேமிரா' என்று சொல்லி எழுதிவிட்டது. விடிந்ததும் கரடி, கீழே புலி இருக்கும் வரை மரத்தில் ஒன்றிக் கொண்டிருந்து, அது அவ்விடம் விட்டகன்றதும் தானுமிறங்கிச் சென்றது. அப்பொழுதிருந்து என்னால் எதையும் பேச முடியாது போயிற்று. யார் என்ன கேட்டாலும் பதில் சொல்ல வாயைத் திறந்தால் 'ஸஸேமிரா' தான் வந்தது'' என்றான்.

அரசன் மகிழ்ச்சியுடன் அந்த நாட்டுப்புறப் பெண்ணை நோக்கி,

"கிராமே வஸதி கௌமாரி! விபினம் நைவகச்சஸி
ரிக்ஷவ்யாக்ர மனுஷ்யாணாம் கதம் ஜானாஸிபாஷிதம்?

"கிராமத்தில் வாழும் மங்கையே! உனக்குக் காட்டில் நடந்த புலி கரடி. மனித விவகாரம் எப்படி தெரிந்தது?'' என்று கேட்டார்.

"தேவத்விஜா ப்ரஸாதேன, வாணி ஜிஹ்வா மமாச்ருதா
தேனாஹம் அனுஜானாமி, பானுமத்யா யதாங்கிதம்.

"பிராம்மண சிரேஷ்டனான பிர்மாவின் அருளினால் கலைவாணி என் நாவிலமர்ந்து சொல்கிறாள். அரசியின் உடலிலிருந்த பிறவிமச்சத்தை எப்படியறிந்தேனோ அப்படித்தான் இதையும் அறிந்தேன்'' என்றதும்,

"காளிதாஸரா? நீங்களா? கவிஞரே! உங்கள் திறமையை அறிந்திருந்தும் என் அறியாமை என்னை மோசம் செய்துவிட்டது. இந்த இரண்டு வருடகாலமாய் நான்படும் நரகவேதனையை நாட்கள் கணக்கில் சொன்னாலும் தீராது. கவி! இதென்ன வேஷம்?'' என்று அணைத்துக்கொண்டார்.

"அரசே, நீங்கள்தான் என் முகத்தைக் காட்டக்கூடாதென்றீர்களே! நான் என் நிஜ ரூபத்துடன் வந்திருந்தால் இளவரசரைப் பார்க்கக்கூட விடமாட்டீர்களே! நான் இளவரசரின் நிலையைக் கேட்டதிலிருந்து வரவேண்டுமென்றுதான் துடிதுடித்தேன். ஆனால் உங்கள் உத்தரவு என்னைத் தடுத்து நிறுத்தியது. வருடம் கரைந்தது. இளவரசரின் நிலையில் மாற்றமேற்படவில்லை என்றறிந்ததும், 'தண்டனைக்கு ஆளாகாமல் இருப்பது அரிது. அரச சபையில் இருப்பவர்களுக்கு எப்பொழுதும் தண்டனைவிடாது. ஒருமுறை தண்டிக்கப்பட்டாலும், ஒன்பதுமுறை தண்டிக்கப்பட்டாலும் ஒன்றுதானே!' உங்கள் உப்பால் வளர்ந்த இந்த உடலை நீங்கள் என்ன செய்தாலும் தகுமென்ற எண்ணத்துடன் என் கடமையைச் செய்ய நான் மாறுவேடம் பூண்டுவந்தேன்''

"மித்ரத்ரோகி க்ருதக்னச்ச' என்று சொன்னீர்களே, அது எனக்குகந்ததுதான்'' என்று குரல் தழுதழுக்கச் சொல்லி, "யாரது அங்கே? மஹாராணியைக் காளிதாஸ் வந்திருக்கிறாரென்று அழைத்துவாருங்கள். மஹாகவி! நான் அபராதி. உங்கள் முகதர்சனத்தை வெறுத்தது போல், மஹாராணி முகத்தையும் பார்க்க வெறுத்தேன். உங்களை நாட்டைவிட்டோட்டினேன். அவளை அந்தப்புரத்தினுள் சிறைவைத்தேன். இந்தப் பாபத்தை எப்படிப் போக்குவேனோ?'' என்று குரல் தழுதழுக்கச் சொன்னார்.

அவ்விடம் வந்த அரசி லீலாவதி அரசர் பெருமானுக்கும் கவி சிரேஷ்டருக்கும் வணங்கி, "கவிஞரே! நீங்கள் மறைந்ததிலிருந்து மஹாராஜாவின் சந்தோஷம் மறைந்துவிட்டது. அவரைச் சந்தோஷப்படுத்திக்கொண்டு இங்கேயே இருங்கள்'' என்றாள் பெருந்தன்மையுடன். அரசர் அரசியைப் பார்த்தார். அரசியின் கண்கள் ஈரமாயிருந்தது நன்கு தெரிந்தது.

"சற்று இருங்கள் இதோவந்துவிட்டேன்'' என்று அரசியின் பின் சென்றார் போஜர்.



# ஸித்த வித்தியாதரி ஸ்ரீமதி வீணை தனம்மாள்

*ரங்க ராமானுஜ அய்யங்கார்*

**ம**ஹாவித்துவான் தஞ்சை கிருஷ்ணபாகவதர் வேணுகான சிரோமணி சரப சாஸ்திரிகளை நோக்கி, "சாஸ்திரிகள் அவர்களே, பஜனை சேஷய்யர் கிருஹத்தில் நடக்கும் ராமநவமி உத்ஸவத்தில் இன்றுமாலை பூச்சி அய்யங்கார் கச்சேரி. பிரமுகர்களும் வித்துவான்களும் கூடுவார்கள். தாங்களும் விஜயம் செய்யவேண்டும் என்பது பலருடைய கோரிக்கை. மேலும் பாட்டுக்குப்பிறகு தனம்மாளின் வீணாகானம். 'ஒரு பெண்பிள்ளை, அதிலும் தேவதாஸி இனத்தவர், அவருடைய வீடு தேடிச்சென்று வீணை கேட்பது எனது நியம நிஷ்டைகளுக்குப் பொருத்தமல்லவே,' என்று தாங்கள் இதுவரையில் சொல்லிவந்ததுண்டு. ஆனால் ஒரு பக்தர் வீட்டில் ராமநவமி உத்ஸவத்தில் ராமார்ப்பணம் ஆகும் தருணத்தில் அதைக் கேட்டு அனுபவிக்கலாமே," என்றார். அதன்படி சரபசாஸ்திரிகள் பாட்டு நடக்கும் பொழுது அறையின் ஒருபுறத்தில் உட்கார்ந்திருந்தார். பாட்டு முடிந்ததும் ஸபையோர் பலர் மேடையை அணுக நகரும் சலசலப்பு ஏற்பட்டது. அதற்கிடையே வீணை சுருதி சேர்க்கும் இனிய நாதம் 'கலீர்' 'கலீர்' என்று எழும்பி, ஸபையில் அமைதியை உண்டுபண்ணியது. ஒரு கண நேரத்தில், வீணையும் இனிய குரலும் சேர்ந்து, "ஸ்ரீ ரகுகுலமந்து புட்டி ஸீதனு சேகொனின ராம," என்ற ஹம்ஸத்வனி ராக கீர்த்தனை சாஸ்திரிகளின் கவனத்தை இழுத்தது. நிஷ்களங்கமான நாதத்துடன் கூடிய மீட்டு, ஒழுங்கும் சுருக்கமும்கொண்ட ஸஞ்சாரிகள் அலங்கரிக்கும் கீர்த்தனைப் பத்ததி, சுருதியுடன் இரண்டறக்கலந்து இனிமை ததும்பும் குரல், கருத்து விளங்கும் தெளிவான உச்சரிப்பு—இவைகளை, சரபசாஸ்திரிகள் அகக்கண்கொண்டு கவனித்தார். அவருக்குப் புறக்கண்கள் ஈசன் தரவில்லை அன்றோ? "பாகவதர்வாள், என்னை மேடையின் அருகில் அழைத்துச் செல்லுங்கள். அண்மையில் இருந்து கேட்க விருப்பம்," என்றார். வீணாகானம் முடிந்தபிறகு, தனம்மாளை விளித்து, "திரிகரண சுத்தமான ஸங்கீதம் என்று சிவன்வாள் (மஹா வைத்தியநாத ஐயர்) அன்று போற்றியதன் உண்மையை இன்று நான் உணர்ந்தேன். சிந்தனை, ஸாதனை, வாக்கு இம்மூன்றும் அரிய வரப் பிரசாதமாகத் தமக்குக் கிடைத்துள்ளன. அது மானிடர்க்கெட்டாத தெய்வ ஸம்பத்து," என்று சொன்னார்.

மேற்கூறியஸம்பவம் சென்னையில் 1900-ஆம் ஆண்டு நடந்தது இதன்பின் மற்ருெரு ரஸமான நிகழ்ச்சி. கொல்லங்கோடு மஹாராஜாவின் அரண்மனையில் ஒரு கலியாணம் நடந்தது. அதற்கு நாஞவிடங்களிலிருந்தும் ஸங்கீத வித்வான்கள் பலர் வந்திருந்தனர். அவர்களில் முதன்மையானவர் பாலக்காடு அனந்தராம பாகவதர். வந்திருக்கும் வித்துவான்களை அவரவர்கள் அந்தஸ்துக்குத் தகுந்த முறையில் மஹாராஜாவிடம் அறிமுகம் செய்துவைத்து, ஸன்மானம் சிபார்சு செய்யும் பொறுப்பு அவருடையது. வீணை தனம்மாளை மஹாராஜா வரவேற்கும் பொழுது, பாகவதர், "தங்களை ஒத்த பிரபுக்களின் அபிமானத்தினுல் பெயரும் பொருளும் நாங்கள் பெறுவது இந்த அம்மாளின் ஸங்கீதம் கேட்ட பெருமையின் பலனே. இவருடைய கச்சேரியை ஸமூஹத்தில் மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்யவேண்டும். பிரபுக்கள் மாத்திரமன்றி வித்துவான்கள் எல்லோரும் கேட்கும்படியாக, இரவு போஜனத்திற்குப்பின் ஸாவகாசமாக நடத்த உத்தரவாக வேண்டும்," என்று சொன்ஞர். அப்படியே அன்றிரவு ரஸிகர்களும் பிரபல வித்துவான்களும் கூடிய ஸபையில், வீணை குப்பையர் இயற்றியதும், தனம்மாளின் வம்ச பரம்பரையாகப் பண்பாடு அடைந்து, உன்னதமான நடையில் அமைந்ததுமான, "இந்த ச்ஸலமு சேஸிதே ஏமனி தாளுதுரா" என்ற பேகட ராக வர்ணத்துடன் வீணைக் கச்சேரி தொடங்கியது. அப்பொழுது ஸபையின் ஆனந்த பரவச நிலையையும் அதிசய அனுபவ கோலாகலத்தையும் எண்ணி எண்ணிப் பலகாலும் பேசி இன்புறும் பலர் இன்றும் இருக்கின்றனர்.

சென்ற தலைமுறையில் கீர்த்திபெற்ற பெரிய வித்துவான்கள் எல்லோருக்கும் திலகமாக விளங்கியவர் ஸ்ரீமதி வீணை தனம்மாள் என்பதற்கு இந்த இரண்டு நிகழ்ச்சிகளே போதிய அத்தாட்சியாகும். இத்துணை மகிமை வாய்ந்த அவருடைய ஸங்கீதத்தின் சிறப்பை ஒரு கட்டுரையில் விளக்குவது இயலாத காரியம். எனினும் அந்தத் தேவகானத்துடன் ஏற்பட்ட பன்னிரண்டு வருஷத் தொடர்பினுல் உருவான சில கருத்துக்களைக் "காவேரி" நேயர்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலே இதை எழுதத் தூண்டியது.

தியாகராஜஸ்வாமியின் காலத்திற்கு முன் கர்நாடக ஸங்கீதம் எப்படிப் பொது ஜனங்களிடையே பரவி இருந்தது? பலர் கூடிக் கேட்கும் வழக்கம் எத்தகையது? வினிகைகளில் நடந்த ஸங்கீதம் எந்த அம்சங்களுடையது? எங்கெந்த ஸந்தர்ப்பங்களில் இசை நிகழ்ச்சிகள் நடந்துவந்தன? இவை போன்ற பல கேள்விகளுக்கு ஆதாரத்துடன் திருப்தி அளிக்கும் விடைகள் காண்பது கடினம். ஏனெனில் தியாகராஜஸ்வாமியின் அபார தேஜோ மகிமையினுல் பிறந்த இசைவழி அவருக்கு முன் இருந்ததை மனித ஸஞ்சாரம் இல்லாமல், கல்லும் முள்ளும் நிறைந்து, இடிந்து மறையும் பழைய சாலையைப்போல் ஆக்கிவிட்டது. ஆகையினுல் தியாகராஜ சகாப்தம் என்று சொல்லக்கூடிய கடந்த ஒரு நூற்ருண்டில் தோன்றிய கிருதி கர்த்தாக்கள் ஸ்வாமியினுடைய அடிச்சுவடுகளையே பின்பற்றி இருப்பதில் ஆச்சரியமில்லை. இந்த மரபில் மேன்மை பெற்றவர்கள் திருவையாற்றில் வசித்து வந்த ஆனை, ஐயா, என்ற இரு ஸகோதரர்கள். அவர்களே தற்காலம் ஆனையா, என்று அழைக்கப்படுகின்றனர். அவர்களிடம் ஸங்கீதமும், கணபதி சாஸ்திரி என்பவரிடம் பரத நாட்டியமும் கற்றுப் பின்னர், ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சிதரின் கனிஷ்ட சகோதரரான பாலுஸ்வாமி தீட்சிதருடைய அபிமான சிஷ்யையாக உடையார் பாளையத்தில் வாழ்ந்து வந்தார், காமாட்சி என்ற ஒரு தேவதாஸிப் பெண்மணி. அவருடைய புதல்வர்கள் அப்பாக் கண்ணு, பொன்னுஸ்வாமி என்ற இருவரும் முறையே பிடிலும் வாய்ப்பாட்டும் கற்று, குலத்தின் இசைத் தனத்தை வளர்த்து வந்தார்கள். அன்ஞரின் இளைய ஸகோதரி சுந்தரம்மாள், தன் தாயுடன் சென்னைக்கு வந்து, சியாமா சாஸ்திரியின் குமாரரும், உத்தம வாக்கேயகாரருமான ஸுப்பராய சாஸ்திரியிடம் இசை பயின்று வந்தார். சுந்தரம்மாளின் அருந்தவப் புதல்வியே தனம்மாள். தனம் தனது ஒன்பதாவது வயதிலேயே இளைய சகோதரி ரூபாவதியுடன் சேர்ந்து பாட்டுக் கச்சேரி செய்தாள். ஆயினும் குரல் ஸன்னமாய் இருந்தபடியால் வீணையுடன் பாடுவதே நலம் என்று காமாட்சிக்குத் தோன்றியது. அக் காலத்திலேதான் மயிலாப்பூர் கௌரி என்ற சிறந்த வீணை விதுஷியிடம் க்ஷேத்திரக்ஞர் பதங்களைக் கற்றுத் தேறிய பாலாஜிப்பேட்டை பால்தாஸ் என்ற பாலகிருஷ்ண நாயுடு தனம்மாளின் முன்னேற்றத்தில் கருத்துவைக்கலாயினர். (சரப சாஸ்திரிகளைப்போல பால்தாஸும் அகக்கண் ஒளியே பெற்றவர்) குடும்பத்தின் போஷகரான ரங்கூன் கிருஷ்ணஸ்வாமி முத

லியார் என்பவரின் உதவியினால், மர்க்கண்டைல் பாங்கில் உத்தியோகம் வகித்துவந்த சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவரான அழகிய சிங்கராச்சாரி என்னும் வைணிகரிடம் தனம்மாளுக்கு வீணைப் பாடம் ஆரம்பமாயிற்று. பதினோராவது பிராயத்திலே வீணை தனம்மாளின் கச்சேரி பிரபலமடைந்தது. ஆனால் தம்முடைய மனோதர்மம் முழுவதையும் நன்ருக வெளியிட வீணை ஒரு தகுந்த கருவியா என்ற ஸந்தேகம் அவர் மனதில் குடிகொண்டது. ஆயினும் இது விலகும் ஸந்தர்ப்பமும் சீக்கிரம் கிட்டியது. அவருடைய பதினைந்தாவது வயதில் இரண்டு முக்கியமான ஸம்பவங்கள் நடந்தன. அவைகள் அவரது வாழ்வின் போக்கையே மாற்றின.

பாலக்காடு கலியாண கிருஷ்ண அய்யர் என்ற வைணிக சிரேஷ்டரைக் குறித்து, தனம்மாள் கேள்விப்பட்டதுண்டு. அவருடைய இரண்டு கச்சேரிகள் சென்னையில் நடந்தன. 1937—ஆம் வருஷம் ஒரு ஸந்தர்ப்பத்தில் தனம்மாள தமது அனுபவங்களைக் கூறும்பொழுது, அந்த இரண்டு வீணைக் கச்சேரிகளைக் குறிப்பிட்டு, "நான் அறிந்தவரையில் வீணையின் ஸ்வரூபம் தெளிய வாசித்தவர் அவர் ஒருவரே. அவருடைய வீணையைக் கேட்ட தட்சணமே என் சந்தேகங்கள் அகன்றன. அப்பொழுதே வீணையும் நானும் உயிரும் உடலும் ஆனோம்," என்று மெய்சிலிர்த்துப் பாராட்டினார். ஏறக்குறைய அதே சமயத்தில் தனம்மாள் தர்மபுரி ஸுப்பராயரைச் சந்தித்தார். ஸுப்பராயரின் வரலாறு மிகவும் வினோதமானது. அவர் விவாகம் செய்து கொள்ளாமல் தனிமையிலே காலம் கழித்தார். சிறுவயதிலேயே பரம்பரைச் செல்வம் அவருடைய கைக்கு வந்தது. அதன் பெரும் பகுதியைப் பிக்ஷாண்டார்கோவில் ஸுப்பராயர் என்ற ஸங்கீத மேதாவியுடன் கூடிச் செலவு செய்து, பின்னர் மிகுந்ததை எடுத்துக்கொண்டு சென்னைக்கு வந்தார். அவர் தனம்மாளின் வாசிப்பைக்கேட்டு, "என் பிக்ஷாண்டாரே மறு ஜன்மம் எடுத்தார்," என்று பிரமித்தார். அன்றுமுதல் அவருடைய வியோககாலம் வரையில்—30 ஆண்டுகள்—அவர்களுடைய பரஸ்பர அபிமானமும் ஸங்கீதப் பரிவர்த்தனையும் வளர்ந்துவந்தன. 'ஏமந்து நே முத்து பாலாமணிகி,' 'ஸ்மர ஸுந்தராங்குனிகி' என்ற இரு ஜாவளிகளும் அவர்கள் ஒருவரை ஒருவர் போற்றும் கருத்தில் அமைந்தவை. ஸுப்பராயருடைய உருப்படிகளை அவரிடமிருந்தே நேரில் கற்றபடியாலும், அவரிடம் தம்மை மறந்த பிரேமை கொண்டிருந்தபடியாலும், அவருடைய ஜாவளிகளைத் தனம்மாள் வாசித்துப் பாடும்போது தாமும் கேட்போரும் மெய்மறந்து விடுவதை அந்த ரஸானுபவம் பெற்றவர்களே அறிவார்கள். ஸுப்பராயருடைய வர்ணங்களும் ஜாவளிகளும் தற்காலம் விரைவில் மறைந்து வருவது கர்நாடக ஸங்கீதத்திற்குப் பெரியதொரு நஷ்டமே.

பரம்பரை ஸம்ஸ்காரமும், தன்னம்பிக்கையும், சலியாத உழைப்பும் தனம்மாளுக்கு இயற்கைச் சாதனங்கள். இவற்றைத் தவிர உயர்ந்த சிந்தனைக்கும், கற்பனை வளர்ச்சிக்கும் அக்காலத்திய சூழ்நிலை மிகவும் அனுகூலமாய் இருந்தது. ஒருபுறம் பாலாஜிப் பேட்டை நாயுடு, சைதாப்பேட்டை திருமலாச்சாரியார், சாத்தனூர் பஞ்சநதய்யர் போன்ற ஸங்கீத விற்பன்னர்கள் பலர் அவருக்கு ஞான தீபங்கள் ஆயினர். மறுபுறம் திருமலையா நாயுடு, சதாவதானம் சீனிவாஸாச்சாரியர் போன்ற கலைஞர்கள் அவருடைய லக்ஷ்ய சாதனைக்கு ஊக்கம் அளித்தனர். மற்றொருபுறம் விஜயநகரம் வீணை வேங்கடரமணதாஸ், தஞ்சை கிருஷ்ண பாகவதர், திருக்கோடிகாவல் பிடில் கிருஷ்ணய்யர், மிருதங்கம் நாராயணசாமி அப்பா ஆகிய திக்கஜங்கள் அவருடைய பெருமையை நாடெங்கும் பரப்பின. எனவே நாளடைவில் அவருடைய புகழ் பரவலாயிற்று. அவர் மைஸூர், திருவாங்கூர், பரோடா முதலிய இராஜ ஸபைகளில் தகுந்தபடி பூஜிக்கப்பட்டார். வீணை வேங்கடரமணதாஸின் முயற்சியினால் விஜயநகரத்தில் அவர் வெகு நாட்கள் தங்கியிருந்து இராஜ சபையில் அமோகமான மரியாதைகளைப் பெற்றார். இராக்காலங்களில், நெஞ்சை அள்ளும் நிலா வெளியில், விஜயநகர மன்னரும், வேங்கடரமணதாஸும், தனித்திருந்து, தனம்மாளின் வீணை இசையில் லயித்திருக்கும் வரலாறுகள் தொல்காப்பியக் கற்பனைச் சித்திரங்களை நினைவூட்டும். பின்னர், சென்னையில் வந்து தங்கி, அகில வித்துவஜ்ஜன திலகமாகவும் உயர்கலை அன்பர்களுக்கு உயிர் நிலையாகவும் பல ஆண்டுகள் வாழ்ந்து 72-ஆவது வயதில் (அக்டோபர், 1938) இறைவன் அடிகளில் அமர வாழ்வு அடைந்து ஸித்த வித்தியாதரி ஆனார்.

ஜான்ஸிராணி லக்ஷ்மிபாயைப் போன்ற வீராங்கனை, சரோஜினியைப்போன்ற கவி அரசி, தனம்மாளைப்போன்ற இசை அரசி இவர்கள் இயற்கை அன்னையின் சிக்கனச்'

சிருஷ்டித் திட்டத்தில், ஆயிரம் வருஷங்களுக்கு ஒருவர்தான் மனித ஸமூகத்தில் வந்து உதிப்பார்கள் என்று தோன்றுகிறது. இனி தனம்மாளுடைய ஸங்கீதத்தின் சிறப்பான அம்சங்களைக் கவனிப்போம்.

தேவாலய கர்ப்பக்கிருஹம்போல் இருட்டான ஒரு சிறிய அறையின் மூலையில் எளிய உடைதரித்து, சித்திரப்பதுமைபோல் அமர்ந்திருக்கிறார் தனம்மாள். மூப்பினால் மிகவும் தளர்ந்த தோற்றம். கண்கள் பார்வை இழந்தும் ஒளி குன்றாமல் பிரகாசிக்கின்றன. அறைமுழுதும் 'கம்'மென்று 'அத்தர்' ஊதுவர்த்தி பரிமளம் வீசுகிறது. பக்கத்தில் ஒரு சிறிய கைவிசிறியும் ஒரு "அம்ருதாஞ்ஜனம்." பச்சைப்பெட்டியில் இளந்துளிர் வெற்றிலை, உயர்ந்த வாசனைப் பாக்குத்தூள். கல்கத்தாவிலிருந்து தருவிக்கும் ஸுகந்தமான 'ஜர்தா' முதலியன. அவருடைய ஸங்கீத உபாஸனையைத் தரிசித்து வாழ்வைப் புனிதமாக்கிக்கொள்ள ஐந்தாறு பக்தர்கள் அவரைச் சுற்றிச் சற்றும் சந்தடியில்லாமல் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களிற்சிலர் காணிக்கையாகப் பழவகைகளும், புஷ்பமும் கொண்டுவந்திருக்கிறார்கள். தனம்மாள் கொஞ்சம் புஷ்பத்தை வீணைக்குச் சூட்டி, மிகுந்ததைத் தம் கூந்தலுக்குள் சொருகிவிடுகிறார். எவ்வளவு புஷ்பமானாலும் அந்தச் சொருக்கினுள் மறைந்துவிடுகிறது! பிறகு வீணைக்கு மட்டிப்பால் தூபம் நிவேதித்து, "கிருஷ்ண" என்று ஸாத்விகப்பிரதிஷ்டை செய்து வீணையைக் கையில் எடுக்கிறார். வீணை சிறியது. தந்திகள் ஸன்னமானவை. நாதம் அதி நுட்பம். ஆனால் சுருதி சேர்க்கும் முறை பிரத்யேகமானது. இனிய கார்வையுடன் தந்திகளை ஒன்றுக்கொன்று சரிபார்க்கையில், பக்கஸாரணி ஒவ்வொன்றின் தனித்தனி அனு நாதமும், ஜீவக்கலை ததும்பி நிற்கிறது. பூர்வாங்கமாக மேலும் கீழும் சில ஸ்வரப் பகுதிகளை வாதி ஸம்வாதிப் பொருத்தத்துடன் சித்திரிக்கும் போதே கேட்போர் மனம் பாஹ்யப் பிரவிருத்தி ஒழிந்து, நாதஸுகத்தில் லயித்துவிடுகிறது. பிராசீன தானவர்ணம் ஒன்று ஆரம்பமாகிறது. ஆதியோடு அந்தமும், காலப்பிரமாணம், சிட்டையின் உருவம், ஸஞ்சாரிகள், கமக வகைகள், அனுஸ்வரங்கள், கனநய மாறுபாடுகள், மீட்டுக்களின் ஒலி அலைகள், தாளத் தந்திகளின் நாதப்பங்கீடு—ஒவ்வொரு அம்சமும் இதற்குமுன் எங்கும் காணாத வகையில் அதி நூதனமாகவும் ஸுகஸ்பூர்த்தியுடனும் துலங்குகின்றது. அனுபல்லவியும், ஸ்வரச்சிட்டையும் ஆயின பின்பு கையெட்டத்தில் உள்ள படிகத்தை எடுத்து, அதில் கண்டசுத்தி செய்துகொண்டு, மீண்டும் 'எத்துக்கடை' எனப்படும் சரணத்தை வாய்ப்பாட்டுடன் ஆரம்பிக்கிறார். குரலும் விரலும் சேர்ந்தியக்கும் நாதத்தீஞ்சுவை ஊற்று அம்ருதமாகப் பெருகுகிறது. முதலில் தோன்றின மூப்பும் தளர்ச்சியும் குரலிலும் இல்லை, விரலிலும் இல்லை.

வர்ணத்திற்குப் பின் சுமார் பத்து நிமிஷத்தில் ஒரு ராகத்தை வாசித்து முடிக்கிறார். அது, ஸகல லக்ஷணங்களும் பொருந்தி, ஒப்பயர்வு இல்லாத நாதஸுகமும் மஹோன்னதமான கற்பனையும் பெற்று, நாதவித்தையின் அகண்ட பரிமாணத்தைச் சுட்டிக்காட்ட வல்லதாய் இருக்கிறது. விரல்கள் தந்திகளின் மீது லாகவத்துடன் ஊர்ந்து செல்லுவது கண்ணைக் கவரும் ஒரு காட்சி. குறைந்த மீட்டுகளில் நீண்ட துரிதகால ராகப்பகுதிகள் நிறுவப்படுகின்றன. ஒவ்வொரு ஸ்வரஸ்தானத்திலும் எழும் பலவிதச் சொற்கட்டுகள் ஸ்வர தேவதைகளின் நர்த்தனம்போல் மிளிர்கின்றன. பக்க ஸாரணிகள் மெல்லிய எதிரொலி போல் மிதமான தொடர்ப் பின்னணியாகத் தொனிக்கின்றன.

ராக ஆலாபனையின் தனிச்சிறப்பைச் சிந்தித்துப் பார்க்கும் முன்னரே தானம் என்ற மத்தியம காலம் தொடங்குகிறது. ரஞ்சனையும் பொருத்தமும் உள்ள சொற்றொடர்கள் அணி அணியாக ஒன்றன்பின் ஒன்று தோன்றி, ராகத்தின் ஸுந்தர வடிவைக் கண்முன் நிறுத்தி, சிந்தனையை எழுப்புகின்றன. மமபா — ததபா — மாபாத — காமாபாத — ரீகாமாபாத என்றெல்லாம் சுவையற்ற அடுக்குகளோ, வலது கைவிரல்களின் குறுக்குத் தட்டுகளோ கிடையாது; வந்த சொற்றொடர் மறுமுறை வருவதும் இல்லை. கோவில்களில் உள்ள டமாரம், சேமக்கலம், பிரம்மதாளம், முதலியவைகளின் பேரொலி, பஞ்சடி போன்ற விகாரச் சப்தம், வலக்கை வேலைப்பாடு, இடக்கை வேலைப்பாடு என்ற ரஸமற்ற சப்த ஜாலங்களைத் திரும்பத் திரும்ப அடித்துக் காட்டிச் சலிப்பை உண்டு பண்ணும் சிலம்ப வித்தைகள், மோர்சிங், புல்புல்தரங், சித்தார், கோட்டு வாத்தியம், முதலியவைகளுடைய ஓசை அனைத்தையும் சேர்த்து அதிர்ச்சி உண்டுபண்ணிக் காதைப் புண்படுத்தும் 'டணர்' 'டணர்' என்ற பேரரவம் — இவைகளே வீணை ஸங்கீதமாகத் தற்காலம் பிர

சாரமாகி வருகிறது நினைவிற்கு வருகிறது. அனுயாஸமாக, ஆட்டம் அசைவு சிறிது மின்றி, தவநிலையில் ஆழ்ந்திருப்பவர்போல உட்கார்ந்து, நாதார்ச்சனை செய்யும் இந்த அபிநவ ஸரஸ்வதியைத் தானம் வாசிக்கும் பொழுது காண்பவர் கேட்பவர், இவரை ஒரு கந்தருவ ஸ்திரீ ரத்தினம் என்றே எண்ணுவர்.

தானத்திற்குப்பின் ஒரு கிருதி. வர்ணமே ஒற்றை ஸ்வரமும் ஒரே காலத்திலுள்ள அசைவும் என்பதில்லாமல், ஒரு உயர்தர மான கிருதியைப்போல் இருந்ததே! கிருதி யைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? அது பண்பாட்டின் சிகரத்தை எட்டுகிறது. ஆழ்ந்த பரிசீலனையினுலும் ரஸ உணர்ச்சிப் பக்குவத்தினுலும் மெருகேற்றிய வர்ண மெட்டு, கருத்துக்கேற்ற ராகபாவம், முத்து முத்தாகப் பிரகாசிக்கும் ரவைகள், வாக்கியத் தின் அரைப்புள்ளி, முற்றுப்புள்ளி போன்ற ஒதுக்கல்கள், பொருத்தமான ஸங்கதிகள்—இப்படி எண்ணிறந்த அழகிய அம்சங்களு டன் ஜ்வலிக்கிறது கீர்த்தனை. முன் போலவே சரணத்திலிருந்து அவருடைய குரல் தந்தியுடன் இழைந்து தாது மாதுவின் ஸமரஸத்தை மெய்ப்பிக்கிறது.

இரண்டொரு கிருதிகளுக்குப்பின் தனம் மாள் க்ஷேத்ரக்ஞரின் பதம் ஒன்றை வாசிக்கி றுர். தியாகராஜ ஸ்வாமியை வால்மீகியின் அம்சமாகக் கருதுவர் பெரியோர். அதைப் போலவே தனம்மாளை அபிநவ ஜயதேவர் என்று பிருது பெற்ற க்ஷேத்திரக்ஞரின் அம்சமாகக் கருதுவர் பதங்களின் உண் மையை அறிந்தோர். பதமான காலப் பிர மாணத்தை அமைத்து, மிஸ்ர ஜாதி திரி புடை தாளத்தின் இரண்டு லகுத்தட்டுகளை யும் இரண்டு திருதத் தட்டுகளையும் சிறுவிர லில் அணிந்திருக்கும் நெளியினுல் 'ஜில்' 'ஜில்'லென்று அணுவளவும் லயம் பிறழாது மீட்டி, பதங்களின் வெவ்வேறு ரஸங்கள் விளங்கும்படி வாசித்துப் பாடும்பொழுது, குளிர்ந்த தென்றல் வீசும் சோலையிலே உலவு வது போலவும், நாத அலையின்மீது மிதந்து செல்லுவது போலவும் மனம் கற்பனை உல கில் நடமாடித்தெவிட்டாத இன்பமும் உள் ளார்ந்த அமைதியும் அடைகின்றது.

பதத்திற்குப் பின் ஒரு ஜாவளி. அதன் பின் ராகமாலிகை. கலாநிதிகளாகிய பல பெரியோருடைய பழக்கத்தினுல் கடைந் தெடுத்த அமிழ்தம்போல் உள்ளங் குளிரும் கருத்துள்ள வடமொழிச் செய்யுள்களையும் பைந்தமிழ்ப் பாக்களையும் சொற்சுவை பொருட்சுவை விளங்கப் பாடித் தாமும் மகிழ்ந்து கேட்போரையும் மகிழ்விக்கிருர். "ஒருமையுடன்நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவுவேண்டும்," என்று ஒரே மூச்சில் சளசளவென்று பாடம் ஒப்பித்து, "யத்தரி நன்னு", "தர் ர ர் ர ர் ரா" என்றெல் லாம் கோரமாகச் சத்தமிடும் வழக்கமல் லவோ எங்கும் காண்கிறது? ஆனுல் இவரோ, "பச்யந்தீ முதிதா", "முராரேர் வபு; பச்யந்தீ முதிதா," "ஸ்பஷ்டம் முராரேர் வபு: பச்யந்தீ முதிதா", என்றும், "வித்தகச் சித்தர்கணமே" "ஸமரஸ நன் நிலைபெற்ற வித்தகச் சித்தர் கணமே," "வேதாந்த ஸித் தாந்த ஸமரஸ நன் நிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே," என்றும் பதங்களைக் கருத்து விளங்கப் பிரித்து, அவைகளின் எழுத்துகளையே ராகச் சொற் கட்டுகளாக அமைத்து, ரத்தின மிழைப்பதுபோல் ராகப் பகுதிகளில் பொருத்தி, ராக மாலிகை யாக இறைவனுக்குச் சூட்டுகிருர். கடைசி யில் ஒரு அபூர்வ சித்திரமாக மத்தியமா வதி ராகத்தை ஒன்றரை நிமிஷத்தில் வாசி த்து, "க்ருஷ்ண" என்று ஸாத்விக அர்ப் பணம் செய்து நாதோபாஸனையைப் பூர்த்தி செய்கிருர்.

பெஸண்ட் அம்மையாரின் அறுபது நிமி ஷப் பிரஸங்கம்போல, தனம்மாளின் வீணு கானம் கச்சிதமாக இரண்டு மணி நேரத்தில் முடிகின்றது. ஆயினும் அதைக் கேட்பவர் களின் உள்ளத்தில் ஒரு பெரிய ஆத்மானு பவத்தினுல் உண்டாகும் சாந்தியும் ஸந்துஷ் டியும் நிறைகின்றன. ஆனுல் அறையின் வெளியே வந்த கணமே கேட்ட ஸங்கீதம் நினைவை விட்டு மறைகிறது. இதன் மர்மம் என்ன? இந்த நஷ்டத்தை எப்படி ஈடு செய்வது? மறு வெள்ளி மாலை இந்த ஸங்கீ வர ஆலயத்தை அடைந்து கவனிக்கலாம்.

வழக்கம்போல ஸங்கீதம் ஆரம்பமாகின் றது. பிடாரம் கிருஷ்ணப்பா என்ற மைசூர் ஆஸ்தான வித்துவான் மத்தியில் பரபரப் புடன் வந்து மௌனமாகக் கைகட்டி அமரு கிருர். இந்தப் பக்கம் திருச்சி பிடில் கோவிந்தசுவாமிப் பிள்ளை இசை வெள்ளத் தில் ஆழ்ந்து இருக்கிருர். இன்று நிகழ்ச்சி நிரலில் இடம்பெறும் உருப்படிகள் அபூர்வ மான கிருதி கர்த்தாக்களுடையவை.

பிள்ளையவர்கள் மெதுவாகக் கனைக்கிருர். தனம்மாள் அவர் பக்கம் திரும்பி, "இன்றி ரவுதானே பிரயாணம்" என்று அவரைக்

கேட்கிறார். "ஆம், 'ஸுஜன ஜீவன' மாத்திரம் கேட்டுப் போகலாம் என்ற ஆவல். சௌகரியம் இருந்தால்—" என்று அவர் சொல்லி நிறுத்துகிறார். அவருடைய தொனியில் தோன்றுகிற அடக்கமும் மட்டிலாத மரியாதையும்தான் என்ன! இன்னொரு வெள்ளிக்கிழமை குறிச்சி வேதாந்த பாகவதர் வந்திருக்கிறார். இன்றும் கேள்விப்படாத புதிய புதிய உருப்படிகள்! எவ்வளவுதான் இவருக்குப் பாடம்! இந்த வயதில் எப்படித்தான் அவ்வளவும் அவருடைய நினைவில் இருக்கின்றன! முடிவில் பாகவதர், "ராஜராஜேச்வரி வீணாபாணியாகப் படத்தில் காட்சி அளிக்கிறாள். நேராகத் தரிசித்த இந்நாள் என் வாழ்வில் ஒரு நன்னாள்," என்று மனமாரப் பாராட்டுகிறார். இப்படியாக வெள்ளிதோறும் புதிய அனுபவங்கள் நேருகின்றன. பஞ்சாபி விருந்து நவாப் அலிகான், வங்காளத்தி விருந்து ப்ரிஜ்கி ஷோர் சௌதுரி, பூனாவி விருந்து கரீமகான். குற்றாலம் மௌனஸ்வாமிகள், ஒரு ஸாகித்திய வல்லபர், ஒரு மஹாமஹோபாத்தியாயர் — கனதனவான்களும் ரஸிகர்களும் வித்துவான்களும் அவரைத் தேடிவந்து பேரானந்தம் அடைகிறார்கள். அவர் அவர்களைத் தமிழ் தெலுங்கு பாஷைகளில் முக மலர்ச்சியுடனும் இங்கிதமாகவும் வரவேற்று ஸம்பாஷிக்கிற விதரணை சொல்லத் தரமன்று. ஒருநாள் ஹடயோகி ஒருவர் பிரஸன்னமாயிருக்கிறார். இந்த வீணையில் ஒலிக்கும் ஸ்வரங்கள் அவருடைய குண்டலினியை எழுப்பி, சுவாஸம் கட்டிலடங்காமல் வேகமடைகிறது. தம் நிலை பிறருக்குத் தெரியாமல் இருக்க அவர் முயலுகிறார். நல்லவேளையாகக் கானம் முடிவடையும் நேரம் வருகிறது. அவர் சரேலென வெளியேறி, தமது நண்பரிடம், "இந்த ஸங்கீதத்தில் ஒரு ஸூக்ஷ்மமான ஆத்ம சக்தி இருக்கிறது. ஸ்வரங்கள் எங்களுடைய சாதக முறைகளின் சக்தி வாய்ந்து உணர்ச்சி வேகத்தை உண்டுபண்ணுகின்றன. அவை தஹராகாசத்தைத் தொடுகின்றன. இது ஒரு பெரிய ரகசியம். இவருடைய ஸங்கீதம் அனாஹத நாதமே. இவர் அம்பிகையின் அம்சம" என்கிறார்.

மற்றொரு நாள் தனம்மாள் புன்னாகவராளி வாசிக்கிறார். எங்கிருந்தோ ஒரு ஸர்ப்பம் சீறிக்கொண்டு வருகிறது. சுற்றி இருப்பவர்கள் பயந்து கூக்குரல் போடுகிறார்கள். தனம்மாள், "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம்—நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்—அணையாம் திருமாற் கரவு," என்னும் திவ்வியப்ரபந்தப் பாசுரத்தைப் பாடுகிறார். ஸர்ப்பம் காணாமல் மறைகிறது. தனம்மாள், "போகிராஜன் தரிசனம் எனக்குக் கிடைக்கவில்லையே! குண்டூரில் முன்னொரு முறை இப்படியே நேர்ந்தது" என்கிறார். ஒரு நண்பர், "இது தேவகானமாகையினால், 'கட்செவி எடுத்தாட்டலாம்' என்ற முதுமொழி இந்த ஸித்த வித்தையின் மூலம் தெளிவாகிறது. நமது முன்னோர்கள் பாம்பின் இரு நாக்குகளினால் உண்டாகும் சத்தத்தை எப்படியோ கண்டறிந்து, அதனை ஒத்த ஓசையில் அடங்கிய ஸ்வரச் சேர்க்கைக்குப் புன்னாகவராளி என்று மிகப் பொருத்தமாகப் பெயரிட்டனர். மனிதனின் அரவம் கேட்டுப் பயந்து மறைய முயற்சி செய்யும் ஸர்ப்பம் தன்னுடையது போன்ற ஒலியைக் கேட்டு, அதைத் தேடிவந்து, அதில் லயித்திருப்பது இயற்கைதானே. அதற்குத் தன் கண்மாத்திரம் அல்ல, உடல் முழுவதுமே செவியாக உதவுகிறதல்லவோ? ஆகையினால்தான் இந்த ராகத்தைக் கேட்டதும் அந்த ஜந்து தன் வசமிழக்கிறது," என்று விளக்குகிறார்.

ஒருநாள் அம்மாளுக்குக் கடுமையான ஜ்வரம். வைத்தியர், "இன்று வெள்ளிக்கிழமை. நண்பர்கள் ஓரிருவர் வந்துகொண்டிருக்கிறார்கள், ஆயினும் நீங்கள் வாசிக்கக் கூடாது," என்று சொல்லிப் போகிறார். சிறிது நேரங்கழித்து, "யாரங்கே? வாத்தியத்தை எடுங்களேன்," என்கிறார் தனம்மாள். அருகிலுள்ளவர்கள், "வைத்தியர் வேண்டாம் என்று சொன்னாரே, அதை மதிக்கலாகாதா?" என்று பரிவுடன் கேட்கிறார்கள். அவரோ, "நன்றாகத்தானிருக்கிறது. என்னையும் வீணையையும் பிரிக்கவா ஒரு வைத்தியர்? உயிர் பிரிந்தால் உடல் எதற்கு? எடுங்கள் வீணையை. பிறந்தோர் யாவரும் இறப்பது நிச்சயம். அதைப்பற்றி நான்கலங்குவேனா? தொன்று தொட்டுப் பரம்பரையாக வளர்ந்து வந்த இந்த அத்யாத்ம வித்தையும், வெள்ளிதோறும் நான் பகவதர்ப்பணமாகச் செய்யும் கீதாஞ்சலியும் ஒருவாறு முடிகின்றனவே என்று மட்டும்தான் சிறிது வருத்தம்" என்று மொழிந்து, தமது பணியை அன்றும் நிறைவேற்றுகிறார்.

"தரும மிகு கந்தகோட்டம்" அடங்கிய சென்னையில் இசைக் கலை. அன்பர்களும் இசை வணிகர்களும் எவ்வளவு பெயர்கள் உளர்! ஆனால் இவர் பெருமையை அறிந்து தளராத உதாரத்துடன் அவர்க்குப் பொரு

ளுதவி செய்து அவரைப் போஷித்து வரும் பாக்கியம் பெற்றவர் மூவர் அல்லது நால் வரே. அவர்களில் ஒருவர் புதுவை அர விந்த ஆசிரமத்தில் அகவிளக்கம் தேடும் துரைசாமி ஐயர் என்ற பெரியார். ஒருநாள் அவர் முன் நேரத்திலேயே வந்துவிடுகிறார். தனம்மாளும் உடனே வாசிக்க ஆரம்பிக்கி றார். முடியும் சமயத்தில், வழக்கமான நேரத்தை நினைத்துக்கொண்டு, ஸ்ரீ துவாரம் வேங்கடசாமி நாயுடு (பிரபல பிடில் வித்து வான்) வருகிறார். நிலையை அறிந்து அவர் "தெலியலேகனே மோஸ பொய்யனே!" என் கிறார். அம்மாள், "பரவாலேதண்டி, இங்கா வாயின்ஸ்தானு." என்று சொல்லி மீண்டும் வீணையை எடுத்துக்கொண்டு மற வாத வகையில் பைரவி ராகமும் தானமும் வாசித்து ரஸிகரான நாயுடுவைக் கௌர விக்கிறார். ஆனால் பக்குவமற்ற அறிவும் ஆடம்பரமும் உள்ள ஒரு நாதஸ்வர வித்து வான், இடை இடையே "ஹா ஹா!," "சபாஷ்!," என்று குறுக்கிடும்பொழுது, தனம்மாள், "தம்பிக்கு நல்ல பகுத்தறிவு. இடந் தெரிந்து ஸந்தோஷப்படுகிறார்," என்று நகைத்துக் கூறுகிறார்.

முன்கூறியபடி இவருடைய பாடாந்தர பலம் அற்புதமானது. ஐந்து பாஷைகளில், ஆயிரத்திற்கு மேலான உருப்படிகள் இவ ருக்குப் பாடம். அதனால் கிருஷ்ணஜயந்தி, வரலக்ஷ்மி விரதம், நரக சதுர்தசி, நவராத் திரி முதலிய புண்ணிய தினங்களில் அவ்வ வற்றிற்கிசைந்த கீர்த்தனைகளையே வாசிக்கி றார். பிராசீன உருப்படிகள் இவ்வளவு இவ ரிடம் இருந்தும், கிராமபோன் கம்பெனியார் எடுத்தது பன்னிரண்டு இசைத்தட்டுகளே; வெளிவந்தவையோ ஒன்பதுதான். அவை யும் ஸரியான விளம்பரமும், ஆதரவும் இல் லாமல், தெருவில் வெற்றிலைத் தட்டுகளாக விற்பனைக்குக்கூட வந்துவிட்டன!

கிருஷ்ண பகவானின் தயிரன்னம் உண்டு, யமுனைக்கரையில் இருந்த காக்கைகள் பொன் நிறமாயின. ஒரு யாகசாலையில் புரண்ட கீரியின் பாதி உடல் பொன்னாக மாறின விந்தையைப் பாரத நூல் கூறும். இங்ஙனமே தனம்மாளின் ஸங்கீதத்தை நீண்டகாலம் கேட்டுப் பயன் பெறுபவர்கள் சிலர் உண்டு. "இவருடைய பாட்டையும் வாசிப்பையும் பல ஆயிரம் அடிகள் பேசும் படமாக எடுக்க ஒரு அறிவாளி இல்லையே! நமக்குமாத்திரம் வெள்ளிக்கு வெள்ளி ஒரு யுகமாக இருக்கையில், இவருடைய ஸங்கீ தத்தை இந்தத் தலைமுறை பயன்படுத்திக் கொள்ள முன்வரவில்லையே!" என்று ஏக்கங் கொண்ட ஒரு பாஷகர், அம்மாளின் அனுக் கிரகம் பெற்று, அவருடைய சிலையைப் பூஜித்து, அவருடைய திவ்ய ஸ்ம்ருதியை ஏகாக்கிர பக்தியுடன் போற்றிவருகிறார்.

திருமருகல் நடேசன், மன்னார்குடி சின்னப் பக்கிரி, திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர், திருச்சி கோவிந்தஸ்வாமி பிள்ளை, சரப சாஸ்திரிகள், பட்டணம் சுப்ரமணிய அய்யர் முதலிய கன வித்துவான்கள் ஸமீப காலத் தில் வாழ்ந்தவர்கள். ஆயினும் அவர்களு டைய இசைத் தனத்தை ஒலிப்பதிவின மூலம் அழியாமல் பாதுகாக்கவில்லை. இது எவ்வளவு பெரிய நஷ்டம்? மேனாடுகளில் பாமர ஸங்கீதம், ஸம்பிரதாய ஸங்கீதம் என்ற இரு வகைகள் கருத்துடன் போற்றப் படுகின்றன. நம் நாட்டிலோ இசை யரங்கு களில் பாமர ஜனங்களின் கரகோஷத்தையும் டிக்கட்டு வசூலையும் நோக்கமாகக்கொண்டு உயர்தரக் கலையின் சிரத்தை முற்றிலும் ஒழிந்துவிட்டது. இந்த நிலைமையில் ஸங்கீ தத்தின் தரம் குறைந்து வருகின்றது என்று கண்ணீர் சொரிந்து என்ன பயன்?

சில வருஷங்களுக்கு முன் "காவேரி"யில் வெளியான ஒரு கட்டுரையில் பெரும் கூட் டங்களில் ஒலிபெருக்கியின் உதவியைக் கொண்டு நடக்கும் ஸங்கீத "கலாட்டா"வைக் கண்டித்து, அமைதியாக, ஸாவகாசமாக, விஸ்தாரமாக, உயர்ந்த ஸங்கீதத்தைக் கேட்டு அனுபவிக்க ஆவல் உள்ளவர்கள் சிறு குழு வினராகச் சேர்ந்து, தத்தம் பண்பாட்டுக்குத் தக்க வினிகைகளை ஏற்படுத்திக் கலையை வளர்ப்பதின் அவசியம் நன்கு விளக்கப்பட் டிருந்தது. வியாபாரக் கருத்தையே பிரதான மாகக் கொள்ளாமல் கலையை ஸம்ரக்ஷிக்கும் தீவிரக்கவலையுள்ள உன்னத லட்சியவாதி களின் ஒருமைப்பாடு தற்காலம் அதிக அவ சியம். அது உருவானால் மறைந்தது தவிர மிகுதியாக உள்ளசிறிதளவு நிஜஸங்கீதத்தை யாவது அழியாமல் நிலவரப்படுத்தலாம். இந்தக் கனவு நிறைவேறுமா!



# செயற்கை மழை

ஸி. வி. ராமகிருஷ்ணன்

ஐப்பசி மாதம் நடந்துகொண்டிருந்தது. தமிழ் நாட்டு மக்கள் அடை மழையின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். பழனியை அடுத்த எங்கள் கிராமமோ வானம் பார்த்த பூமியாகும். கடந்த இரண்டுவருஷங்களாகப் பருவமழைஇல்லாத காரணத்தால் எங்கள் பூமி வறண்டு கிடந்தது. நிலம் மோசம் செய்துவிடவே, பெரும்பாலோர் பட்டணத்தை நோக்கிக் கிளம்பி விட்டனர். எஞ்சியிருந்த நாங்கள் அடுத்த வருஷமாவது மழை பெய்யும் என்ற நம்பிக்கையில் கையிலிருந்த காசைக் கொஞ்சம் கொஞ்சமாக அழித்துவந்தோம். ஏதோ ரேஷனில் கிடைத்ததை வாங்கி உண்டு உயிருடன் நடமாடிக்கொண்டிருந்தோம். திடீரென்று ஒரு நாள் பேப்பரில் வந்த செய்தி எங்களைக் கலங்கச்செய்தது. நாட்டுப்புறங்களில் ரேஷனை எடுத்துவிடப்போகிறார்கள் என்ற செய்திதான். இதுவரையில் ரேஷனில் கிடைத்த பொருளையாவது நிச்சயமாக நம்பியிருக்க முடிந்தது. இனி கள்ள மார்க்கெட்டில் கால் வைக்கத் தயாராயிருந்தால்தான் வாழ முடியும் என்ற சந்தேகம் உண்டாயிற்று. மழை பெய்ய என்ன செய்யலாம் என்று யோசித்தோம்.

ஒரு நாள் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. ஆனால் மழை பெய்யவில்லை. எல்லோரும் எங்களூர் பிள்ளையார் கோயிலில் கூடினோம். மழை பெய்ய ஏதாவது வழி உண்டா என்பதைப்பற்றிச் சர்ச்சை ஆரம்பமாயிற்று.

“வருணபகவானுக்கு ஒரு யாகம் செய்துவிட்டால் தானாக மழை வந்துவிடும்” என்றார் வரும்படியை எதிர்பார்த்துக்கிடக்கும் ராம சாஸ்திரிகள்.

“மூன்று வருஷமாய் எவ்வளவோ பூஜை, யாகம் எல்லாம் செய்தும் ஒரு துளிகூட மழையைக் காணோம். இன்னும் என்ன யாகம் வேண்டிக்கிடக்கிறது. வேறு ஏதாவது வழி இருந்தால் சொல்லுங்கள்” என்றார் கோடியகத்துக் குப்புசாமி அய்யர்.

பக்கத்து ஊரில் எஸ்கிமோ ஒருவர் வந்திருக்கிறாராம். அவர் குடும்பமே மழை உண்டாக்கும் குடும்பமாம். அவரை அழைத்து வந்து மழை உண்டாக்கச் சொல்லலாமே என்றார் பிட் நோட்டீஸ் பிச்சுமணி.

எஸ்கிமோக்களில் சிலர் மழை வரவழைக்கும் சக்தி பெற்றிருந்தார்கள் என்பது நிச்சயம்தான். ஆனால் அவர்கள் அதை ரகசியமாக வைத்திருந்ததின் பயனாக ஒருவரும் அறிய முடியாமல் அவர்கள் அழிந்தபோதே அந்த இரகசியமும் அவர்களுடன் அழிந்துவிட்டது. அவர்களுடைய சந்ததி என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கும் அந்த எஸ்கிமோ ஏதோ வயிற்றுப்பாட்டிற்காக உலகத்தை ஏமாற்ற வந்திருக்கிறானே ஒழிய அவனுக்கு மழையைப்பற்றி ஒன்றுமே தெரியாது. விஞ்ஞானம் முன்னேறிக்கொண்டிருக்கும் இந்த நாளிலே மாய வித்தையை நம்பலாமா? என்று அடித்துப் பேசினார் அண்ணாசாமி அய்யர்.

அவர் பேசி முடிப்பதற்கும் குப்புசாமியின் மச்சினன் ராமசாமி எழுந்திருப்பதற்கும் சரியாக இருந்தது; அவன் பதினைந்து வருஷங்களுக்குமுன் ஆஸ்திரேலியாவிற்கு மேல்படிப்பிற்காகச் சென்றான். இப்பொழுதுதான் திரும்பியிருக்கிறான். அவனை அங்கே கூடியிருந்தவர்கள் பார்த்த பார்வை ஸூட்டுப் போடவும், இங்கிலீஷ் பேசவும் கற்றுக்கொண்டு வந்திருக்கும் இவனுக்கு மழையைப்பற்றி என்ன தெரியும் என்று பரிகாசம் செய்வதுபோல் இருந்தது. எல்லோரையும் பார்த்து ராமசாமி பேச ஆரம்பித்தான்.

“பெரியோர்களே! நீங்கள் என்னை ஒரு மாதிரியாகப் பார்ப்பதின் அர்த்தம் எனக்கு நன்றாகத் தெரியும். மேல் நாட்டு நாகரிகத்தில் மூழ்கியிருக்கும் இந்த மைனர் பையனுக்கு மழையின் அவசியத்தைப்பற்றியும் அருமையைப் பற்றியும் என்ன தெரியப் போகின்றது என்றுதானே யோசிக்கின்றீர்கள்? அப்படி நீங்கள் நினைப்பது தவறு என்பதைச் சிறிது நேரத்தில் அறிவீர்கள். பதினைந்து வருடங்களுக்கு முன்பு இந்தியாவைவிட்டு ஆஸ்திரேலியாவிற்குப் போகும்பொழுது கம்பளித் தொழிலில் தேர்ச்சி பெற்று வரவேண்டும் என்ற எண்ணத்

துடன் தான் கிளம்பினேன். அங்கே போன ஒரு மாதத்திற்குப் பிறகு நேர்ந்த சம்பவம் என்னுடைய வாழ்க்கையில் ஒரு புது மாறுதலை உண்டாக்கியது. ஒரு நாள் மாலை நானும், எனக்கு உணவு அளித்துக் கொண்டிருந்த வெள்ளையரும், வானத்தைப் பார்த்துக்கொண்டு வெளியே உட்கார்ந்து கொண்டிருந்தோம். வானத்தில் மேகங்கள் ஆங்காங்கே காணப்பட்டன. ஆனால் ஒரு துளிகூட மழை பெய்யவில்லை. எதிர்த்தாற் போல் தெரிந்த நிலங்களைப் பார்த்து அந்த வெள்ளையர் ஒரு பெருமூச்சு விட்டார்.

"என்ன ஒரு மாதிரியாக இருக்கிறீர்களே?" என்று கேட்டேன்.

"ஒரு மாதிரியாக இருக்கிறேனா! பின் எப்படி சந்தோஷமாக இருக்கமுடியுமப்பா? எதிர்தாற்போல் தோன்றும் நிலங்களைப் பார். கோதுமை முளையிடும் இந்தச் சமயத்தில் ஒரு அரை அங்குலம் மழை இருந்தால் போதும். எல்லாம் பசுமையாக வளர்ந்து நாட்டை உணவுக் களஞ்சியமாக ஆக்கிவிடும். கடந்த இரண்டு வருடங்களாக வேண்டியகாலத்தில் அரை அங்குல மழை பெய்யாத காரணத்தினால், கோதுமைப் பயிர் அழிந்து பல கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டிருக்கின்றது. இது மாதிரி இன்னும் ஒரு வருடம் இருந்தால், நாட்டில் பஞ்சம் ஏற்பட்டு நாங்கள் மடியத்தான் வேண்டும். இந்த மேகங்களை அடக்கி மழை பெய்யும்படி உன்னைப்போலிருக்கும் விஞ்ஞானிகள் முயன்றால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று அங்கலாய்த்துக்கொண்டார்.

அப்பொழுது அவர்கள் இருந்த நிலை நீங்கள் இப்பொழுது தவிக்கும் நிலையை ஒத்து இருந்தது. அன்று இரவு முழுவதும் என் வீட்டுக்காரர் கடைசியாகக் கூறின வார்த்தைகள் என் மூளையைக் குழப்பிக் கொண்டே இருந்தன. மறு நாள் காலையில் எழுந்தவுடன் அந்த ஊரில் உள்ள காலேஜில் இருக்கும் பௌதிக விஞ்ஞானியிடம் சென்று செயற்கை மழையைப் பற்றி ஆராய்ச்சி செய்ய அனுமதி அளிக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டேன். "அப்பா நானும் அதில் மிகவும் சிரத்தை கொண்டவன், எனக்கு அரசாங்கம் செயற்கை மழையைப்பற்றி ஆராய்ச்சி செய்யப் பணம் அளித்திருக்கிறார்கள். என்னுடன் ஒத்துழைக்க ஒரு இளம் சிங்கம் வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தேன். நீ கிடைத்ததைப் பற்றிச் சந்தோஷம். இன்று முதல் இருவரும் அந்த ஆராய்ச்சியில் தீவிரமாக இறங்கலாம் என்று கூறினார். அன்றுமுதல் எங்கள் ஆராய்ச்சி ஆரம்பமாயிற்று.

முதன் முதலில் இயற்கையில் மழை எப்படிப் பெய்கிறது என்பதைப்பற்றி ஆராய்ந்தோம். மழை பெய்வதற்கு முன்பாக ஆகாயத்தில் அடர்த்தியான மேகங்கள் தென்படுகின்றன (curmulus clouds). இந்த மேகங்கள் கோடிக்கணக்கான மழைத்துளிகளாலானவை. இத்துளிகள் ஆகாயத்தில் மேலே செல்லச் செல்ல, சீதோஷ்ணம் temperature) குறைந்துபோய் இம் மழைத் துளிகள் இன்னும் குளிர்ச்சி அடைந்து பனிக்கட்டியாக மாறும் சீதோஷ்ணத்தை அடைகின்றது. இத்துளிகள் இன்னும் மேலே சென்று அதிக குளிர்ச்சி நிலையை (supercooled stage) அடைகின்றன. இங்கு சீதோஷ்ணம் —15°c ஆகும். இந்தச் சீதோஷ்ணத்தில் நீர்த்துளிகள் பனித் துண்டுகளாக (snow flakes) பரிமாணத்தில் பெருக்க ஆரம்பிக்கின்றன. இவை மெதுவாகக் கீழே இறங்க ஆரம்பித்து, மேகத்திற்குக் கீழே பெரிய பெரிய நீர்த்துளிகளாக மாறி, மழையாகப் பெய்ய ஆரம்பிக்கின்றன.



மேகங்கள் தலையைக் காட்ட ஆரம்பிக்கின்றன

ஆகாயத்தில் மேகம் இருந்தும் மழை பெய்யாததற்குக் காரணம் என்ன? மேகங்

களில் மழைத்துளிகள் அதிகமாக இல்லாமல் இருப்பதும், அவைகள் இருந்தாலும், அதிக குளிர்ச்சி அடைவதற்கு வேண்டிய சீதோஷ்ணம் இல்லாமல் இருப்பதும்தான் காரணம். செயற்கையில் இந்த மேகங்களுக்கு மழை பெய்வதற்கு வேண்டிய சௌகரியங்களை ஏற்படுத்திக் கொடுத்து மழை பெய்யும்படி செய்வதுதான் செயற்கை மழை உண்டாக்குவதின் தத்துவமாகும்.



வெகு உயரத்தில் மேகக் கூட்டம். பலன் மழை இல்லை!

முதன் முதலில் Laugmuir என்ற விஞ்ஞானி ஈரமற்ற பனிக்கட்டி (Dry ice) எனப்படும் solid carbon dioxideஐ உபயோகித்து மழை பெய்யச் செய்யலாம் என்று கண்டார்.

இந்தக் கார்பன் டை ஆக்ஸைடை $-80°C$க்கு குளிரவைத்தால் அது திடரூபத்தில் துளிகளாக மாறும். இதை மேகத்திற்குமேலே தூவினவுடன் புகைபோலப் பரவி நுண்ணிய ஸ்படிகங்களாக (Crystals) மாறுகின்றன. இவைகள் மேல் எழும்பி, குளிர்ந்த சீதோஷ்ண நிலையில் பெரிதாகி மழையாகப் பெய்கின்றது.

இந்தத் தத்துவத்தைப் பரீக்ஷிக்க மேகங்கள் காணப்பட்ட ஓர் நாள் மாலை solid carbon-dioxideஐ எடுத்துக்கொண்டு ஏரோப்ளேனில் மேகத்திற்கு மேலே பறந்து சென்றோம். மைலுக்கு 10 முதல் 15 lb, solid carbon dioxideஐத் தூவிவிட்டு மேகத்தின் ஒரு பக்கமாக ஏரோப்ளேனைச் செலுத்திச்சென்று ஏற்படும் மாறுதல்களைக் கவனிக்க ஆரம்பித்தோம். மற்றும் சில விஞ்ஞானிகள் கீழேயிருந்துகொண்டு ஏற்படும் மாறுதல்களைக் கவனிக்க ஆரம்பித்தனர். இந்த ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட மேகங்கள் தரை மட்டத்திற்குமேல் 12000° அடி உயரத்தில் காணப்பட்ட மெல்லிய மேகங்களாகும் (thin clouds). இந்த ஆராய்ச்சியில் dry iceஐப் பிரயோகித்த 15 நிமிடங்களுக்குப் பின் நீர் உறைய ஆரம்பித்தது. பின் அவைகள் மேல்நோக்கிச் செல்ல ஆரம்பித்து, 20 நிமிடங்களுக்குப்பின் பனித்துளிகள் உண்டாகி, கீழே இறங்கி 25 நிமிடங்களுக்குப்பின் நீர்த்திவலைகளாகத் மாறுவதைத் தூரதரிசினிமூலம் கண்டோம். இந்தப் பரிசோதனையில் நீர்த்திவலைகள் தரை மட்டத்தை அடையவில்லை. காரணம் மேகங்கள் மிகவும் லேசாகவும், தரை மட்டத்திற்கு மிகவும் அதிக உயரத்தில் இருந்ததும்தான்.

மற்றொரு பரிசோதனையில் 8000 அடி உயரத்தில் உள்ள சிறிது அடர்த்தியான மேகங்கள் எடுத்துக்கொள்ளபட்டன. அதன்மேல் உள்ள



அடர்த்தியான மேகக் கூட்டம். விஞ்ஞானி கை வரிசையைக் காட்டினால் மழையைக் கக்கும்

சீதோஷ்ணத்தின் அளவு–7°c ஆகும். முன் மாதிரியாக ஆகாய விமானத்தில் சென்று 1 மைலுக்கு 100 பவுண்டு வீதம் dry ice இறைக்கப்பட்டது. இந்தப்பனிக்கட்டித்துளிகள் 20000 அடிவரை உயரச் சென்று, 10°cக்குக்குளிர்ச்சி அடைந்துபெருகி, கீழே இறங்கி நீர்த்திவலைகளாக மாறி மழையாகப் பெய்தது. 100 lbக்குப் பதிலாக 300 பவுண்டு dry iceஐ உபயோகித்தால் 30000 அடிக்குக்கூட அவைகள் உயர எழும்பும், என்று கண்டுபிடிக்கப்பட்டது. இந்த முறையின் மூலம் ½ அங்குலம் மழை பெய்யும்படி செய்யலாம். இந்தச் சோதனைகளில் மழைத்துளிகள் உண்டாவதை ரேடார் என்ற கருவியின் மூலம் கண்டுபிடிக்கலாம்.

அமெரிக்காவிலும் 'செயற்கை மழை' உண்டாக்குவதைப் பற்றி ஆராய்ச்சி நடத்தி வருகின்றனர். அங்கு dry iceக்குப் பதிலாக silver Iodide என்ற பொருளை உபயோகிக்கலாம் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. dry iceஐப் போல் இதுவும் ஸ்படிகப் பொருளாகும். dry iceஐ விட இது விலை அதிகமாக இருந்தபோதிலும் கூட இதைச் சேகரித்து வைப்பதும், ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்வதும் சுலபமாகும். ஆனால் silver iodideஐக்கொண்டு மழை பெய்யச் செய்த முயற்சி இதுவரை பலனளிக்கவில்லை. அதில் அவர்கள் வெற்றி கண்டால் மிகவும் அதிருஷ்டசாலிகள் தான்.

மேலே கூறியவற்றினின்றும் ஆகாயத்தில் மேகங்கள் இருந்தால் dry iceஐக்கொண்டு அவைகளைத் தாண்டி மழை பெய்யச் செய்யலாம் என்று நீங்கள் அறியலாம். மேகத்தின் மேல் சீதோஷ்ணம்—7°c முதல்—15°c வரை இருந்தால் உடனே மழை பெய்யும். மேகத்தின் கனம் அதன் அடிப் பாகத்திற்கும் தரை மட்டத்திற்குமுள்ள உயரத்திற்குச் சமமாகவோ அல்லது அதிகமாகவோ இருந்தால் மழைத்துளிகள் தரையை அடைய ஏதுவாகும்; 15 நிமிட நேரத்தில் மேகத்தின் அடிப்பாகத்திற்குச் சமரனமுள்ள பரப்பில் ¼" மழை பெய்ய அனுகூலமாகும்.

இதனின்றும் மழையை உண்டுபண்ண முடியாது. ஆனால் நம் கிராமங்களில் கடந்த மூன்று வருடங்களாக நம்மைப் பார்த்து இளித்துவிட்டுச் செல்லும் மேகங்களை அடக்கி மழை பெய்யச் செய்திருந்தால் நம் வீடெல்லாம் உணவுக் களஞ்சியமாக மாறி இருக்கும். இவ்வருடமாவது மாயத்திலும் மந்திரத்திலும ஏங்கிக் கிடக்காது அவைகளுக்குச் செலவிடும் பணத்தை என்னிடம் கொடுங்கள். இந்த மேகங்களை மழை பொழியச் செய்து நீருக்கு ஏங்கிக் கிடக்கும் பயிர்கள் அவைகளைப் பருகி, பயிர் உயர்ந்து, வரப்பு உயர்ந்து, குடி உயர்ந்து, நாடு உயர்ந்து நாம் இன்புற முயலுவோம்" என்று கூறி உட்கார்ந்தான்.

ஒரு நிமிஷம் எங்கும் நிசப்தம். மணி எட்டாகி விட்டது. தலைவர் அவர்கள் "அன்பர்களே, இந்தப் பையன் சொல்வதில் கொஞ்சம் நம்பிக்கை ஏற்பட்டிருக்கும் என்று நினைக்கிறேன். கடைசியாக அவன் ஏற்பாட்டிற்கு நாம் ஒத்துக்கொள்வோம். அவன் பரிசோதனை வெற்றிபெற்றால் நாம் இன்புற்று வாழ்வோம். இல்லாவிடில் ஒழிந்து மடிவோம். விஞ்ஞானம் வாழ்க" என்று கூறி, ஆற்றங்கரையை நோக்கி நடக்க ஆரம்பித்தார். விஞ்ஞான வெற்றியில் நம்பிக்கை கொண்டு நாங்கள் அவரைப் பின் தொடர்ந்தோம். ●

# லண்டன் - கடிதம்

*லீலா கோபாலன்*

ஒவ்வொரு மாதமும் லண்டன் சீதோஷ்ண நிலையைப்பற்றி முதலில் எழுத ஆரம்பிக்கும் மாதிரியே, இந்தக் கடிதத்தையும் இங்கு ஓயாது பெய்துகொண்டிருக்கும் மழையைப்பற்றிச் சொல்லி ஆரம்பிக்கிறேன். இந்தப் பிப்ரவரி மாதக் கடைசிக்குள் இன்னம் 1½ அங்குலம் மழை பெய்தால் போதும். 70 வருஷங்களுக்குப் பின் அதிக மழை பெய்த வருஷம் 1951 தான். சென்ற ஜூலை மாதத்திலிருந்தே விட்டுவிட்டுப் பெய்துகொண்டிருக்கும் இந்த மழை, இந்த மாத ஆரம்பத்திலிருந்து அதிகம் என்றுதான் சொல்லவேண்டும். லண்டனின் சென்ற வார ஞாயிற்றுக்கிழமைப் பத்திரிகைகள் எல்லாம் 'எங்கும் பெரு வெள்ளம், எந்தப் பயிரும் நிலத்தில் இல்லை' என்ற தலையங்கம் கொடுத்து ஒவ்வொருவர் மனக் குறையைப் பற்றியும் விவரித்து எழுதி இருந்தன. பயிர்களுக்கு அதிக மழை அபாயம் என்பது எதிர்பார்க்கப்படுவதுதானே. பண்ணைக்காரர்கள் ஒவ்வொருவரும் இந்தக் குளிர் காலத்தையும் மழையையும் சபித்துக்கொண்டு வீட்டிற்குள்ளேயே அடைக்கலம் புகுந்து இருக்கிறார்கள். ரொட்டி செய்வதற்கு வேண்டிய கோதுமை மாவுக்கு வேறு தட்டு வந்துவிடும் என்று பயப்படுகிறார்கள். சென்ற சில மாதங்களாகவே மழை இருப்பதால் இரண்டு கால நடவுகளும் தடைப்பட்டு விட்டனவாம்.

நிலச் சொந்தக்காரர்கள் தவிக்கின்றனரே, இந்த மழையால் லாபம் அடைந்தவர் யாராவது இருக்கின்றனரா என்றும் இந்தப் பத்திரிகைகள் சொல்லுகின்றன. பட்டணங்களில் உள்ள கடைக்காரர்பாடு கொண்டாட்டம்தான். ஏன்? மழை வியாபரத்தை விருத்தி செய்கின்றதாம். சாதாரண நாட்களில் எல்லாம் பெண்கள் கடைவீதிகளில் ஒவ்வொரு கடை வாசலிலும் அலங்கரிக்கப்பட்டிருக்கும் ஜன்னல்களைப் பார்த்துக்கொண்டே நடந்து சென்று, இன்னதை வாங்கவேண்டும் என்று மனதைத் திடப்படுத்த முடியாமல் சஞ்சலப்படுவார்கள். ஆனால் மழையில் யார் தான் நனைய முடியும். அதற்காக ஏதாவது ஒரு கடையில் உள்ளே புகுந்து வேண்டிய பொருளை வாங்கி விடுகிறார்களாம். சென்ற ஜூன் மாதம் முதல் மழைக் கோட்டுகள், ரப்பர் செருப்புகள், குடைகள் எல்லாம் ஏக கிராக்கி ஆகி விலையும் வஞ்சனை இன்றி அதிகரிக்கப்பட்டிருக்கிறது. வீட்டிலேயே மழைக்குப் பயந்து இருக்கிறவர்கள் புத்தக சாலைகளுக்கு வரும்படியை அதிகப்படுத்துகின்றனராம். எவ்வளவு நாழிதான் வீட்டு வேலையையே பார்த்துக்கொண்டிருக்க முடியும்? தப்பித் தவறி வெளியில் செல்லத் துணிந்தவர் சினிமா கொட்டகை வரையில்தான் செல்ல முடிந்ததாம். முடிவு சினிமா வரும்படியும் 25 சத விகிதம் அதிகரித்து உள்ளது என்று தெரிகிறது.

நிலக்கரி வியாபாரிகள் இந்த மழையைச் சாபமிட்டுத் தள்ளுகிறார்கள். ஏற்கனவே கரிப் பஞ்சம், மின்சாரம், காஸ் (Gas) கரி எல்லாவற்றையும் முடிந்தவரை குறைத்து உபயோகியுங்கள் என்று அரசாங்கம அலறும் பொழுது, வீட்டிலேயே இருப்பவர் அதிகம் உபயோகிக்காமல் குளிரில் நடுங்க முடியுமா? நீங்களே எங்களிடம் கொஞ்சம் பச்சாத்தாபப் படுங்களேன்.

உடல் சுகத்திற்கு சூரிய பகவான் அருள் வேண்டாமா? இந்த மழை இன ஜுரத்தை யும் ஜலதோஷத்தையும் ஜாஸ்திப் படுத்து கிறதே தவிர ஒன்றும் பயனில்லை. மனதை யும் நம் மனதில் உள்ள எண்ணங்களையும் அறியும் மனத்தத்துவ நிபுணர்கள், இந்த மழைதான் நம் நரம்புகளைத் தளரச் செய்து, பெயரிட்டு அழைக்க முடியாத வியாதிகளை எல்லாம் பரவச் செய்கிறது என்கின்றனர். ஆனால் எல்லோரையும்விடச் சில வாய ரட்டை அடிக்கும் நண்பர்கள் எல்லாச் சாமான்களையும் அரசாங்கம் தன் ஆதிக்கத் தின்கீழ் கொண்டுவந்து கட்டுப்பாடு செய் வதுபோல், மழையையும் ஏன் கட்டுப்பாடு செய்யக்கூடாது என்று கேட்கின்றனர். அவர்கள் கேட்பது இதுதான்—If nationalisation causes a shortage, why don't we nationalise the rain? லண்டனில் 10 நிமிஷ நேரத்திற்குச் சூரியன் நன்ருகப் பிரகா சித்தால், நாங்கள் படும் சந்தோஷத்தை என்னல் எழுத முடியாதுதான். எழுதினல் நீங்கள் நம்புவீர்களா?

பறக்கும் ஸாஸர்களைப் பற்றி நான் எழுதி யது உங்களுக்கு மறந்து இருக்காது என்று நினைக்கிறேன். அதைப்பற்றிச் சமீபத்தில் ஒரு அமெரிக்க விஞ்ஞானி சொல்லி இருப்ப தைக் கட்டாயம் நானும் உங்களுக்கு எழுத வேண்டும். "பறக்கும ஸாஸர் ஒரு பெரிய பிளாஸ்டிக் பலூன். 100 அடி குறுக்களவு உள்ள இந்தப் பலூன்கள் ஸ்கைஹூக் (Skyhook) என்று அழைக்கப்படுகின்றன வாம். ஒரு மணி நேரத்திற்கு 200 மைல் வேகத்தில் செல்லும் இந்தப் பலூன்கள் சுமார் 20 மைல் உயரத்திலும் செல்கின்றன வாம். இவற்றுள் அணுக்களின் சக்திகளை ஆராய்ந்து பதிவு செய்யச் சில கருவிகள் பொருத்தப்பட்டு இருக்கின்றன. முதலில் ஆராய்ச்சிக்காக ஆரமபிக்கப்பட்ட இவை களை ரகசியமாக வைக்கவேண்டி இருந்தது. ஆனல் இப்பொழுது குட்டை வெளிப்படுத் தலாம்" என்று அந்த நிபுணர் உத்தரவு கொடுத்துவிட்டார். மேற்படி பலூன்களின் படங்களும் ஜனங்களின் பார்வைக்காகப் பிர சுரிக்கபபட்டிருப்பதால், பறக்கும் ஸாஸர் களைப் பற்றிய பீதி அடியோடு ஒழிக்கப்பட் டது என்றுதான் சொல்லவேண்டும்.

போன மாதம் லண்டனில் நிலக்கரிப் பஞ்சம் என்றும் ஜனங்கள் எவ்வாறு கஷ்டப்படு கின்றனர் என்றும் உங்களுக்குச்சொன்னேன் அல்லவா? கடந்த 20, 25 தினங்களாக மாமி சத்திற்கும் பஞ்சம் வந்துவிட்டது. இந் நாட் டாருக்கு முக்ய ஆகாரம் மாமிசம். இதற்குத் தட்டுப்பாடு வந்துவிட்டால் கேட்க வேண டுமா? ஆண் பெண், குழந்தைகள் அனை வரும் உணவு மந்திரி வெப் (Webb) என்ப வரை வாயார வைதுகொண்டு இருக்கிருர் கள். வெளி நாடுகளாகிய ஆர்ஜண்டைஞ, நியூஜீலந்து, ஆஸ்திரேலியா இவற்றிலிருந்து தான் இந்நாட்டுக்கு மாமிசம், வெண்ணெய், சீஸ் (Cheese) எல்லாம் வரவேண்டும். முக் யமாக ஆர்ஜண்டைஞவிலிருந்துதான் அதிக மாக வரவேண்டும். அந்நாட்டு வர்த்தகர்கள் சண்டைக்கு முன், ஏன், சண்டை நடந்து கொண்டு இருக்கும்போதே, பிரிட்டன் மாமி சத்திற்காகக் கொடுத்துவந்த விலையைவிட 5 பங்கு அதிகம் தற்போது கேட்கிருர்களாம். சமரசமாக விலையைத் தீர்த்துவைக்க இரு அரசாங்கமும் எவ்வளவு கலந்து பேசியும் பய னில்லை. அதனல் ஸ்ரீமான வெப் மாமிசமே வேண்டாம் என்று சொல்லிவிட்டு ஏற்கனவே கொடுக்கப்பட்டிருந்த ரேஷனையும் குறைத்து விட்டார். கேட்கவேண்டுமா ஜனங்களின கோபத்திற்கு. "இந்தத் தற்கால உணவு மந்திரிக்குத் தம் பதவியைச் சரிவர வகித்து ஜனங்கள் பசியைத் தீர்க்கத் திறமை இல்லை. நீங்கள் ஏன் மந்திரிப் பதவியில் இருக்கிறீர் கள்" என்றெல்லாம் ஜனங்கள் கேள்விமேல் கேள்வியாக அடுக்குகிருர்கள். "தம் மந்திரி அனுமதித்து இருக்கும் மாமிச ரேஷனை ஒரு பூதக் கண்ணுடி வைத்துத்தான் பார்க்க வேண்டும்" என்று பூதக் கண்ணுடியுடன் ஒரு வர் படமும் போட்டு இருந்தார். "வெப் கொடு க்கும் ரேஷனைப் பிரிட்டன் விழாக் கண்காட் சிச் சாலையில் வெளிநாட்டார் பார்க்க வைக்க வேண்டும்" என்று ஒரு அன்பர் சிபார்சு செய்கிருர். லண்டனுக்கு வரும் வெளி நாட்டாரை எப்படி சாப்பாடு போட்டுச் சமா ளிக்கப் போகிருர் என்றும் பரிதாபத்துடன் சிலர் கேட்கின்றனர். மற்றெரு வேடிக்கை கேளுங்கள்: "மாமிசத்தைக் குறைவாகச் சாப் பிட்டால் உடம்பில் சதை போடாது. எப்போ தும் பெருமனைக்குறைக்க வழியைத்தேடாமல் நிதானமாகவே இருக்கமுடியும் இந்தச்சொல்ப ரேஷனினல். எனக்கு எப்படி உடம்பு சிலு வையாகவும் பார்க்கக் கடைந்தெடுத்த தந் தப் பதுமை போல இருக்கிறது. எல்லாம் குறைந்த மாமிச ரேஷன்தான்" என்று உணவு மந்திரி சொன்னுராம். என்ன கேலிக் கூத்துக்கள் பாருங்கள். இதன் முடிவுகள் எல்லாம் காய்கறி விலையை ஒரே அடியாய்த் தூக்கிவிட்டது. கடைகளில் அரிசி ஏராள மாக இருந்தது, இல்லை என்று கடைக்காரர் களைக் கைவிரிக்கச்செய்துவிட்டது. "காய்கறி

களைச் சாப்பிட்டு வசிக்கும் நீங்கள் அதிர்ஷ்டசாலிகள்தான்" என்று எங்களைப் பார்த்து யாவரும் பொறாமைப் படுகின்றனர்.

1951ஆம் வருஷக் கோடைக்காலத்திற்காக லண்டன், பாரிஸ் நவநாகரிகக் குறிப்புகள் சென்ற வாரம் வெளிவந்து இருக்கின்றன. போன வருஷம் எல்லோரும் தலை மயிரைக் குட்டையாக வெட்டிக்கொண்டு அர்ச்சின்-கட் ஸ்டைல் (Urchin cut style) என்று பெருமைப் பட்டுக்கொண்டனர். சில சமயம் பின்னால் இருந்து பார்த்தால் நம் எதிரில் இருப்பவர் ஆணா பெண்ணா என்றுகூடத் தெரியாமற் செய்தது, இந்தப் புகழ்பெற்ற அர்ச்சின் கட். இந்த வருஷம் தலைமுடி நீளமாக இருக்கவேண்டுமாம். சுமாராகக் கழுத்தில்தான் சிங்காரம் எல்லாம் செய்யப்பட்டு, சுருட்டி வளைத்து இந்த முடி தொங்க வேண்டுமாம். உடைகளின் இடுப்பு எவ்வளவு சின்னதாக இருக்கமுடியுமோ அவ்வளவு பிடிப்பாக இருக்கவேண்டும். மஞ்சள் நிறம் தான் இந்த வருஷ நாகரிக நிறம். அநேகமாக எல்லா விலை உயர்ந்த நாகரிக உடுப்புகளும் இந்த நிறம்தான். கோட்டு உடைகளின் பொத்தான்கள் ஒரு சின்ன காப்பிக் கோப்பையின் ஸாஸர் அளவுக்கு இருக்க வேண்டுமா? உங்களுக்குச் சிரிப்பாகத் தோன்றலாம். ஆனால் இது பொய் அல்ல. பாரிஸ் நகரத்தின் நாகரிகக் குறிப்புகள் என்றால் மறுத்துக் கூறவோ பரிகாசம் செய்யவோ ஒருவித உரிமையும் நமக்கு இல்லை.

மேற்சொன்ன நாகரிகச் சின்னங்களுடன் நிறைய வைர நகைகள் போட்டுக் கொள்வது ஒரு முக்ய குறிப்பு. வைர நகைகளைப் பற்றி எழுதும்போது நிஜமான வைரமாக இருக்க வேண்டும் என்பது இல்லை. சாதாரண கண்ணாடிக் கல்லாக இருந்தாலும் போதும். நகை நகைதானே? அற்பச் செலவில் வாங்கினால் இந்த வருஷம் போட்டுக்கொண்டது அடுத்த வருஷம் பாஷன் இல்லாததால் தூக்கி விட்டெறிய முடியும். நம்மைப்போல் ஏகச் செலவில் வாங்கிய வைரத்தோட்டை மறு வருஷம் இது பழசாய்ப் போய்விட்டது என்று அப்புறம் போட முடியுமா, அல்லது வருஷா வருஷம் தட்டானுக்குக் கூலி கொடுத்து அழித்துச் செய்ய முடியுமா? கழுத்தைச் சுற்றிப் போடப் புதிதாக வந்திருக்கும் இரு புதிய ஆபரணங்களைப் பற்றி உங்களுக்குக் கட்டாயம் தெரியவேண்டும். இந்த நாட்டிலே பழைய காலத்தில் எல்லாம், ஏன் தாத்தா காலத்தில் தான் ஆண்மக்கள் எல்லோரும் கடிகாரத்தில் ஒரு கன தங்கச் சங்கலியும் அதிலே ஒரு முழுக்கோட்டைப் பவுனும் போட்டுக்கொண்டு இருப்பார்களாம். அதெல்லாம் அந்தக் காலம்தான். இப்போது பெண்களுக்காக அதே மாதிரி சங்கலியும் அதிலே ஒரு காசுக்குப் பதில் பல காசுகள் கோக்கப்பட்டிருக்கின்றன. அசல் நம்நாட்டுக் காசுமாலைதான். ஆனால் காசுகள் தூர தூரத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன, தங்கம மலிவா, லண்டனிலே. அப்படியானால் நீங்கள் வரும்போது எனக்கும் ஒன்று வாங்கிவர முடியுமா என்று நீங்கள் எழுதும் முன்னமே நான் சொல்லிவிடுகிறேன். மேற்சொன்ன காசுமாலை வெறும் கில்ட்; ஆனால் கில்ட் எப்போதும் போகாமல் பளபளவென்று நம்மை ஏமாற்றுகின்றன.

பாட்ரிஷியா மாரிஸன் (Patricia Morrison) என்றொரு பெயர்போன நடிகை அமெரிக்காவிலிருந்து போன மாதம் லண்டனுக்கு வந்து இருக்கிறார். நியூயார்க்கில் ஒரு பிரசித்திபெற்ற நாடகத்தில் நடித்துவந்த இந்தப் பெண்மணி, லண்டனில் நடக்கப்போகும் அதே நாடகத்தில் நடிக்க ஒப்புக்கொண்டிருக்கிறார். இவர் இங்கு வந்த மறுநாள் லண்டனில் உள்ள எல்லாப் பத்திரிகைக்காரரும் வழக்கம்போல் பார்க்கச் சென்றனர். அவர்கள் கண்களில் முதலில் பட்டது இந்த அம்மையாரின் நீண்ட தலைமயிர்தான. வந்தது ஆபத்து. மறுநாள் பகல், சாயங்காலம், மறுநாள் காலை எல்லாப் பதிப்புகளும் இந்தத் தலைமுடியின் நீளம் என்ன, அவர் தலையை எப்படி வாரி முடிக்கிறார், எத்தனை நிமிஷம் பிடிக்கிறது, எந்த ஷாம்பூ (shampoo) உபயோகப்படுத்துகிறார் என்றெல்லாம் விபரங்கள் பெரிய பெரிய தலையங்கத்துடன் கொடுக்கப்பட்டிருந்தன. "உலகத்திலேயே இவருக்கு நீளமான தலை முடி" என்று எழுதி இருந்ததைப் பார்க்க எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. எங்கள் நாட்டுப் பெண்களில் நீள முடி இல்லாதவர்தான் அதிசயம் என்று நானும் திரும்ப எழுதலாமா என்றுகூட நினைத்தேன். ஆனால் எழுதிய உடன் என்னைக் கேள்விகள் கேட்டுத் தொந்தரவு படுத்துவார்கள் என்ற பயம் உடனே வந்துவிட்டது.

நம் நாட்டுப் பெண்கள் அநேகர் இங்கு வந்த உடன் தலைமுடியை வெட்டிக்கொண்டு விடுகின்றனர். நாகரிகம் முதல் காரணம், இரண்டாவது இந்தக் குளிரில் நீளமுடியைச் சுத்தமாக வைப்பது கஷ்டப்படுகிறது. எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யமுடியுமா என்று என் சிநேகிதி ஒருத்தி கேட்டிருந்தாள். எண்ணெய் கிடைப்பது இல்லை. ஆனால் எண்ணெய் அங்கிருந்து தருவித்தால்கூடக் குளிப்

பதற்கு வசதி இல்லை. பீங்கான் தொட்டிக்குள் எண்ணெய் ஸ்நானம் செய்வது சாத்தியமா? குளிரில் எவ்வளவு நாழி நடுங்கிக்கொண்டு சீயக்காய் தேய்க்க முடியும்? அதனால் தலை முடியைச் சுத்தப்படுத்த ஷாம்பூ. இதனாலே அநேகம் பெயர்களுக்கு முடி உதிர்ந்து விடுகிறது. நாளடைவில் உதிர்ந்து கொண்டே வந்தால், சரி கடைசியில் குட்டையாகவே வெட்டி, கஷ்டப்படாமல் இருப்போமே என்றுதான் தோன்றும். எலெக்ட்ரிக் ஹேர் பிரியர் (Hair Prier) பெண்களுக்கு மிகவும் உபயோகப்படுகிறது. தலை முடியை உலர்த்த நாள் பூராவும் காத்திருக்காமல் சில நிமிஷங்களில் சூடான காற்றினால் உலர்த்தி வாரி முடிக்க இது எவ்வளவோ சௌகரியமாக இருக்கிறது. அதுவும் பெண் குழந்தைகள் ஈரத் தலையுடன் பள்ளிசெல்ல வேண்டியதில்லை.

பிலிஸ் பெண்டிலி (Phyllis Bentley) என்ற ஒரு பெயர்போன பெண் எழுத்தாளர் மனைவிமார்களுக்கு, அதாவது குடும்பப் பெண்களுக்கு என்று ஒரு தனி மந்திரி கொடுங்கள் என்று அரசாங்கத்தைக் கேட்கிறார். அதிகப்படியாக விற்கும் அநேகம் புத்தகங்களுக்கு ஆசிரியை ஆன இந்தப் பெண்மணியும் ஒரு குடும்பப்பெண்தான். 'தங்களுக்கு' என்று ஒரு பெண் மந்திரி இருந்தால் குற்றம் குறைகளை வாயாரச் சொல்லி, தீர்த்துக்கொள்ள வழி உண்டு. பெண் உள்ளத்தைப் பெண்தான் அறியமுடியும். எல்லாக் குடும்பப் பெண்களும் சேர்ந்து முறை இடுங்கள்' என்கிறார்.

இந்த மந்திரியின் பொறுப்புகள் கொஞ்சம் கஷ்டமானவைகளாகத்தான் இருக்கும் என்று எச்சரிக்கை கொடுக்கிறார். அரசாங்கத்தில் நடக்கும் சிக்கலான பிரச்னைகளை எல்லாம்கூடக் குடும்பப் பெண்களுக்குப் புரியுமாறு தெளிவாக எடுத்து விவரிக்க வேண்டும். ஏன், எப்படி என்ற கேள்விகளுக்கு எல்லாம் உடனே பதிலும் கொடுக்கவேண்டும் என்றெல்லாம் கண்டிப்பாகக் கூறுகிறார். பாவம்! எந்தப்பெண்மணி பொறுப்பு ஏற்பாரோ அவருக்கு நம் அனுதாபங்களைத் தெரிவிக்கவேண்டியதுதான். சாதாரணமாக வீட்டில் புருஷன், குழந்தைகள், மாமி, நாத்தி, உறவினர்களைச் சமாதானப் படுத்தவே கஷ்டப்படுகிறதே; தேசத்தில் உள்ள சகல குடும்பப் பெண்களையும் சாந்தப்படுத்த வேண்டும் என்றால் அதிக பொறுமையும் திறமையும் வேண்டும்.

திருட்டுப் போன கல்லைப்பற்றி நான் எழுதியது ஞாபகம் இருக்கிறதா? அதைப் பற்றி மேலும் ஒரு வேடிக்கையான செய்தி ஒன்று இருக்கிறது. துப்பறியும் நிபுணர்களான ஸ்காட்லண்டு யார்டு பேர்வழிகள் ஞான திருஷ்டியினால் சகலவிஷயங்களையும் பார்த்துச் சொல்லும் ஒரு டச்சுக்காரரை வரவழைத்து இருக்கிறார்களாம். இந்த டச்சுக்காரர் தாராளமான உதவிகளை எல்லாம் கொடுப்பதாக வாக்களித்து இருக்கிறாராம். இங்கிலாந்து சரித்திரத்திலேயே முதல் தடவையாக இப்போதுதான் மந்திரம் தந்திரம் எல்லாமா ஒரு திருட்டைக் கண்டு பிடிக்கக் கையாளப் படுகிறதாம்.

சந்திர நாகூரில் ஒரு பிரஞ்சு தம்பதிகளுக்குப் பிறந்த Mademsoielle Lys Chelys என்ற பெண்மணி 60 நாள்களுக்கு உண்ணாவிரதம் இருக்க ஆரம்பித்து இருக்கிறாராம். ஒரு கண்ணாடிப் பிணப் பெட்டியின் உள் படுத்து இருக்கும் இவருக்குப் பக்கத்தில் இரண்டு குப்பிகளில் தண்ணீர் வைக்கப் பட்டிருக்கிறதாம். காற்று மாத்திரம் உள்வர ஏதோ வழி செய்யப்பட்டு இருக்கிறதாம். 35 வயதான இவர் ஒரு நாளைக்கு 50 சிகரெட் புகைத்து வந்தாராம். ஆனால் "உலக ஆசைகளைத் துறந்த எனக்கு ஒன்றும் வேண்டாம் இப்பொழுது" என்கிறாராம். சிவனிடம் அபார நம்பிக்கை உண்டாம். சிவபெருமானையே நான் நேரில் பார்த்தேன். அவருக்கு 6 கைகள் இருக்கின்றன என்றும் சொல்கிறாராம். இந்த அபூர்வப் பெண்ணை மணந்து கொள்ள இரண்டு பேர் இவர் உண்ணாவிரதத்தின் மத்தியிலேயே சம்மதம் கேட்கின்றனராம். உண்ணாவிரதம் இன்னம் முடிந்ததாகத் தெரியவில்லை.

லண்டனில் தற்போது நடக்கும் மரச் சாமான்களின் கண்காட்சி பெண்களுக்கு எவ்வளவோ உற்சாகத்தைக் கொடுக்கிறது. புதிய, வீட்டு மரச் சாமான்களைக் கண்காட்சிக்கு வைத்திருப்பதோடு அல்லாமல் பார்க்க வரும் பெண் மக்களை, "உங்கள் மனதில் ஏதும் புதிய யோசனை இருந்தால் சொல்லுங்கள். நாங்களும் ஒத்துழைத்து, புதிய சாமான்களைச் செய்கிறோம். ஏற்கனவே மரச் சாமான்களைச் செய்துமுடிக்கும் கடைகளின்மேல் புகார்கள் ஏதும் உண்டானாலும் சொல்லுங்கள். ஆராய்ந்து குற்றம் குறைகளை நிவிர்த்திக்கிறோம்" என்றெல்லாம் பெண்களுக்கு உத்தரவாதம் அளிக்கிறார்கள்.

போன வருஷம் நான் பார்த்துவிட்டு எழுதிய அதே லக்ஷிய இல்லக் காட்சி மார்ச்சு மாதம் ஆரம்பமாகிறது. புதிய புதிய சாமான்கள் இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. உங்களுக்கு உடனேயே தெரியப் படுத்துகிறேன். மற்றவை அடுத்த மாதக் கடிதத்தில்.



# லட்சியவாதி

ஆர். வேங்கடரத்னம்

வெகு தூரத்தில் அங்கே சூரியன் மறையலாமா, வேண்டாமா என்று யோசனையில் ஆழ்ந்திருப்பதுபோல் தோன்றினன். வானம் நெடுக இரத்த வெள்ளம் எனச் சிவப்பேறி யிருந்தது. மேகங்களின் ஓரமெல்லாம் தங்க 'பார்டர்' போட்டாற்போல் தோன்றியது. சூரிய ஒளி சுவாமியைப் பார்த்துப் படுத்துக்கொண்டிருந்த நந்திதேவனுக்குப் பொன்னுடை போர்த்திக் கொண்டிருந்தது. ரிஷபத்தின் முதுகை அப்போது பார்க்கவேண்டுமே! சிற்பி அதற்குக் கல்லால் ஆன சால்வை போர்த்தி யிருந்தார். சாயந்திர சூரிய வெளிச்சத்தில், அக் கல் சால்வை பொன் போர்வையாகத் திகழ்ந்தது. அதேபோல்தான் நந்தியின் முதுகில் சங்கிலியிலிருந்து இரண்டு புறமும் தொங்கிய மணிகளும், பார்ப்பதற்கு நிஜ வெண்கல மணியோ என்றெண்ணும்படி இருந்தது.

டும் டும் டும் என்று கோயில் நகரா ஒலித்தது. கணீர் கணீரென்று கண்டாமணி ஆஸ்திகர்களையெல்லாம் தீபாராதனை பார்க்க வரும்படி அறை கூவியது. இந்தச் சப்தங்களையெல்லாம் ஊடுருவிக்கொண்டு, வெகு தொலைவிலிருந்து வருவதைப்போல் நாதஸ்வரம் கேட்டது. வாசிப்பு கேட்பதற்கு இனிமையாய் இருந்தது. ஆனந்த பைரவி ராகம் அமர்க்களமாக அமைந்திருந்தது, கூடவே கேட்டுக்கொண்டு செல்லலாமென்று தோன்றியது. சற்று நேரத்தில் நான் என்னை யறியாமலேயே நாயனத்திற்கருகில் போய் நின்று கொண்டிருந்ததை உணர்ந்தேன்.

குருக்கள் சுவாமிக்குக் கற்பூரம், மங்கள ஆரத்தி, விசிறி, குடை, சாமரம் முதலியவற்றை எல்லாம் எடுத்தெடுத்துக் காண்பித்துக்கொண்டிருந்தார்; அடுக்குத் தீபாராதனையும் ஆகியது. கிளம்பிவிட்டார் அவர் அம்மன் சந்நிதிக்கு. அம்மனுக்கு ஷோடசோபசாரங்களாமே, அவ்வளவும் நடந்தன. நாதஸ்வரக்காரரும் கூடவே சென்றார். சொல்ல வேண்டுமா? நானும் அவரோடு நகர்ந்தேன். அம்மனுக்கு ஆனதும், குட்டித் தெய்வங்கள்!

சிறு சிறு சந்நிதிகள் ஒவ்வொன்றிற்கும் கற்பூரத்தட்டு, போய்க்கொண்டிருந்தது. சோமாஸ்கந்தர், சுப்ரமணியர், சண்டேசுவரர்—இப்படி ஒவ்வொரு சந்நிதியாகக் குருக்கள் போய்க்கொண்டிருந்தார். கடைசியில் நடராஜர் சந்நிதி, அவருக்கும் கற்பூர ஆரத்தி நிகழ்ந்தது. அப்பாடா, ஒரு மாதிரியாகக் கடைசியில் நகரா, டமாரச் சப்தங்களெல்லாம் ஓய்ந்தன. மணியும் தன் வாய் மூடியது. நாதஸ்வரத்தை நன்றாய்க் கேட்க முடிந்தது.

வைத்த கண்ணை அகற்றாமல், கானம் வந்துகொண்டிருந்த அக் குழலினைப் பார்த்

துக்கொண்டு நின்றேன். ஏற்கெனவே இருந்ததைவிடப் பாட்டு படிப்படியாக உச்ச நிலையை அடைந்துகொண்டிருந்தது. ஏதேது நாயனக்காரருக்கு நடராஜரைக் கண்டதும், உற்சாகம் வந்துவிட்டதோ! பாட்டு பிரமாதமாக இருந்தது. நடராஜர் மட்டும் இந்தப் பாட்டுக்கிசைய நடனம் ஆடினால்? ஆம், பாட்டு இவ்வாறு எண்ணத் தூண்டுவதாக இருந்தது.

நாதஸ்வரக்காரருக்குப் பக்கத்தில்போய் நின்றுகொண்டு என் பார்வையை உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை ஓடவிட்டேன். அவருடைய பாட்டுத்தான் எனக்கு அவர் மீது ஒரு மரியாதையை உண்டுபண்ணியிருந்ததென்றால், அவரது தோற்றமோ எனக்கு அவர்மேல் ஒரு அபிமானத்தை உண்டாக்குவதாக அமைந்திருந்தது. கழுத்தில் வெளுத்துப்போன கயிற்றில் சிவப்புநிற ருத்திராட்சம் ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது. நிஜமான ருத்திரரட்சம்; தங்கக் கவசம் போட்டதல்ல.

தலையில் சில வெள்ளை மயிர் எண்ணிவிடலாம் போலக் காற்றில் அசைந்துகொண்டிருந்தது. நெற்றியில் விபூதி மூன்று பட்டையாகத் தெளிவாய்த் தனித்தனியே இருந்தது. நடுவில் சிவபெருமானுடைய நெற்றிக் கண் போலக் குங்குமம்—அதை என்னவென்று சொல்வது? பொட்டும் அல்ல, பட்டையுமல்ல. அவர் குங்குமத்தை அப்படியே வழித்தெடுத்துத் தீட்டியிருப்பார் போல் இருந்தது.

வலது கை மணிக்கட்டில் ஒரு கறுப்புக் காப்புக் கயிறு கட்டியிருந்தது. அரையில் பழுப்பேறிய வேஷ்டி; அதற்கு 'பெல்ட்' மாதிரி அதே பழுப்பு நிறத் துண்டொன்றை இறுக்கிக் கட்டிக்கொண்டிருந்தார். இவ்வளவோடு, நாதஸ்வரத்தை வலது கையில் ஏந்தி நிற்கும் உருவம்தான் அவர்.

நான் வெகு நேரமாக எதையோ காணாததைக் கண்டாற்போல் அவரையே உற்று நோக்கிக்கொண்டிருந்தேன் என்பது அவர் என்னைக் கூப்பிட்டுக் கேட்டபிறகுதான் எனக்குத் தெரிந்தது.

"தம்பி, என்னை என்ன அவ்வளவு கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்தாய்?" என்று அவர் என்னைப் பார்த்துக் கேட்டார். உடனே அவருக்கு என்ன பதில் சொல்லுவதென்றே எனக்குப் பிடிபடவில்லை எப்படியோ சமாளித்துக்கொண்டேன். "ஒன்றுமில்லை, பாட்டுச் சுவாரஸ்யத்தில் உங்களையே கவனித்துக் கொண்டிருந்தேன். அதுகூட என்னை நீங்கள் கேட்டபின்புதான் எனக்குத் தெரியும்."

"உனக்குப் பாட்டுத் தெரியுமா பின்னே?"

"கொஞ்சம் கொஞ்சம் தெரியும். அதுகூட ரேடியோ கேட்ட பழக்கத்தினால்தான்."

அவருக்குப் பக்கத்தில் இருவர் நின்றுகொண்டிருந்தனர். இரண்டுபேரும் சிறு பையன்கள். ஒருவனுக்குப் பதினைந்தும் இன்னொருவனுக்குப் பதினெட்டு அல்லது இருபதும் இருக்கும் என்று நான் மதிப்பிட்டேன். சிறியவன் ஒத்தூதிக் கொண்டிருந்தான். பெரியவன் ஜாலராவினால் பாட்டுக்குத் தாளம் போட்டுக் கொண்டிருந்தான். எனக்கு இந்த நாதஸ்வர கோஷ்டி புதிதாக இருந்தது. திடும், திடுமென்று தட்டுவதற்குத் தவுல் இல்லாமல் என்ன நாயனம் வேண்டிக்கிடக்கிறது?

"உங்களுக்குப் பக்க வாத்தியமாகத் தவுல் கிடையாதா?"

"கிடையாது. ஏன்?"

"அது இருந்தால் இன்னும் உங்கள் பாட்டுச் சோபிக்குமே" என்று கேட்டேன்.

ஒரு நிமிஷம் நிச்சப்தம். நான்தான் அதைக் கலைத்தேன்.

"ஏன், நீங்கள் மேளம்கொட்ட ஆள் வைத்துக்கொள்ளவில்லை?"

"எல்லாம் ஒரு காலத்தில் இருந்தது. இப்போ திருப்பதுபோலவே எப்போதும் இருந்துவந்தேன் என்று நினைத்தாயா?"

"பின்னே இப்போது மேளத்திற்கு ஒருவருமில்லையே."

"ஆமாம், இருந்தான், ஓடிப்போய்விட்டான்."

அவரிடம் பேச்சுக்கொடுப்பது எனக்குச் சுவாரஸ்யமாக இருந்தது. இவ்வளவு நல்ல வித்வத்தைத் தம்மிடம் வைத்துக்கொண்டு, மனுஷன் இப்படி வீணைப் பாதி இடிந்துபோய்விட்ட கோயிலில் இருந்துகொண்டு கஷ்டப் படுகிறாரே என்றெனக்கு அவர்மீது அங்கலாய்ப்புத் தோன்றியது. நான் அக்கறையுடன் அவரை விசாரித்துக்கொண்டே சென்றது அவருக்கே திகைப்பை ஊட்டியிருக்கவேண்டும். அதனால்தான் அவர் என்னைப் பின்வருமாறு கேட்டிருக்கவேண்டும்.

"என்ன விசேஷம்? நீ இவ்வளவு அக்கறையோடு என்னை ரொம்ப விசாரிக்கிறாயே! நீ யார் வீட்டுப் பையன்?"


Godrej
WASHING SOAP GRAINS
WASHING SOAP
GRAINS
CHEAP. QUICK. SAFE
GODREJ SOAPS LTD

"என் ஐயாதான் நெற்றிக்கண்ணு முதலியார், இதற்குமுன் இந்தக்கோயிலுக்கு டிரஸ்டியாக இருந்தவர்."

"வாப்பா! அதுதானே பார்த்தேன்! ஏது இந்தப் பையன் இத்தனை பக்தி சிரத்தையோடு அதுவும் இந்தக் காலத்தில், கோயிலுக்கு வந்து கும்பிடுகிறான் என்றுதான் நான் இப்போது யோசித்துக் கொண்டிருந்தேன். இப்போது புரிந்தது காரணம். நெற்றிக்கண்ணு முதலியாரின் மகனா நீ? ரொம்ப சந்தோஷம். அவர் நிர்வாகத்தில் இருந்தபொழுது, இந்தக் கோயில் இப்படியா இருந்தது?........." நாதஸ்வரக்காரர் நீளமாகச் சொல்லிக் கொண்டே போனார்.

"நீ இப்போதென்னப்பா பண்ணிக்கொண்டிருக்கிறாய்?"

"பட்டணத்தில் பி. ஏ. படிக்கிறேன்."

இதைக் கேட்டதும் அவர் மூக்கில் விரலை வைத்துக்கொண்டு சொன்னார்—"ஏதேது, பட்டணத்திலே பெரிய படிப்புப் படித்துக்கொண்டிருக்கிற நீ லீவுக்கு வந்திருக்கிறபோது மெனக்கிட்டு கோயிலுக்குப் போக வேண்டும் என்று ஞாபகமாக வைத்துக்கொண்டு சுவாமி கும்பிட வந்திருக்கிறாயே!"

அவரிடம் என்னென்னவோ பேசிக்கொண்டிருந்தேன். அவர் தம்முடைய ஏழாம் பிராயத்திலிருந்தே கோயிலில்தான் வாத்தியம் வாசித்துக் கொண்டு வருகிறாராம். அவருடைய ஒரே பிள்ளை தன்னுடைய இருபத்தைந்தாம் வயதில் இறந்துபோய்விட்டானாம். அவன் விட்டுச்சென்ற இரு குழந்தைகளுக்கும் அவற்றின் தாத்தா வாத்தியம் சொல்லிக்கொடுத்து வளர்த்தது முடிய அவ்வளவும் அவர் வாயிலிருந்தே வந்தது.

"மூத்தவன்தான் முன்பெல்லாம் எனக்குத் தவுல் வாசிப்பவன். ரொம்ப நன்றாகத்தான் வாசித்து வந்தான். ஆனால் அவனுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. இருக்கிற யோக்கியதைக்கு வேறெங்கேயாவது வயிறு நிறையக் கிடைக்கக்கூடிய இடத்திற்குப் போய்ப் பிழைக்கலாம் என்று அவன் சொல்லி வந்தான். நான் ஆனமட்டும் சொல்லிப் பார்த்தேன். 'சரி, நீங்கள் இங்கேயே இருங்கள் தாத்தா. நான் போய் விட்டு வருகிறேன்' என்று சொல்லிக்கொண்டு அவன் ஓடியேவிட்டான். அவனுடைய தம்பிதான் இப்போது ஒத்தூதுகிறானே, இந்தப் பையன்" என்று அவர் சிறியவனை எனக்கு அறிமுகம் செய்துவைத்தார்.

"ஜால்ரா போடுகிறது யார்? உங்களுக்கு இரண்டு பேரன்தானே உண்டென்று சொன்னீர்கள்?"

"நானாகத்தான் இவனைக் கூப்பிட்டுச் சொல்லிக் கொடுத்துக் கூடவைத்துக்கொண்டிருக்கிறேன். இவனோ ஏழைப் பையன். நல்ல பாட்டுக்கள் எல்லாம் பாடி இவன் அந்தநாளில் பிச்சை கேட்டுக்கொண்டிருந்தபோது, நான் இவனைப் பிடித்தேன். பாட்டு வரும்போலிருக்கிறதென்று கண்டு பிடித்து, நாதஸ்வரம் சொல்லி வைத்தேன். ஆக, இப்போது இவர்கள் இரண்டு பேருக்கும் நாதஸ்வரமும் நன்றாக வாசிக்கத் தெரியும்."

அவர் கூறியதுபோல, என் தந்தை டிரஸ்டியாக இருந்தவரை கோயில் நிர்வாகம் ஏதோ சுமாராகவாவது இருந்து வந்தது. அதற்கப்புறம் ஒரே போட்டா போட்டி! பணத்தை வேறு சுரண்டிவிட்டதாகக் கேள்வி. இவைகளுக்கெல்லாம் நடுவில் மாட்டிக்கொண்டு திணறியது ஆலயம். கோயிலுக்கு முன்பு இருந்த சொத்தெல்லாம் மாயமாகிவிட்டன. இப்போதைக்கு, சுவாமியின் எதிரே ஒரு விளக்கு எப்போதும் எரிந்துகொண்டிருந்தால், அதுவே பெரிய விஷயம் என்று சொல்லும்படியாக இருந்தது நிலைமை.

எனக்கு நாதஸ்வரக்காரரைப் பார்க்கப்பார்க்க மிகவும் பரிதாபகரமாய் இருந்தது. கையில் உள்ள சரக்கிற்கு ஆனந்தமாக வாழ்ந்திருக்கலாம். சொத்தில்லாக் கோயிலில் திண்டாட வேண்டிய அவசியமே இல்லை. எங்கேயாவது போய் ஆஸ்தான வித்வான் என்ற பட்டத்தை வாங்கிக்கொண்டு கை நிறையச் சம்பாதித்துக் கொண்டு மனுஷன் சுகமாக இருக்கலாம்.

"உங்களுக்கு இங்கே என்ன தருகிறார்கள்?"

"என்னத்தைத் தருவார்கள்? காலையிலும் மாலையிலும் அந்த நடராஜன் தயவிலே சாதம் இரண்டு உருண்டைகள் கிடைக்கின்றன. அதை வைத்துக்கொண்டு. காலட்சேபத்தை நடத்த வேண்டியதுதான். சொந்தமாகக் கொஞ்சம் சமைத்து, சாதத்தைச் சாப்பிடத் தகுந்ததாகப் பண்ணிவிடுவதுதான் வழக்கம்."

"உங்களை ஒன்று கேட்கிறேன், பதில் சொல்லுவீர்களா?"

"தாராளமாய்ச் சொல்கிறேன். என்ன வேண்டுமானாலும் கேள்."

"எவ்வளவோ அருமையான சங்கீதத்தை உங்களிடம் வைத்துக்கொண்டு, ஏன் இப்படி நீங்கள் கஷ்டப்படவேண்டும்?"

"நான் என்ன கஷ்டப்படுகிறேன்?"

"கஷ்டப்படாமல், பின்னே நீங்கள் இங்கே சுகமா அனுபவித்துக்கொண்டிருக்கிறீர்கள்? உங்களிடம் இருக்கிற வித்வத்திற்கு, நீங்கள் வேறெங்கேயாவது போய் எவ்வளவோ ஆனந்தமாக வாழலாம். என்னைக் கேட்டால், உங்கள் பேரன் பண்ணியது சரிதான்."

"ரொம்ப புண்ணியமுண்டு உனக்கு. நீ தயவு செய்து இதெல்லாம் இந்த இரண்டு பேருக்கும் எதிரில் சொல்லாதே. நடராஜனுக்கு மேளம் இல்லாமல் நாதஸ்வரம் வாசிப்பதே எனக்கென்னவோபோல் இருக்கிறது. இப்போதைக்குச் சுருதிக்கும் ஜால்ராவுக்கும் இவர்கள் இருப்பதே பெரிய காரியம். நீ எதையாவது சொல்லி, இவர்களைத் தூண்டிவிட்டுவிடாதே இவர்களோ சின்னப் பையன்கள். வீணாக ஆசை காட்டி மோசம் பண்ணாதே."

"நான் என்ன மோசம் பண்ணுகிறேன்? நிஜத்தைத்தானே சொல்கிறேன்? இந்தக் கோயிலில் உங்களுடைய பாட்டைக் கேட்டுத் தலையாட்டுவதற்கு மருந்துக்குக்கூட ஒரு ரசிகன் கிடையாதே."

"அந்த நடராஜனைவிடவா பெரிய ரசிகர்கள் உண்டு? அவன் என் பாட்டைக் கேட்டுவிட்டு ஒரு நாளாவது முகத்தைச் சுளித்துக்கொண்டதில்லை. எனக்கு அதைவிட வேறு பெருமை வேண்டாம்."

வீணாக அவரோடு பேசிக்கொண்டிருப்பதில் பயனில்லை என்று எனக்கே தோன்றியது. எங்கள் ஊர்க்கோயில் கவனிப்பாரற்றது. சுவாமிக்கும் தேவிக்கும் இந் நிலைமையெனில், நாதஸ்வரக்காரரைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? மனுஷன் அநியாயமாக இக்கோயிலில் இருந்துகொண்டு தற்கொலை செய்துகொள்கிறார். கூட இருக்கிற பையன்களுடைய வாழ்வையும் கெடுக்கிறார். மூவருமாக இந்தக் கோயிலை விட்டுக் கிளம்பிச் சென்றால், அவர்களுக்கு விடிவுக் காலம் பிறந்துவிடும்.

அடுத்த லீவிற்கு நான் கிராமத்திற்கு வந்தபோது, வந்த அன்றைக்கு முதல் காரியமாகக் கோயிலுக்குத்தான் சென்றேன். சுவாமி தரிசனம்கூட முதற் காரணமல்ல; அந்நாயன வித்வானைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று கிளம்பினேன். அப்போது மத்தியான வேளை. கோயில் பாஷையில் 'உச்சிக் காலம்!'. உள்ளேயிருந்து பாட்டு வந்துகொண்டிருந்தது. ஆனால் அதில் முன் அத்தனை நாதம் மட்டும் காணவில்லை. எப்படியும் பழைய இனிமை அந்தக் கானத்திலிருந்து விடைபெற்றுக் கொள்ளவில்லை. பாட்டுக் கேட்பதற்கு நன்றாய்த்தான் இருந்தது. ஆனால் சற்றே பக்கத்தில் சென்றபின்புதான் கணீரென்று கேட்டது.

நான் கோயிலின் இருட்டைக் கிழித்துக்கொண்டு உள்ளே சென்றேன். அப்போது என் பார்வை எதையோ தேடுவதுபோல் இருந்தது. அடிமேல் அடிவைத்து, வழியில் வாசற்படி, நந்தி ஒன்றிலும் இடித்துக்கொள்ளாமல் மெதுவாக நடந்துசென்றேன். அங்கே அவர் நின்றுகொண்டு நடராஜர் சந்நிதியில் வாசித்துக்கொண்டிருந்தார். கூட இருந்த பையன்களில் ஒருவனைக் காணோம். அவருடைய பேரன் அங்கில்லை. இன்னொருவன் மட்டும் அவருக்கு இரண்டடி பின்னால் நின்றவாறு ஒத்தூதிக் கொண்டிருந்தான்.

நான் எண்ணியது சரிதான்! அவருடைய பேரன் ஓடிவிட்டானாம். "அண்ணன் போன வழியே அவனும் போய்விட்டான். ரேடியோவாமே, அதில் வாத்திய கோஷ்டியில் அவன் சேர்ந்திருக்கிறானாம். வயிற்றைப் பற்றிக் கவலை இல்லை. நீங்களும் வாருங்கள் என்று எனக்கு அவன் கடுதாசு எழுதியிருக்கிறான்......"

"நான் சொல்லித்தான் கேட்கவில்லை, உங்கள் பேரனே கூப்பிடுகிறபோதுகூடப் போக மாட்டீர்களா? உங்கள் உடம்பைத்தான் சற்றுப் பார்த்துக்கொள்ளுங்களேன். இங்கு நாலு வேளையும் ஊதுவதற்கு உங்களுக்குச் சரியாக ஒன்றும் கிடைப்பதல்லையென்று வயிறே சொல்கிறதே?"

அவர் எவ்வளவு கஷ்டப்பட்டுக்கொண்டு குழல் ஊதிக் கொண்டிருந்தார் என்பது அவரைப் பார்த்தபோது தெரிந்தது. எலும்புக் கூடுபோல் நின்றுகொண்டிருந்தார். காற்றை உட்செலுத்துவதற்கே அவர் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தார். என் மனதில் இருந்ததை இங்கு அப்படியே சொல்வதென்றால், 'இவர் இந்த ரீதியில் போய்க் கொண்டிருந்தால், அதிக நாளுக்கிருக்க மாட்டார்' என்று நான் எண்ணினேன்.

"நீங்கள் உங்கள் பேரன்கள் காட்டிய வழியில் செல்வதுதான் நல்லது. பேசாமல் மூட்டையைக் கட்டிக்கொண்டு......" என்று நான் தொடங்கினேன்.

"சட்! அதெல்லாம் என்னிடம் சொல்லாதேயப்பா. நான் இந்த நடராஜனை விட்டுவிட்டுப் போகவே மாட்டேன். அன்றைக்கு எனக்கு ஏழெட்டு வயதிருக்கும். அப்போது என் ஐயாவுக்கு ஒத்தூதுவது நான்தான். பன்னிரண்டு வயதிலிருநது நானே நாயனம் வாசிக்க ஆரம்பித்து விட்டேன். அன்று நான் எடுத்த வாத்தியத்தை நாளதுவரை விடவில்லை எல்லா வேளையும் இந்த நடராஜனுக்கு நான்தான் வாசித்திருக்கிறேன். ஒரு வேளைகூட நான் நாதஸ்வரம் வாசிக்காமல், நடராஜனுக்குத் தீபாராதனையோ நைவேத்தியமோ சமர்ப்பித்ததில்லை. இப்போது என்னால் விட்டு விட்டு வர முடியுமா? என் மனசு உனக்குத் தெரியாதப்பா. இந்த நடராஜனுக்குத் தெரியும்."

"அதெல்லாம் சரி. நடராஜன் இங்கே மட்டும்தான் இருக்கிறாரா? நீங்கள் போகிற இடத்தில் எல்லாம் இருக்கமாட்டாரா?"

"தம்பி, நீ கெட்டிக்காரன்தான். மெதுவாய்ப் பேசி, கடைசியில் எந்த மானுஷ நடராஜனையாவது நான் கும்பிடும்படி செய்துவிடுவாய்போலிருக்கிறதே!"

"இல்லை, தெய்வ நடராஜனைத்தான் சொல்லுகிறேன். அங்குமட்டும் இந்த நடராஜன் இருக்கப் போவதில்லையா? வேண்டுமானால் தினந்தோறும் அங்கே உள்ள சிவன் கோயில் எதற்காவது போய் வழிபடுங்களேன். வேண்டாமென்றா சொல்கிறேன்? உங்களுக்கு உண்மையிலேயே நெடு நாள் இருந்து நடராஜனுக்குத் தொண்டு

செய்யவேண்டும் என்று உள்ளூர இருந்தால், நான் சொல்கிறபடி செய்யுங்கள்."

"என்ன செய்யச் சொல்கிருய்?"

"போன தடவை நான் பார்த்ததற்கு இப்போது உங்கள் உடம்பு ரொம்ப மோசமாய் இருக்கிறது. நான் சொல்கிறேனே என்று நினைத்துக்கொள்ளாதீர்கள். இப்படியே நீங்கள் ரொம்ப நாள் காலந்தள்ள முடியாது. இங்குள்ள சுவாமிக்கு வேளாவேளை ஒழுங்காகப் படைத்தால்தானே உங்களுக்குக் கிடைக்கப்போகிறது? சுவாமியே தான் திண்டாடுகிருரே! அதோ எரிகிறதே, அவ் விளக்கைப் பாருங்கள். கோயிலுக்கு அது மங்களகரமாகவா இருக்கிறது? சற்று நேரத்தில் அது அணையப் போகிறது. கோயில் இந்த ஸ்திதியில் இருக்கிறது. உங்களுடைய இனிய வாசிப்பைத் தவிர வேறொன்றும் சுவாமிக்கே இல்லை. நீங்கள் எதை நம்பி, இங்கே இருக்க முடியும்?"

"தம்பி, நீ திரும்பத்திரும்ப இதையே சொல்லிக் கொண்டிருக்காதே. சொந்தக்காரப் பிள்ளைகள் தான் ஓடிவிட்டன. இந்த வளர்ப்புப் பையனுவது என்னை விட்டுப் போகாதிருக்கிருனே! அதுவே பெரிய அதிர்ஷ்டம். நீ அவன் மனசை வேறு கலைத்துவிடாதே."

"நான் மனமாரச் சொல்லுகிறேன். நீங்களோ வித்வத்தில் யாருக்கும் சளைத்தவரில்லை. எங்கேயாவது போய், சுகமாக" என்று நான் ஆரம்பித்ததை அவர் குறுக்கிட்டு, தொண்டை அடைக்கப் பேசினுர்.

"ஆனந்தமாக இங்கே பாடிக்கொண்டிருப்பதை விட்டுவிட்டு, நான் எங்கும் செல்லத் தயாரில்லை. கொடுத்த நேரத்திற்குள் இன்னின்ன பாட்டைப் பாடவேண்டும். எவனே சட்டம் இட்டதை, தலை குனிந்தேற்று அவன் சொல்கிறபடி தமிழ்ப் பாட்டானுல் தமிழ்ப் பாட்டையோ, இங்கிலீஷ் பாட்டுப் பாடென்ருல், அதற்கும் தலையாட்டிக் கொண்டு நான் பிழைப்பு நடத்த முற் படமாட்டேன். நான் உயிரோடிருக்கிறமட்டும் இந்த நடராஜனை விட்டுச் செல்வதென்பது அசாத்தியம். கோயில் இடிந்து தலைமேல் விழுந்தாலும் நான்பாட்டில் நடராஜனுக்கெதிரே வாசித்துக்கொண்டுதான் இருக்கப் போகிறேன். இந்த நடராஜனை, நாதஸ்வரம் வாசிப்பதற்கு ஒரு ஆள்கூட இல்லாமல், அதற்குக்கூட நாதியற்றவனுகப் பண்ணமாட்டேன்."

இவ்வாக்கியங்கள் எப்போதாவது தாமாக என் செவியில் தோன்றி அவர் சொன்ன குரலில் ஒலிப்பதுண்டு. அன்று அஞ்சனு 'கபே'யில் இச் சொற்கள் என் எதிரே தோன்றின. அவன் காபி—டிபன் சாப்பிட வந்திருந்தான் போலிருக்கிறது. "சௌக்கியமா?" என்று விசாரித்துக்கொண்டே அவன் என்னிடம் வந்தான். அவன் மேனியில் சில்க் ஜிப்பாவும் தங்கச்சங்கிலியும் ஏறியிருந்தன. எனக்கு அவனைப் புரிந்துகொள்ளவே ஒரு நிமிஷம் பிடித்தது. "என்னப்பா, நீயும் அவரை விட்டுவிட்டு ஓடிவந்து விட்டாயா?" என்று கேட்டேன்.

"நான் ஓடிவரவில்லை. அவர்தான் பிரிந்து போய்விட்டார். ஒரு நாள் நாயனம் வாசித்துக் கொண்டே இருந்தார். திடீரென்று நடராஜன் சந்நிதியிலேயே அவருக்குச் சுவாசம் நின்றுவிட்டது. நான் உடனே இங்கு வந்துவிட்டேன். இப்பொழுது நான் இங்கே ஏ. ஐ. ஆரில் ஒரு ஆர்ட்டிஸ்ட்! சம்பளம் பரவாயில்லை. வாருங்களேன் ஒரு நாள்" என்று சொல்லி அவன் தன் விலாசத்தைக் கொடுத்தான்.

"நீ பிழைக்கத் தெரிந்தவன்" என்று கூறிவிட்டுக் கிளம்பினேன்.●



(ராகமாலிகை தொடர்ச்சி)

# ஸ்ரீ ஸ்துதி

புதுச்சேரி தியாகப்ரும்ம மியூஸிக் அகாடமி பிரின்ஸிபால் ஸங்கீத வித்வான் (கல்கத்தா) A. K. ராகவாச்சாரியாரால் வர்ணமெட்டு அமைக்கப்பட்டது.

निष्प्रत्यूहप्रणयघटितं देवि नित्यानपायं
विष्णुस्त्वं चेत्यनवधिगुणं द्वन्द्वमन्योन्यलक्ष्यम् ।
शेषश्चित्तं विमलमनसां मौळयश्च श्रुतीनां
सम्पद्यन्ते विहरणविधौ यस्य शय्याविशेषाः ॥ ॥ ५ ॥

நிஷ்ப்ரத்யூஹ ப்ரணய கடிதம் தேவிநித்யாநபாயம்
விஷ்ணுஸ்த்வம் சேத்யநவதிகுணம் த்வந்த்வமந்யோந்ய லக்ஷ்யம்
சேஷச்சித்தம் விமலமநஸாம் மௌளயச்சச்ருதிநாம்
ஸம்பத்யந்தே விஹரணவிதௌ யஸ்யசய்யாவிசேஷா: [5]

### கேதாரகௌளவம் — ஆதி 2 களை

| லகு | த்ருதம் | த்ருதம் |
|---|---|---|
| ·ரீ க் ·ரி ஸா ; ; ; நீ நீ ·ரீ ஸா நீ தா தா பா பா ; | ; மா பா ஸ் நி நீ தா பா ; | பா த ப மா க்ா ரீ ரீ கா ரீ |
| நி ஷ்ப்ர த்யூ ஹ | ப்ர . ண ய | க டி . தம் |
| ரீ, ம ம கா ரி ஸா ; ; ; நீ நீ நி ஸா நி தா ; த நி பா | ; ப ம பா ; நீ ; ஸா ரீ | ப ம கா, ம ரீ, க ரி ஸா நி ஸா ; |
| தே வி நி த்யா | ந | பா யம் |
| ம கா ஸ ஸா ரி ம பா ; ; ; பா, ஸ் நீ தா பா ; பா ; | மா பா தா, நி பா த ப ம மா க | ரி மா க ரீ ரி ரி ப ம பா ; ; |
| வி ஷ்ணு ஸ்த்வம் சே த்ய | ந வ தி | கு ணம் |
| நி த ம ப நி ப நீ ; ; நீ ; நி த ம ப ஸ் நி ஸா ; ; ஸா ; | நீ ·ரீ ஸா நீ தா பா மா ; | பா நீ ஸா ·ரீ, க் ஸா ; ; ; |
| த்வ ந் த்வ ம ந்யோ | ந்ய | ல க்ஷ்யம் |

### மத்யம கால நடை

| | | |
|---|---|---|
| நீ ஸா நீ தா பா ; பா ; மா பா நி த ப த பா மா கா ரீ | ரீ பா மா கா கா ஸா ரீ மா | ; பா ஸா நீ ஸா ; ; ; |
| சே ஷ ச்சி த்தம் வி ம ல - ம ந ஸாம் | மௌ ள · ய ச்ச | ச்ரு தி நாம் |
| மா பா நீ ஸா ·ரீ ; ·ரீ ; ·ரீ ·ரீ க்ா ம் க் ·ரீ ; க் ·ரி ஸா | ·ரீ, க் ஸா ; ; நீ தா பா | மா பா நீ ஸா ·ரீ ; ·ரி ம்ா க் |
| ஸ ம் ப த்யந் தே வி ஹ ர ண வி தௌ | ய ஸ்ய ச ய்யா | வி சே ஷா |

### ஸ்வர ஜதி

| | | |
|---|---|---|
| ஸா ; ; நீ தா பா மா பா தா பா ; மா கா ரீ ஸா ரீ | ஸா ; ; ரீ மா கா ரி | கா ஸா ரீ மா பா ; ; ; |
| ஸா நீ தா பா மா பா த ஜம் த த க ஜ ணு | தாம் த த க ஜம் | த ஸா ரீ மா பா |
| நீ தா பா ; ; மா பா நீ ஸா ·ரீ ; ம்ா க்ா ·ரீ ஸா ·ரீ | ஸா ; நீ தா பா ; மா கா | ரீ ஸா ; ரீ ; மா பா நீ |
| த த ஜம் மா பா நீ ஸா ரீ மா கா ரீ ஸா ரீ | ஸா நீ தா பா மா கா | ரீ தா தி கி ணதோம் |

उद्देश्यत्वं जननि भजतो रुज्झितोपाधिगन्धं
प्रत्यग्रूपे हविषि युवयोरेकशेषित्वयोगात् ।
पद्मे पत्युस्तवच निगमैर्नित्यमन्विष्यमाणः
नावच्छेदं भजति महिमा नर्तयन्मानसं नः ॥ ॥ ६ ॥

உத்தேச்யத்வம் ஜநநி பஜதொ ருஜ்ஜிதோபாதி கந்தம்
ப்ரத்யக்ரூபே ஹவிஷி யுவயொரேக சேஷித்வ யோகாத்
பத்மே பத்யுஸ் தவச நிகமைர் நித்ய மந்விஷ்ய மாண:
நாவச்சேதம் பஜதி மஹிமா நர்த்தயந் மாநஸம் ந: [6]

மலயமாருதம் — ஆதி 2 களை

| லகு | த்ருதம் | த்ருதம் |
|---|---|---|
| ஸ்ா ; ; ; தா நி ஸ் நி த ப க ப த நி த ப க த ப ரீ ; ரி ஸ ஸா | ; ஸ ரி கா ரீ கா ; பா ; | பா தா த ப ப க பா ; ; ; |
| உ த்தே ச்ய த்வம் | ஜ ந நி | ப ஜ தொ |
| தா, ஸ் நீ தா பா ; ; ; ப கா த பா, த கா ; பா ரீ | கா ப க பா த ப தா நீ நி த பா | தா நீ நி த த ப த நி த நி ப தா, |
| ரு ஜ்ஜி தோ | பா. தி | கந் தம் |
| ஸ் த நீ த ப தா நி ஸ்ா, ; ; ஸ்ா ; ; ; ரீ ஸ்ா ஸ்ா நீ | ஸ்ா, ·ரி க்ா ·ரீ ஸ் க் ·ரீ ·ரி ஸ் ஸ்ா | நி ஸ்ா நி தா நீ தா பா தா நீ |
| ப்ர . . த்ய க்ரு பே ஹ | வி ஷி | யு வ யோ |
| க் ·ரீ க் ஸ்ா ·ரி நி ஸ்ா ; ; ; தா நி ஸ் தா நீ தா பா த ப ப க | கா ·ரீ கா பா தா நிஸ் நி த ப க | பா ; நி த ப க பா தா நீ ; |
| ரே . . க சே ஷி த்வ | யோ | கா த் |

## மத்யம கால நடை

| | | |
|---|---|---|
| தா தா பா ; கா பா கா ரீ ஸா ரீ ; கா ரீ கா பா தா | நீ தா நீ பா ; தா கா பா | கா ரீ கா பா தா நீ ஸ்ா ; |
| ப த்மே ப த்யு ஸ்த வ ச நி க மைர் | நி த்ய மந் வி ஷ்ய | மா ணோ |
| ஸ்ா க்ா ·ரீ ஸ்ா நீ தா நீ ஸ்ா நீ தா நீ நீ தா பா ; கா | கா பா தா நீ ஸ்ா ·ரீ ஸ்ா ஸ்ா | நீ நீ தா தா பா கா பா தா |
| நா வ ச்சே தம் ப ஜதி ம ஹி மா | ந ர்த ய ந் மா | ந ஸம் ந |

## ஸ்வர ஜதி

| | | |
|---|---|---|
| நீ ; ; நீ தா நீ பா தா கா பா கா நீ ; தா பா தா | கா ; ; பா கா தா பா நீ | தா ஸ்ா நீ தா பா கா பா தா |
| நீ நீ தா நீ பா தா த க த திம் த கி ட | தாம் பா கா தா பா நீ | தா த கி ட த க தி மி |
| நீ ஸ்ா ·ரீ க்ா ; கா பா தா நீ ஸ்ா ரி ; கா பா தா நீ | ஸ்ா க்ா ·ரீ ; ; ; ரீ ; | ; ; பா கா ; பா தா நீ |
| நீ ஸ்ா ரீ கா கா பா தா நீ ஸா தாம் த க ஜ னு | ஸ்ா கா ரீ ரீ | த தீ கி ண தொம் |

(தொடரும்)




தொடர் கதை

கே. எம். முன்ஷி — ஸுரேந்திரநாத் சாஸ்திரி

மொழி பெயர்ப்பு—கீழையூர் தி. சேஷாத்திரி

5

குரு தேவருடன் சிவராசி வாய் பேசாமல் தன் இருப்பிடம்வரை வந்தான். அவர் எதிரில் இருக்கும்வரை பகவான் லகுலேசரே எதிரில் இருப்பதுபோல் இருந்தது. அவனால் வாய் திறக்கமுடியவில்லை.

ராசிக்குத் தவத்தின் பலன் கிட்டிவிட்டதாகத் தோன்றிற்று. பகவானே இந்தப் பாபிகளின் எதிரிலிருந்து அவனை அழைத்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தார். அவன் எதிரே நடன அடி எடுத்துவைத்து, காதுகளுக்குத் திவ்யநாத இன்பம் தந்து வழிகாட்டிச் சென்று கொண்டிருந்தாள் மஹாமாயை திரிபுரசுந்தரிதேவி. அவனுக்கெதிரே படர்ந்திருந்த இருட்டில் அவனுடைய குருவும் திரிபுரசுந்தரியும் தம் அருள் வெளிச்சத்துக்கு அழைத்துப்போய்க்கொண்டிருந்தனர்.

அங்கே இருப்பிடம் சென்றதும் அவன் இருட்டையே நோக்கி விழித்துக்கொண்டு வெகுநேரம் நின்றான். பிறகு சித்தேசுவரன் வந்து இருமி, அவர் தியானத்தைக் கலைத்தான்,

"சித்தேசுவரா? பகவானே இப்பொழுது இங்கே வந்திருந்தார்."

சித்தேசுவரன் ஆச்சரியமடைந்தான். சர்வக்ஞர் மீண்டும் எப்படி பகவானானார்?"

"ஆம், சித்தேசுவரா? என்ன விழிக்கிறாய்? பகவானே—சங்கரருடைய அவதாரமே—என்னிடம்

சொன்னாரப்பா—'போ, இந்த இடம் முழுவதும் பாபச் செயல்களால் நிறைந்துவிட்டது என்று!"

"அதுதான் எனக்குத் தெரியுமே."

"பாசுபத மதத்தின் முதல் பிரபுவான அவர் இன்னமும் சொன்னார். தர்மத்துக்கும் சம்பிரதாயத்துக்கும் விரோதம் புரியும் இந்த நீசர்கள் நாய்களைப்போல் மடிவார்கள். இந்தப் பாபக் கோயிலும் எரிந்து சாம்பலாகப்போகிறது. இவைகளின்மேல் கழுகுகள் பறக்கும். இவைமட்டுமா? மேலும் அவர், அந்தத் தவசிரேஷ்டர் என்னை 'இந்தப் பாபிகளின் இடையிலேயிருக்காதே. சென்றுவிடு எங்காவது? இவர்கள் நிழல்கூடப் படக்கூடாது உன்மேல். போ, புது இடம் ஒன்று கண்டுபிடி. மடம் கட்டிப் பாசுபத மதத்தைப் பரப்பு, அங்கேயே புதுக்கோயில் கட்டி, திரிபுரசுந்தரிக்கு இடம் ஏற்படுத்து' என்றாரப்பா"

சிவராசியினிடம் ஏற்பட்டுவந்த மாறுதலை சித்தேசுவரன் கவனித்துவந்தான். குரு ஆணைக் கயிற்றின் பலத்தால் சுற்றும் பம்பரம்போலில்லாமல் தனி ஒரு சிரத்தை, ஆத்மபலம் இவைகள் கொண்டு தனி இயந்திரம்போல் இயங்க ஆரம்பித்திருந்தான்.

சித்தேசுவரன் 'குருதேவா' என்றாரம்பித்தான். 'குரு கங்க சர்வக்ஞரல்ல' என்று முடிவு செய்துவிட்ட பிறகு சித்தேசுவரன் முதலியவர்கள் சிவராசியைத்தான் அந்தப் பெயரால் அழைத்துவந்தனர்.

"நான்தான் கஜினி சேனை வந்தது முதலே இங்கிருப்பது உசிதமில்லை என்று முடிவுசெய்துவிட்டேனே! கங்க சர்வக்ஞரிடம் சொல்லி ஏற்பாடு செய்யுங்கள். ராவ், கமாலாக்காணி கப்பலில் இருக்கிறார். போய்விடலாம் கம்பாதத்துக்கு"

சிவராசி புலிபோல் பார்க்க ஆரம்பித்தான். 'அட முட்டாளே; இந்தப் பாபிகளின் உதவி கொண்டு வெளியேறுவதைவிட இங்கேயே ஆத்ம சுத்தியில் இருப்பது நல்லதல்லவா!'

"பிறகு போவதுதான் எப்படி?"

"நான் என்ன உயிரைக் காக்கவா போகிறேன். லகுலேசன் கட்டளையை நிறைவேற்றவல்லவா! மகாமாயை எனக்கு வழி காட்டுகிறாள். அவள் போகுமிடம் எல்லாம் நானும் போவேன். அவள் காட்டும் வழி சென்று பாசுபத மதத்தைச் சீர்தூக்குவேன். மகாமாயே, ஜகதம்பிகே!" என்று சொல்லிவிட்டு, சிவராசி மீண்டும் இருட்டைப் பார்க்க ஆரம்பித்தான்.

அவன் இருட்டில் மகாமாயையின் ஒளியைப் பார்த்தான். கண்களைக் காட்டி அவள் அவனை அழைத்தாள். அவள் பாதமலர்களில் அழகு தாங்கி, சுகுமார அங்கங்களில் மோஹினி ஏந்திச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

"சித்தேசுவரா! வா போவோம், உத்தரவு கிடைத்துவிட்டது, இனி இந்தப் பஞ்ச தீர்த்தத்தை விட்டுவிட வேண்டியதுதான்."

இவன் என்ன சொல்கிறான் என்று புரியாமலேயே. "அது எப்படி போவது?" என்று கேட்க ஆரம்பித்தான்.

சிவராசி கனவில் இருந்து விழித்தவன்போல் உடலை உதறிக்கொண்டு தன் நிலையை அடைந்தான். "சித்தேசுவரா போ! உடனே சென்று தத்த சாளுக்கியனை அழைத்து வா." என்று உத்தரவிட்டான்.

"அவர் ஜனானாகட் பக்க வாசலில் அல்லவா காவல் புரிந்துகொண்டிருக்கிறார்,"

"போ. சொல் இது என் உத்தரவு என்று. அவர் உடனே இங்கே வரவேண்டும்." சித்தேசுவரன் சென்றான். ஹரதத்தன் வந்து சேர்ந்தான்.

"குருதேவ, நம: சிவாய"

"சிவாய நம:! ஏன்?"

"குருதேவா. வாருங்கள். மகாமாயையின் பூஜைக்கு எல்லாம் தயார் செய்துவிட்டோம். நீங்கள் வாருங்கள். நாங்கள் சென்று சௌளாவைத் தூக்கி வந்துவிடுகிறோம்."

"சௌளாவையா? மஹாமாயையா?"

"ஆமாம், குருதேவா."

"போங்கடா முட்டாள்களா?" சிவராசி பல்லை நறநற என்று கடித்துக்கொண்டே சொன்னான்: "அட, இந்தப் பாவ பூமியைவிட்டு ஏதாகிலும் புண்ணிய ஸ்தலத்துக்குச் சென்று திரிபுரசுந்தரியைப் பிரதிஷ்டை செய்தாகவேண்டும். பகவான் லகுலேசரே அப்படி உத்தரவிட்டிருக்கிறார். மஹாமாயாவும் கூப்பிட்டுக்கொண்டிருக்கிறாள்!

"எங்கே போவதாம்?"

"இந்தப் பாவிகளின் இடத்திலிருந்து தொலைய வேண்டும். உனக்கு என்னுடன் வரச் சம்மதமா? நானேயே இவை எல்லாம் எரிந்து சாம்பலாகப்போகின்றன."

"ஓ, நான் வருகிறேன். ஆனால் நான் வருவது எப்படி?"

"மகாமாயை வழி காட்டுவாள். நீ வருகிறாயா, சொல்."

"ஓ. நான் கண்டிப்பாய் வருகிறேன்."

"சரி சென்று சௌளவை இங்கே தூக்கி வா. ஒருவருக்கும் தெரியக்கூடாது. நாம் ஒரு நாழிகை நேரத்தில் பிரபாசி விட்டுச் சென்றாக வேண்டும்," பகவான் சங்கரர்போல் உத்தர விடும் குருவின் கட்டளையை நிறைவேற்ற ஹாரதத்தனும் உடன் வந்த சாதுவும் சென்றனர்.

சிவராசி கற்பனைக் குதிரை அவனை எங்கெங் கேயே இழுத்துச்சென்றது. மகாமாயை சௌளா வின் உருவத்தில் அவனை எங்கெங்கேயோ, பெரிய காடுகளைத் தாண்டி, மலையுச்சி ஏறி, ஒரு புது இடத்தில் அழைத்துச் செல்கிறாள். அவனும் அவளைத் தொடர்ந்து சென்று ஜகத்குரு உருவத் தில் உலகத்துக்குப் பாசுபத மதத்தின் வெற் றியைத் தெரிவிக்கிறான்.

ர

தலையில் கையை வைத்த சாமந்தன் வெகுநேரம் வரை எழுந்திருக்க இயலாமல் உட்கார்ந் திருந்தான். அவன் கண்ணெதிரே ஒரு சூனியம் எல்லையற்றுப் படர்ந்திருந்தது. இருட்டும் சூடும் நிறைந்த அந்தப் பாலைவனத்தில் உட்கார இடமோ குளமோ மரமோ தட்டுப்படவேயில்லை. அவன் தனிமை, தனிமை, என்றும் தனிமை. குடும்பம் அழிந்து, பாக்யம் ஒழிந்து, நம்பிக்கை இழந்து, சை, உயிருடன் இருக்கும்போதும் செத்த வன்போல!

"சௌஹான் ராஜா வாருங்கள்" என்று வீரா அழைத்தான். சாமந்தன் விழித்தான், நெற்றி யைத் தடவி எழுந்து நின்றான். மேலேறிச் சென் றான். பீமதேவன் கைகளைப் பிரித்து நீட்டி நின்றார்.

உயிரற்று நிற்கும் சாமந்தனை அவர் வாரி யணைந்து கொண்டார்.

"யார்? சௌஹானா?" அறையுள்ளிருந்து சௌளாவின் சப்தம் கேட்டது. பிறகு சகோதரி போல் முன்னுக்கு வந்து அண்ணனுக்கு 'நொடி' எடுத்தாள்.

நடுங்கியவாறே சாமந்தன் சௌளா தன் கன் னங்களைத் தடவுவதைச் சகித்துக்கொண்டிருந் தான். அவன் வீரனான அரசனைப் பார்த்தான். பட்டமகிஷியாகத் தகுந்த சௌளாவையும் பார்த் தான். இருவருக்கிடையேயும் ஓடும் அன்பு வெள் ளத்தையும் அவர்கள் கண்களாகிற மதகுகளில் பார்த்தான். சாமந்தன் வெடித்துவரும் கேவலை அடக்கிக்கொண்டான். இருவர்க்கும் சேர்த்துக் கை தூக்கினான்.

"மஹாராஜா, சௌளா! நீங்களிருவரும் பாக்கியசாலிகள்" என்றான். இதே சௌளாவை மனைவியாக அடைந்து ராஜ்யஸ்தாபனம் செய்ய லாம் என்று அவன் ஒருமுறை எண்ணியதுண்டு. இந்தச் சமயமும் குனிந்த அவன் தலையில் இந்த எண்ணம் மீண்டும் தலைதூக்க முயன்றது. ஆனால் அவன் அதைக் கசக்கி எறிந்தான். அவன் தன் இதயத்தின் ஒரு பாகத்தையே அறுத் தெறிந்து அதன்மேல் குதிக்க ஆரம்பித்தான்.

"சாமந்தா, உனக்குச் சௌளாவை முன்னமே தெரியும் என்று எனக்குத் தெரியாதே."

"மகாராஜா! இந்தப் பரந்த உலகில் நான் தனியனாகி, தனிமையின் சூட்டில் பொசுங்கி னேன். இவள் என் சகோதரியாகிச் சூட்டைத் தணித்து விட்டாள். இவள் எப்பொழுதும் சௌ பாக்யவதியாக இருக்கவேண்டும். சகோதரி, எனக் குக் கொஞ்ச நேரம் மகாராஜாவுடன் தனித்துப் பேசவேண்டும். கொஞ்சம் உள்ளே போ" என் றான் சாமந்தன்.

சௌளா போய்விட்டாள். சாமந்தன் மகா ராஜாவை மாடியின் ஓர் மூலைக்கு அழைத்துச் சென்றான்.

"மகாராஜா, சமயம் மிகவும் குறைவு; வேலையோ அதிகம் இருக்கிறது. நான் எல்லாக் கதையையும் ராய் ரத்னாதித்யரிடம் சொல்லி யிருக்கிறேன். நீங்கள் கேட்டுக்கொள்ளலாம். பட்டணில் தங்கள் பெருமை அரசாள்கிறது. தாமோதர மேதா சேனையுடன் மஹமத் பின்னால் இருக்கிறார். மார்வார் உஜ்ஜயினி சேனைகளும் இரண்டொரு நாளில் வந்துவிடும். கம்பாதத்தி லிருந்து நான் கொண்டு வந்த கப்பலில் சாப்பா டும் ஆயுதங்களும் இருக்கின்றன."

"என்ன சொல்லுகிறாய்? சபாஷ், சாமந்தா. சபாஷ்!"

"இதோ நான் திரும்பிச் செல்கிறேன். நாளை வருவேன்."

"சாமந்தா! நீ மனிதனல்ல, தேவனப்பா!"

"நான் மனிதனல்லதான். மனிதனாயிருந் தால் என்னை இந்தக் கஷ்டங்கள் அழித்திராவா?"

"அப்படி பேசாதே. நீ என்னுடைய வலது கையல்லவா?"

இவ்விதம் பேசிவந்த சாமந்தன் 'ஒரு சொந்த விஷயம்' என்று சொன்னபோது குரல் தடித்து வந்தது.

'என்ன?' என்று பீமன் ஆச்சரியத்துடன் பின்னடைந்தார். சாமந்தன் கையில் வாள் மின் னிற்று.

"சௌளாவின் காதல் சீக்கிரம் அழியக்கூடி யது. களைப்படைந்த இரவின் தங்குமிடமாக முடிந்துவிடும்." பீமதேவன் இதயம் வெகுண் டது.

"யார் அப்படி சொன்னது?"

"அவள் பிறப்பிலும் பழக்கத்திலும் தேவ தாசி. சமயம் மாறிவிட்டால் பட்டண் அரசன் சளுக்கிய தேவன் வீட்டில் அவளுக்கு என்ன மதிப்பு?"

பீமதேவன் புரிந்துகொண்டார்; சிரித்தார். "சாமந்தா, உன் பயம் வீண்; ஆதாரமற்றது. சௌளாவை மறப்பது என்பது என் ஜன்மத்தில் இல்லை."

"அவள் குருதேவருடைய புத்திரி. என்னுடைய தர்ம சகோதரி. நாளை முதல் அவள் பட்டண் அரசியாகமாட்டாள் என்ருல் இதோ இங்கேயே நிர்ணயம் செய்துகொள்ளவேண்டும்." என்று சொல்லிக்கொண்டே சாமந்தன் வாள் நுனியைப் பீமதேவன் திறந்த மார்பில் வைத்தான். சாமந்தன் திடம்கொண்ட பயங்கரத் தோற்றம் கொண்டிருந்தான்.

பீமதேவன் கலகல என்று சிரித்தார். "அட, எனக்குத் தெரியாதே. சௌளாவுக்கும் இப்படி சகோதரர்கள் இருக்கிருர்கள் என்று. பயப்படாதே. நான் இவளை மனைவி என்றேதான் வரித்தேன். அவள் அதற்கும் தக்கவள்தான்."

சாமந்தன் வாளை மீட்டுக்கொண்டான். "மகாராஜா, மன்னியுங்கள். மன்னித்துவிடுங்கள். நான் வீணுய்ச் சந்தேகப்பட்டுவிட்டேன்" என்ருன் குளுமையும் பணிவும் கலந்த குரலில்.

"சேச்சே, நீ என் சகோதரனல்ல. என் மனைவியின் சகோதரன். யுத்தம் முடிந்ததும் நீயே கன்னிகாதானம் செய்து கொடுத்துவிடு"

சாமந்தன் மீண்டும் யோசனையிலாழ்ந்தான். "மகாராஜா, இன்றே மனைவியாகிவிட்டாள். பிறகு நாளை என்ன? போலாநாதன் எண்ணியிருக்கிருனே?" என்ருன்.

பீமதேவன் யோசனைசெய்தார். "சாமந்தா! நீ சொல்வது சரி. வீரா, போ. ராய், விமல், தத்தன் எல்லோரையும் குருதேவரிடம் அழைத்து வா. திடீரென்று நிச்சயிக்கப்பட்ட முகூர்த்தம் நல்ல முகூர்த்தம். வா, சௌஹான் வீரா! குருதேவரிடம் போகலாம் வா." இருவரும் குருதேவரிடம் சென்றனர்.

இருவருக்கும் வீரக் கடிமணம் நிறைவேறியது. குருதேவர் ஆசீர்வதித்தார். கங்காதேவி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள்.

சாமந்தன் நேரமாய்விட்டதென்று விடை கேட்டான். பீமதேவன் சௌளா குருதேவர் மூவரும் வழியனுப்பச் சென்றனர்.

சௌளா சாமந்தனை அணைந்துகொண்டாள். "அண்ணு! சீக்கிரம் திரும்பிவிடு அண்ணு!" என்று அழுதாள்.

"சகோதரி! உயிருடன் இருந்தால் என்ருவது ரக்ஷகட்டவா...... இல்லாவிட்டால்......" சாமந்தனும் கண்ணீர் சொரிந்து கதறினுன்.

"மறந்துவிடாதே, சௌளா!" என்று சொல்லிக்கொண்டே சாமந்தன் துவாரகைப் பக்கத்து வாசலுக்கு இறங்கி ஓடிவிட்டான்.

7

சித்தேசுவரன் திரும்பி வரும்போது சிவராசி ஆத்திரமாயிருந்தான்.

"ஏன்?"

"தத்த சாளுக்கியரைப் பார்க்க முடியவில்லை. எல்லோரும் குருதேவரிடம் போயிருக்கிருர்கள்.

"சரி, வெளியே நில். இறங்கி வரும்போது அழைத்துவா"

சித்தேசுவரன் வெளியேவந்து நின்ருன். கொஞ்சநேரத்தில் ஹரதத்தனும் அவன் தோழனும் வந்து சேர்ந்தனர். அவர்கள் முகம் பிரகாசமாக இல்லை.

"குருதேவா, குருதேவா, எல்லாம் நாசம்." என்று அலறினர் இருவரும் சேர்ந்து. ராசி 'என்ன அது?' என்று பறந்தான்.



"குருதேவர் சௌளாவைப் பீமதேவனுக்கு மணம் செய்து கொடுத்துவிட்டார்."

சிவராசி பைத்தியம் பிடித்தவன்போல் கத்தினான். 'என்ன சொல்லுகிறாய்?'

"மணம் நடந்ததை நாங்கள் கண்ணால் பார்த்தோம்!"

இதைக் கேட்டதும் சிவராசியின் முகம் வேறுபட்டது. அவன் கண்கள் வெடித்து வெளியேற முயன்றன. அவன் நரம்புகளில் நெருப்புப் பற்றி எரிய ஆரம்பித்தது. குரு பதவியை மறந்தேவிட்டான்.

தவத்தில் கிடைத்த ஆத்ம சிரத்தை அழிந்தது. அவனுடைய சௌளா இன்று பீமதேவனுடைய மனைவியாகிவிட்டாள். சிவராசி ஆலால விஷத்தின் உருவானான்.

"குருதேவா, நாம் இனி என்ன செய்வது? போவதா வேண்டாமா?"

"போவதேது.? இந்தப்பாவிகளையெல்லாம் சுட்டெரித்துவிட்டல்லவா போவதைப்பற்றி யோசிக்கவேண்டும்? சரி, போங்கள், சந்தர்ப்பம் வந்தால் கூப்பிடுகிறேன்." சிவராசியின் கண்களில் ஒளித்தெழுந்த தேஜஸைப் பார்த்து இரு சாதுக்களும் வெளியேறினர்.

கொஞ்ச நேரத்தில் தத்தனும் சித்தனும் வந்தனர். சிவராசியின் உருவைக்கண்டு பயந்து நின்றனர்.

"தத்தா! என் கட்டளை ஒன்றை நிறைவேற்றியாகவேண்டும்."

"என்ன கட்டளை?"

"எப்படியாவது சித்தேசுவரனைக் கோட்டைக்கு வெளியே அனுமதிக்கவேண்டும்."

சித்தேசுவரன் திடுக்கிட்டான். 'என்னையா?' என்று பயந்தான்.

'ஆம்' என்ற அலறலைக்கேட்டுச் சித்தேசுவரன் வாயடைத்தான்.

தத்தன் "மகாராஜா அறிந்தால் தலையே போய்விடுமே!" என்று நடுங்கினான்.

"தத்தா, என் ஆசீர்வாதத்தால்தான் உனக்குக் குழந்தை பிறந்தது. சாபம் கொடுத்து அதைத் தொலைத்து விடுவேன். சித்தேசுவரனை வெளியில் அனுப்ப முடியுமா? முடியாதா?"

தத்தன் நெருப்புக்குப் பயப்படுவானா? காய்ந்த இருப்புச் சட்டிக்குப் பயப்படுவானா?

"சரி, கொஞ்ச நேரத்தில் துவாரகை வாசலுக்கு அனுப்புங்கள்" என்று சொல்லி, தத்தன் சாமந்தன் விஷயத்தை எண்ணிக்கொண்டு அவ்விடம் விட்டு நகர்ந்தான்.

சிவராசி சித்தேசுவரனிடம் தன் யோசனையைச் சொன்னான். சித்தேசுவரனின் உடல் பதறிற்று. 'பாவி, இந்த எண்ணமா?' என்று எண்ணினான். ஆனால் அந்தக் கொடும் பிசாசிடம் எப்படிச் சொல்வது? கொஞ்ச நேரமாவது பிரபாசி சாவுப் படுக்கையிலிருந்து வெளியேறினால் போதும் என்று அவன் சென்றுவிட்டான்.

சித்தேசுவரன் துவாரகை வாசலுக்கு வந்தபோது காராவும் நீராவும் சாமந்தனை அகழில் இறக்கிவிட்டிருந்தனர், அங்கே தத்தன் காரா நீரா மூவர் மட்டுமே இருந்தனர்.

"காரா, இவனையும் இறக்கிவிடு. மகாராஜாவின் உத்தரவு இருக்கிறது." கட்டளைப்படி என்று சொல்லிவிட்டு, காரா அவனையும் இறக்கிவிட்டான்.

## அத்தியாயம்—16

## மறு நாள்

### 1

சூரியோதயம் ஆயிற்று. ராஜபுத்திர சேனை ஆயுதமணிந்து கோட்டைமேல் ஏறி நின்றது. கஜினி சேனையோ ஒரு பதற்றமும் இல்லாமல் இருந்தது. துவாரகை வாசலிலும் ஜூனாகட் வாசலிலும் சிறிய கூட்டங்கள் இருந்தன. ஆனால் அவைகளைக் கண்டு ஒருவரும் பயப்படவில்லை. முக்கியமான வாசலுக்கெதிரே கூடும் கூட்டம்தான் கவனிக்கவேண்டியதாகும், முற்றுகை என்ன உருவம் எடுக்கும் என்று தெரியவில்லை. மகாராஜா தம்முடைய சேனையை எல்லாம் நடு வாசலுக்கருகேயே கூடியிருக்கும்படி உத்தரவிட்டிருந்தார்.

முதல்நாள் நடந்ததுபோலவே அன்றும் மகமூத் தன்னுடைய கூடாரத்திலிருந்து வெளியேறி, அங்குமிங்கும் சுற்றிப் பார்க்க ஆரம்பித்தான். கடைசியில் ஏதோ உத்தரவும் இட்டுவிட்டான். டங்காக்கள் ஒலிக்க ஆரம்பித்தன. கொம்புகள் ஊதின. குதிரை வீரர்கள் இரண்டு வரிசைகளில் இடைவெளிவிட்டு அகழைநோக்கிச் செல்ல ஆரம்பித்தனர்.

அநேக வீரர்கள் உத்தரவைப் பெற்று, சிறிய மரங்களையும் பெரிய பலகைகளையும் அள்ளிக் கொண்டு அகழின் பக்கம் சென்றனர். அவர்களுடன் அநேகர் தச்சுவேலை செய்யும் உபகரணங்களுடன் வந்துசேர்ந்தனர். குதிரை வீரர்களால் காக்கப்பட்டு அவர்கள் இடையே இவர்களும் முன்னேறி வர ஆரம்பித்தனர். அகழின் மேல் பாலம் கட்ட முயற்சி நடக்கிறது என்று திட்டமாய்த் தெரியவந்தது.

பீமதேவன் வில் வீரர்களனைவரையும் ஒருங்கே சேர்த்தார். ஒரு குழு குதிரை வீரர்களின்மேல் இலக்குவைத்து அடித்தது. மற்றொரு பகுதி பாலம் கட்டும் பொருள் எடுத்துவரும் வீரர்களை அடித்துத் துன்புறுத்த ஆரம்பித்தது. 'அல்லாஹோ அக்பர்,' 'ஜய் ஸோம்நாத்' என்ற முழக்கம் ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டிருந்தது.

ஆனால் எதிரிகள் இந்த முறை மிகவும் முஸ்தீப்புடன் முன்னேறினர். ஒரு வீரன் இறந்தால் உடனே மற்றொரு வீரன் அங்கே முளைத்து நின்றான். ஒரு குதிரை விழுந்தால் விழுந்துவிட்டதா என்று நிச்சயம் தெரியுமுன்னரே அங்கே மற்றொரு குதிரை நிற்கும். இந்த விதமாக இரு கக்ஷியினரும் தம் முழுப் பலத்துடன் வேலை செய்தனர்.

நடுவாசலை முறிக்கும் இந்த யோசனையைப் பாழ்படுத்த மகாராஜாவும் ராயும் சேர்ந்து யோசனை செய்து, ஒரு புது உபாயம் கண்டுபிடித்தனர். யானைகளைச் சேர்த்து, பெரிய பெரிய கற்களை எடுத்துவரச்செய்து நடுக்கோட்டை வாசற் கதவின் பின்பக்கம் அடுக்க ஆரம்பித்தனர். எதிரேயும் பாலம் கட்டவரும் வீரர்கள்மேல் கல்லை எறிந்து நசுக்க ஆரம்பித்தனர். மேலே இருந்த ராஜபுத்திர வீரர்கள் கஜினி வீரர்கள் அம்படிபட்டுக் கீழே விழுந்தனர். கஜினி வீரர்கள் அம்படிக்கும் கல்லடிக்கும் இலக்காகி, சாவுக்கு விருந்தாயினர்.

மகமூத் இன்று மனிதர் எண்ணிக்கையைப் பற்றி லக்ஷியம் செய்வதைக்கூட மறந்து விட்டான். எறும்புக் கூட்டங்கள்போல் அவர்களை அழிப்பது என்று நிச்சயம் செய்துவிட்டான். அகழிலும் அதன் கரையிலும் பிணங்கள் குவியத் தொடங்கின.

நடுப்பகல்வரை பாலம் ஏற்படுத்த, கோரமான யுத்தம் நடந்தது. கடைசியில் எப்படியோ கஜினி சேனை பாலத்தை நிறுத்தி, கதவுகளில் சங்கிலிகளையும் பிணைத்துவிட்டன.

கோட்டைக்குள்ளே பெரிய பெரிய கற்கள் கதவுக்குப் பின்னால் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. கதவை அசக்க முடியாது. அப்படி அசக்கினாலும் கதவை இலகுவில் அப்புறப்படுத்த முடியாது. எங்கெங்கே கற்கள் கிடைத்தாலும் பிடுங்கிக்கொண்டுவந்து கதவுக்குப்பின் அடைத்துவிட்டனர்.

இரு பகுதியினரும் பிரம்மப்ரயத்னம் செய்துகொண்டிருந்தனர்.

தொலைவில் மகமூத்துடைய பச்சைத் தலைப்பாகையும் பொன்னிறச் சந்திரனும் ஒருமுறை தோற்றமளித்தன. பிறகு அவன் மறைந்துவிட்டான்.

ஒன்றன் பின் ஒன்றாக ஆறு யானைகள் தம் துதிக்கையில் பயங்கரமான மரங்களை எடுத்துக்கொண்டு ஓடிவந்தன. பாலத்தின்மேல் வந்து கதவை இடித்தன. கதவுகள் அலறின. அஸ்திவாரம் முதல் ஆட ஆரம்பித்தது.

பின்னால் மலைபோல் குவிந்திருந்த கற்களின் காரணமாகக் கதவு கொஞ்சம்கூட அசைந்து கொடுக்கவில்லை. ராஜபுத்திர வீரர்கள் 'ஜய் ஸோம்நாத்!' என்று ஆனந்த முழக்கம் செய்தனர். இருந்தாலும் பீமதேவன் மனம் நிம்மதியில்லை. என்ன இருந்தாலும் மரக்கதவுகள் யானை இடிகளை எவ்வளவு நேரம்தான் தாங்கும்? இரும்புக் கவசம் பூண்ட அந்த யானைகளை எப்படித்தான் அடித்து நிறுத்தமுடியும்? மகாராஜாவும் ராயும் கொஞ்சநேரம் கூடி ஆலோசித்தனர். சாவுடன் சண்டையிட்டால் ஒழிய வெற்றி கிடைக்காது என்று முடிவு செய்தனர்.

எல்லா வீரர்களும் உயிரையே தரத் தயாராயினர். ராய் தானே செல்லத் தயாரானான். ஆனால் குருதேவர் அவனைத் தடுத்துவிட்டார். மகாராஜாவையும் கஷ்டப்பட்டு அடக்கினார். யுத்தம் ஆரம்பித்து இரண்டாம் நாளே அவர்கள் உயிருக்கு ஆபத்துவரும் காரியங்களில் ஈடுபடுவது சரியல்ல.

எதிரியினுடைய ஒரு யானை அடிபட்டுவிட்டது. ஆனால் அதனிடத்தில் மற்றொரு யானை வந்து சேர்ந்தது. ஆறு யானைக்குப் பதில் எட்டு யானைகள் வந்தன. பாலமே அசைய ஆரம்பித்தது. எட்டு யானைகள் பெரிய மரங்களைக்கொண்டு கதவை இடித்தன. அந்த யானைகள்மேல் அடித்த பாணங்கள் வாத்தின்மேல் பட்டுச் சிதறும் நீர்த்துளிகள்போல் சிதறின.

கதவுக்குப் பின்னால் அடுக்கப்பட்டிருந்த கற்களுக்குப் பின்னால் நான்கு யானைகள் உதவியாக நிறுத்திவைக்கப்பட்டிருந்தன. கதவுகள் அலறினவே தவிர நகரவேயில்லை. மகமூத்தின் யானைகள் பின்வாங்கிவிட்டன. நேரம் பூராவும் அந்தப் பாலத்தின்மேல் இரண்டு பக்கங்களிலிருந்தும் அம்புகள்வந்து பாய்ந்தவண்ணமிருந்தன. வில் வீரர்களும் அலறி மடிந்தவண்ணம் இருந்தனர்.

ராய்க்கும் அடிபட்டுவிட்டது. மந்திரி விமலன் காயப்பட்டுவிட்டான். மகாராஜா பீமதேவன் மட்டும் சந்திர கவசம் அணிந்தவர்போல் அங்கும் இங்கும் ஓடித் திரிந்துகொண்டிருந்தார்.

துவாரகை வாசலில் சில காவலாளர்கள் காவல் புரிந்துகொண்டிருந்தனர். ஜூனாகட் வாசலில் முதல்நாள் போலவே சில ஆமை வீரர்களும் சில குதிரை வீரர்களும் இருந்தனர். ஆனால் தத்த சோலங்கி வேண்டுமளவு வீரருடன் அதைக் காவல் புரிந்துகொண்டிருந்தான்,

மூன்றும் முறையாகப் பின்னும் இரண்டு யானைகளை மாற்றி, எட்டு யானைகள் முன்னேறி ஓடிவந்தன. முதல் யானை நடுப்பாலம்வரை வந்

தது. மேலிருந்து வீரர்கள் ஜெய் ஸோம்நாத்! என்று ஒரு கோஷமிட்டனர். யானைமேல் எரிகின்ற தீவட்டிகள் எறியப்பட்டன. நாலா பக்கமும் கந்தகம் நெடி வீச ஆரம்பித்தது. முதல் யானை இந்த நெடி தாளாமல் மிகவும் வேகமாக ஓடிவந்த வேகத்தை நிறுத்த ஆரம்பித்தது. பின் கால்கள் வழுக்கிவிட்டன. பின்னால் வந்த யானையின் வேகத்தால் அது கொஞ்சம் நின்று முன்னால் நகர்ந்தது. முன் கால்களும் வழுக்க வேறு வழியின்றி அகழில் அழுந்திற்று.

இந்த நகளையைப் பயன் படுத்த எண்ணிய சில சிறந்த வீரர்கள் கையில் எரியும் கொள்ளிக் கட்டைகளை எடுத்துக்கொண்டு பாலத்தில் குதித்தனர். அவர்கள் மற்றொரு கையில் ரம்பமும் வைத்திருந்தனர்.

பாலத்தின்மேல் யானைகள் வெருண்டன. பின்னால் நின்ற மூன்று யானைகள் வாலைத் தூக்கிக் கொண்டு பிடித்தன ஓட்டம். நடுவில் நின்ற நான்கு யானைகளும் அப்படியே நின்றன. குதிரை வீரர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர்கள் மேலேறிவர ஆரம்பித்தனர். கோட்டையின் மேல் 'ஜெய் ஸோம்நாத்' முழக்கம் எதிரிகள் உள்ளத்தைக் கிழித்துக் கொண்டிருந்தது.

கலவரத்துக்கேற்றவாறு சத்தமும் அதிகமாயிருந்தது. இரண்டு கக்ஷியினரும் கண்ணை மூடிக் கொண்டு அம்புவிட ஆரம்பித்தனர். அரை நாழி ஒரு நாழிவரை யாருக்குமே ஒன்றும் புரியவில்லை. இந்தக் குழப்பத்துக்குள்ளேயே இருபது வீரர்கள் சங்கிலியை ராவி அறுத்துவிட ஆயத்தம் செய்தனர். மற்றும் இருபது வீரர்கள் பாலத்துக்கு நெருப்பு வைத்துவிட முயன்று கொண்டிருந்தனர். கொஞ்ச நேரத்துக்குள் கஜினி சேனைவீரர்கள் இவர்களைப் பார்த்துவிட்டனர். உடனே எல்லோரும் சேர்ந்து அவர்களின்மேல் அம்பு செலுத்த ஆரம்பித்தனர். அவர்களை நெருங்கி வந்தவர்களைக் குஜராத்தி வீரர்கள் சல்லடையாய்த் துளைத்து வாட்டி வதக்கினர். பீமதேவன் கையால் இறந்தவர் எவ்வளவோ வீரர்கள். காயமடைந்த ராயின் அம்புகூட இலக்கு மாறவில்லை, பலமும் குன்றவில்லை. விமல மந்திரியும் அவ்வாறே.

மகமூத்தின் வீரர்கள் பாலத்தின்மேல் ஏறினர். நூற்றுக்கணக்கான வீரர்கள் ஜெய் ஸோம்நாத் கோஷம் இட்டனர். அம்பு விட்டனர். பாலத்தை உடைத்து எரிப்பதில் முனைந்திருந்த வீரர்களுக்கு உதவி புரிந்தனர். யுத்தம் பயங்கரமாய் நடந்தது. சாகிறவர்களின் அலறல் காதுகொண்டு கேட்கச் சகிக்கவில்லை. கொஞ்ச நேரத்தில் பாலத்தின் பிணைப்பு அறுந்தது. பாலத்தின் நடுவே நெருப்புப் பிடித்து எரிய ஆரம்பித்தது. சற்று நேரத்தில் பாலம் தனித்து ஆற்றுடன் ஓடிச் சென்றது.

கோட்டைமேலிருந்து பீமதேவன் 'ஜெய் ஸோம்நாத்' என்று கோஷம் இட்டார். ஆயிரக்கணக்கான வீரர்கள் தொடர்ந்து முழங்கினர்.

## 2

காலையிலிருந்து பகல் முழுவதும் சிவராசி கணபதி கோயிலில் உட்கார்ந்திருந்தான். அவன் மனது கணபதியிடமும் இல்லை, அவர் தந்தையிடமுமில்லை. எதிரே சுவருக்கருகில் இருந்த ஒரு கல்லில்தான் அவன் கண் புதைந்திருந்தது. அவன் கண்களில் ஒரு அரக்கப் புன்னகை விளையாடிக்கொண்டிருந்தது.

சித்தேசுவரன் அகழில் இறங்கியதை அவன் தன் கண்ணால் பார்த்திருந்தான். நீலத்திரைகளை எதிர்த்து நீந்தி அகழின் அக்கரையேறி அவன் கஜினி தலைவன் ஒருவனுடன் சேருவதைச் சிவராசி கற்பனைக் கண்ணால் கண்டான். அந்தத் தலைவன் சித்தேசுவரனை அமீரிடம் அழைத்துச் செல்வதையும் அவன் தன் கண்முன்னே கற்பனைத் துணை கொண்டு பார்த்து மகிழ்ந்துகொண்டிருந்தான். பாசுபத மதத்தின் குருதேவரை அண்டிக்கெடுக்கும் இந்த முயற்சியில் சிவராசி சித்தேசுவரன் உதவியால் வெற்றிபெறப் போகிறான். அமீரும் சித்தேசுவரனைத் தவ சிரேஷ்டனான சிவராசியின் ஆள் என்றறிந்து அவன் காலை நீர்விட்டுக் கழுவுவதையும் சிவராசி பார்த்தான். பிறகு சித்தேசுவரன் அமீரிடம் வாக்குக் கேட்க அமீரும் பயந்து கொண்டே வாக்குக் கொடுத்தான். சித்தேசுவரன் பிறகு தானே அமீரை அழைத்துவந்து கோட்டைக்குள் வரும் சுரங்க வழியைக் காட்டிவிட்டான். சிவராசி இதையெல்லாம் பார்த்துக்கொண்டு சிரித்தான்.

அந்தக் கழுதை பீமன், அவனுடைய அசட்டுக் குரு சர்வக்ஞன், போன வாரம்தான் அவர்கள் அந்தப் பாதையை மண்கொண்டு அடைத்திருந்தனர். பட்ட சிஷ்யனான அன்றே கங்க சர்வக்ஞர் சிவராசியிடம் அதைப்பற்றிச் சொல்லியிருந்ததை அவர்கள் மறந்துவிட்டனர். புத்திசாலிகள்! அந்தவழி இருவருக்குத்தான் தெரியும். ஒன்று கங்கருக்கு, மற்றொன்று சிவராசிக்கு. கங்கர் அதை மூடினார் சிவராசி திறந்துவிட்டான்! அப்படியே தானே பாசுபத மதத்தையும் அவர் அழிக்க, இவன் திறந்துவிட்டான்! ஆஹா ஹா...!

தன் சிரிப்பைக் கேட்டுத் தானே திடுக்கிட்டான், சிவராசி. இதோ இந்தச் சுரங்கம் வழியாக அமீரே வரப்போகிறான். இந்தப் பாவிகளை அழித்துச் சாம்பலாக்க! தனக்கேற்பட்ட பெருமையில் அவன் தன் மார்பைப் பார்த்துக்கொண்டான். முட்டாள் குரு. சௌளாவை மணந்த கயவன், அவர்கள் உதவிக்கு நிற்கும் வீரர்கள் எல்லோரையும் நொடி நேரத்தில் மாய்த்துவிடப் போகிறான்.

நேரம் ஆக ஆக அவன் பரபரப்பு அதிகமாயிற்று. சித்தேசுவரன் சமுத்திரத்திலேயே முழுகிவிட்டானா? அல்லது நன்றி கொன்றவனாக ஆகி, விசுவாசத் துரோகம் செய்து குருவினிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டானா? அப்படிச் செய்

திருந்தால்...? சிவராசி அவனை ஒரு பொழுதும் விடமாட்டான். இன்று அமீர் வரவில்லை என்றால் அந்த வழியில்தானே போவதாக நிச்சயம் செய்திருந்தான் சிவராசி. அவசியம் ஏற்பட்டால் தானே மூடிய அந்தச் சுரங்க வாயிலைத் தானே தோண்டி வெளியேறிவிடுவான்.

திரிபுரம் எரித்த சிவனும் சரி, சிவராசியும்சரி, இன்று அவன் மூன்றும் கண்திறந்திருந்தது. பிரபாசி எரிந்து சாம்பலாகப் போகிறது. அந்தப் பயங்கரச் சாம்பல் வெளியில் சௌளாவைத் தூக்கிச் சென்ற பீமனின் சாம்பல் அடையாளம் கூடத்தெரியாமல் போய்விடப்போகிறது. தன்னை விட்டு ஒரு அசட்டு வீரனை மணந்த சௌளாவும் அதே கதியைத்தான் அடையப்போகிறாள். இப்படியே எண்ணக் கோவை தொடர்ந்து சென்றது. வெளியிலிருந்து 'ஜெய் ஸோம்நாத்' என்ற முழக்கம் கேட்கும்போதெல்லாம் அவனுடைய உள்ளத்தில் நெருப்பு கொடித்து கொடித்து எரிய ஆரம்பித்தது.

நடுப்பகல் ஆயிற்று. சூரியன் இறங்க ஆரம்பித்துவிட்டான்.........திடீரென்று அவன் உட்கார்ந்திருந்த இடத்தில் ஏதோ கொஞ்சம் சப்தம் கேட்க ஆரம்பித்தது... ...கொஞ்சம் சுரங்கச் சத்தமும் கேட்டது.

அவன் ஓடிச் சென்று அந்தக் கல்லை நகர்த்தினன் முடியவில்லை. சிமிட்டாவினால் நாலுபக்கமும் உள்ள மண்ணைத் தோண்டி எடுத்து அப்புறப்படுத்தினன். அப்பொழுதே ஆனந்த நர்த்தனம் புரிந்தான். கங்கர், பீமன், சௌளா, அவள் தாய், அவர்களுக்கு உதவி புரிந்தவர் எல்லோரும் இதோ இப்பொழுதே சாம்பராகப் போகிறார்கள்! கீழிருந்து யாரோ கல்லைத் தட்டிப் பேர்த்தார்கள். ஒன்று இரண்டு மூன்று.........ஐந்து கற்கள் பெயர்ந்துகொடுத்தன.

சிவராசி காட்டு மிருகம்போல் ஆனந்த முழக்கம் செய்தான். சுரங்க வாயிலிலிருந்து சித்தேசுவரன் தலை உயர வந்தது. ஜகத்குருவின் தூதன் என்ற பெருமைக்குத் தக்கவாறு! மண் பூசிக்கொண்டு வெளியேறிற்று அந்த நீசன் முகம்! அங்கங்கே பட்ட இடிகளால் ஏற்பட்ட காயங்களிலிருந்து வழியும் ரத்தம், வழியிலே ஒட்டிக்கொண்ட சிலந்தி வலைகள் தாங்கிய தலைமயிர், உடம்பு முழுவதும் சேறும் சகதியும்! பார்க்க வேடிக்கையாகத்தான் இருந்தது!

அவன் வெளியேறும்போது அநேகமாக உடலில் உயிரேயில்லை. அவன் இடுப்பிலே ஒரு வளையம் மாட்டி, அதிலிருந்து சங்கிலி கட்டி, அவன் பின்னால் வருபவர்கள் அதைப் பிடித்துக்கொண்டிருந்தனர்.

சிவராசி தன் அருமைச் சிஷ்யனை அணைய முன் வந்தான். சித்தேசுவரன் பின்னடைந்து, "துஷ்டா, என்னைக்கொண்டு ஏன் இந்த வேலையைச் செய்து வைத்தாய்?" என்று பல்லைக் கடித்துக்கொண்டு அலறினன், பசி, ஆத்திரம் இவை காரணமாக அவன் காட்டுமிருகம்போல் பாய ஆரம்பித்தான். சிவராசிக்கும் ஆத்திரமாய் வந்தது.

பன்னிரண்டு வீரர்கள் வெளியேறினர். ஒருவன் தான் யவனன். மற்றவர்கள் ஹிந்துக்கள். இந்த வேலைக்கெல்லாம் அமீர் 'காபிர்கள்'தான் தகுதி என்று எண்ணியிருந்தான்! அவர்கள் அவமானப்பட்டு நின்ற சிவராசியைப் பிடித்து



அலைத்து, ‘காண்பி ஜானகட் கதவுக்கு வழியை!’ என்றனர்.

சிவராசி அவமானத்தை மறந்தான். பீமன் சௌளாவுக்கு யமனானேன் என்ற சந்தோஷம் வந்தது.

அவன் முன்னே நடந்தான்.

3

சிகரத்தின் உயர்ந்த அறை வாசலிலிருந்து குருதேவர், கங்கா, சௌளா மூவரும் இந்தத் தேவாசுர யுத்தத்தைப் பார்த்துக்கொண்டிருந்தனர். சௌளாவுக்கு இன்று அபார ஆனந்தம். அவள் பார்வதி, சம்புவின் மனைவி, பட்டண்ராணி. அவளுடைய நாதன் அதோ கோட்டையின் மேல் யுத்தம் புரிந்துகொண்டிருந்தார். மாலையில் வெற்றி பெற்றுத் திரும்பி வரும் அவருக்குக் குங்குமம் அக்ஷதை கொடுத்து வரவேற்க வேண்டும் என்று அவள் எண்ணிக்கொண்டிருந்தாள்.

குருதேவர் சிவ கவசத்தைத் திரும்பத் திரும்பப் பாராயணம் செய்து கொண்டிருந்தார். கங்காவும் சுகமாயிருந்தாள். குருதேவர் அருகில் இருந்தார், தான் பெற்ற மகள் சௌளாவும் இருந்



தாள். அவளுக்கு மணமும் ஆய்விட்டது. இனி அவளுக்கு உலகத்தில், ஒரு வேலையுமில்லை. ஒரு ஆசையும் பாக்கி இல்லை.

பாலம் முறிந்தது. வீரர்கள் முழக்கம் செய்தனர். முக்கிய வாசலின் மேல் சந்தோஷம் பொங்க ஆரவாரம் செய்தனர். அமீருடைய சேனை அங்குமிங்கும் சிதறிற்று. புதுப் பாலம் கட்ட, புது யானைகள் கொணர அங்குமிங்கும் ஓட ஆரம்பித்தனர். இது உண்மையான வெற்றி...

திடீர் என்று குரு தேவர் கண் ஜுனைகட் வாசற் பக்கம் சென்றது.

'அடே: அந்தப் பைத்தியம் என்ன செய்து கொண்டிருக்கிறான்?'

சிவராசியும் தத்தா சாளுக்யனும் ஏதோ வாக்கு வாதம் செய்துகொண்டிருந்தனர். குருதேவர் கீழே இறங்கி வர ஆரம்பித்தார்.

இது திடீர் என்று என்ன நேரிட்டுவிட்டது? எப்படி இது ஏற்பட்டது? ஜுனைகட் வாசலில் எதிரே நின்றிருந்த வீரர்கள் காலை முதல் அசைவு இன்றி இருந்தவர்கள் இது ஏன் புது உற்சாகம் காட்டுகிறார்கள். டங்காக்கள் அலற ஆரம்பித்தன. மறைந்திருந்த மகமூதும் அவர்கள் பின்னால் குதிரை மேல் ஏறி ஓடி வருகிறானே!

தத்தன் சிவராசியினிடம் சண்டை போட்டுக் கொண்டே இருந்து விட்டதனால் பீமதேவனுக்குச் சமாசாரம் சொல்லி அனுப்பமுடியவில்லை. பீமதேவன் கஜினி சேனையின் முஸ்தீபைப் பார்த்து அங்கே போய்ச் சேர்ந்தார். சௌளா அலறினாள். "அம்மா, இது என்ன அம்மா இது?"

கங்காவும் சத்தமிட்டு அவளுடன் பிணைந்தாள். கௌரவம் வாய்ந்த குருதேவரும் முடிந்த வரையில் ஓடிச் சென்றுகொண்டிருந்தார்.

சௌளா கத்தினாள்.

"அம்மா அதோ பார். ஜுனைகட் வாசலில் பார். கீழே ஏதோ கலவரம் நடக்கிறதே."

"அதோ ஆமைகள் மீண்டும் அகழில் இறங்கி விட்டனவே. மகாராஜா இன்னம் அங்கே போய்ச் சேரவில்லையே."

ஆமைகள் தண்ணீரில் குதித்தன. கரையில் நின்ற குதிரை வீரர்கள் அம்புவிட ஆரம்பித்தனர். தத்தாவினுடைய வீரர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்கள். ஆனாலும் அவர்கள் வீரம் காட்டுவதில் குறையவில்லை. அடிபட்டும் இறக்க ஆரம்பித்தனர்.

கடைசியில் தத்தன் சிவராசியைத் தூரத் தள்ளிக் கோட்டையை எச்சரிக்கச் சண்டைக் கொம்பை எடுத்து ஊதினான்.

பீமதேவன், ராய், விமலன் மூவரும் கோட்டை மேலேயே ஓடிவர ஆரம்பித்தனர். தத்தா பித்துப் பிடித்தவன்போல் மயிரைப் பிய்த்துக் கொண்டிருந்தான், தன் வில்லை வளைக்கக்கூட அவனிடம் பலம் இல்லாது போயிருந்தது.

"அம்மா, மகாராஜா போய்ச் சேர்ந்து விட்டார்" என்று சந்தோஷத்துடன் கை தட்டினாள் சௌளா.

மேலிருந்து பீமதேவனுடைய வில் வீரர்கள் அம்பு செலுத்த ஆரம்பித்தனர். எதிரே ஐயாயிரம் வீரர்கள் அகழில் குதித்தனர். பின்னால் யமன்போல் அமீர் கருங்குதிரைமேல் இங்கும் அங்கும் ஓடிக்கொண்டிருந்தான். நாலா பக்கத்திலிருந்தும் யவன சேனை ஜுனைகட் வாசலருகே வந்து சேர்ந்துவிட்டது. ராஜபுத்திர சேனையும் அங்கே வந்துசேர ஆரம்பித்தது.

பீமதேவன் தத்தன் கழுத்தைப் பிடித்தார். "அட வஞ்சகத் துரோகி! நன்றி கொன்றவனே!" என்று சொல்லி அகழில் தள்ளிவிட்டார்.

ராய் சேனையை அணிவகுத்து நிறுத்தினான். விமல் கல் சேர்க்கத் தொடங்கினான்.

"ஜய் ஸோம்நாத்!......அல்லாஹோ அக்பர்!" வீரர்கள் முழங்கினர்,

"அம்மா அம்மா. ஐயோ அம்மா......" சௌளா கூச்சல் போட்டாள்.

ராஜபுத்திர சேனை சண்டைகூடப்போட ஆரம்பிக்கவில்லை. அதற்குள் ஜுனைகட் வாசல் மந்திரம் பட்டுத் திறப்பதுபோலத் திறந்துகொண்டது. ராஜபுத்திர சேனையிடையே குழப்பம் ஏற்பட்டது. ஆமைகள் வீரர்களாகி, பிரபாசிக் கோட்டைக்குள் புக ஆரம்பித்தனர்.

"மகாராஜா! உள்கோட்டையைக் காப்பாற்றுங்கள். சீக்கிரம் போங்கள்!"

"விமலா சீக்கிரம். வீரர்களே! ஜாக்கிரதை!"

பீமதேவன் கீழே இறங்கினார், 'உள்கோட்டை உள்கோட்டை! என்று நாலாபக்கமும் சத்தம் எழ ஆரம்பித்தது.

ராய் 'ஜய் ஸோம்நாத்' என்ற முழக்கத்துடன் கீழே குதித்தான். 'டப் டப்' என்று ராஜபுத்திர வீரர்கள் எல்லோரும் கீழே குதித்து நுழைந்துவரும் அமீர் சேனையைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்தனர். அங்கே அந்தக் கோட்டை வாயிலில் அம்பு, வாள், முஷ்டியுத்தம் நடக்க ஆரம்பித்தது.

ராய் வெறிபிடித்தவன்போல் சுழன்றான். ஒரு முறை நுழையும் வீரர்களையும் துரத்தினான். ஆனால் பின்னால் மத்திய ஆசியாவின் பயங்கரமான சேனையை உடன் அழைத்துக்கொண்டு கஜினி அமீரே நுழைந்துகொண்டிருந்தான்

யவன சேனை முழுவதும் பிரளயகால வேகம் போல் வாசலில் நுழைந்து வருவதை யார்தான் தடுக்கமுடியும்?

ஒருபுறம் ராய் பாய்ந்துகொண்டிருந்தான். மறு பக்கம் மகாராஜா தம் கைவரிசையைக் காட்டிக் கொண்டிருந்தார். இருவரும் கீழே. எதிரிகள் குதிரையின்மேல். சௌளா அங்கே மயங்கித் தன் தாயின் மடியில் விழுந்தாள். கங்கா நடுங்கினுள். குருதேவர் கூட்டத்தில் எங்கே இருக்கிருரோ தெரியவில்லை. சங்கர ஜபம் செய்வதைத் தவிர, கங்காவுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

பீமதேவன் உள்ளே நுழைந்து உள் கோட்டைக் கதவைச் சாத்திவிடு என்று விமலனுக்கு உத்தரவிட்டார். விமலன் மனிதர்களை அனுப்பி, பின் வாசல் வழியாய் ஓடுவதற்கு முயற்சி செய்யுங்கள் என்ருன்.

"விமலா! எனக்கு உயிரை விடத்தெரியும். பின்வாங்கத் தெரியாது."

"ஆனல் பட்டண்..."

"போ போ. மஹாதேவனைக் காப்பாற்று..." பீமதேமன் உத்தரவைத் தலைமேல் தாங்கி, விமலன் வீரர்களுடன் உள்ளே சென்று கோட்டைக் கதவைச் சாத்தினுன். பீமதேவன் உள் கோட்டைச் சுவர்மேல் நின்று அமீருடன் சண்டையிட முடிவுசெய்தார்.

ராய் முன் பின் கண்டிராத பராக்ரமம் புரிந்தான். அவன் வலது கை வெட்டப்பட்டுவிட்டது. ரத்தம் பாய்ந்து ஓடிக்கொண்டிருக்கும்போதே அவன் கையில் கத்தி எடுத்து ஒரு வீரன் உதவியால் குதிரைமேல் ஏறிக்கொண்டான்.

அவன் கொஞ்சநேரத்திலேயே எதிரிகள் வாயினுலேயே 'சபாஷ்' போடவைத்துவிட்டான். வலது கையிலிருந்து ரத்தம் திறந்த மதகில் பாயும் ஆறுபோல் பாய்ந்துவந்துகொண்டிருந்தது. கண்கள் இருண்டன. ஒரே மயக்கம். இருந்தாலும் சண்டை போடுவதை நிறுத்தவேயில்லை. கடைசியில் ஒரு அம்பு வந்து அவன் உடலில் தைத்தது. அவன் குதிரையிலிருந்து கீழே விழுந்தான். பிறகு எழுந்திருக்கவேயில்லை.

ஆகாயத்திலிருந்து அப்சரசுகள் பூ மழை பொழிந்தனர்.

4

கங்க சர்வக்ஞர் சிவராசியைப் பிடிக்கத் தேடினுர். அந்த அசடன்தான் ஏதோ செய்துவிட்டான் என்று அவருக்குத் தோன்றிவிட்டது. முதல்நாள் இரவே அவன் வெறிபிடித்தவன் போலப் பேசிக்கொண்டிருந்தான். காலையிலிருந்து கணபதி கோயிலில் தனியே உட்கார்ந்திருந்தான். பிறகு தத்தனுடன் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். கண்டிப்பாய் அவன்தான் ஏதோ ரகசியமாகச் செய்திருக்கவேண்டும்.

அவர் ஜுனகட் வாசலுக்குப் போவதைப் பார்த்து, சிவராசி ஓடிவிட்டான். அதை அவர் பார்த்தார். கதவு திறந்ததையும் அவர் பார்த்தவுடன் அவர் மனது துணுக்குற்றது. அப்படியே கோயிலின் சிகரத்தின் பக்கம் திரும்பி, "கடவுளே! இதுவும் உன் சம்மதமா? போலாநாதா! என்ன எண்ணி இந்த முடிவைத் தந்தாய்?" என்று கரைந்து உருகி அழ ஆரம்பித்துவிட்டார்.

அவர் உடனே திரும்பினுர். கங்காவையும் சௌளாவையும் காப்பாற்றிவிட்டு, கடவுளிடமே இருந்தாகவேண்டும். சேனையில்லாத இடமாகப் பார்த்து மேலே சென்று உள்கோட்டையருகில் வந்தார். அவர் உள்ளம் கெஞ்சிக்கொண்டிருந்தது. கடவுள் எண்ணம்தான் என்ன? மனித முயற்சியின் எல்லை இவ்வளவுதானு?

இன்று நாற்பது வருஷங்களாக அவர் பிரபாசியை அலங்கரித்து வந்திருக்கிருர். தர்ம சித்தாந்தங்களைப் பிரசாரம் செய்து வந்திருக்கிருர். பகவானுடையபெருமையைப்பரதகண்டம் முழுவதிலும் பரப்பியிருக்கிருர். இந்தச் சாதனை எல்லாம் ஒரே நிமிஷத்தில் வீணுகிவிடும் போலிருக்கிறதே. அவருடைய சிரத்தை சிதைவுற ஆரம்பித்தது.

எப்பொழுதும்போல், அவர் தம் எண்ணங்களை எல்லாம் சிவார்ப்பணம் செய்யமுயன்ருர். போலாநாதன் செய்வதுதான் சரி என்றுகொள்ளலாம். திரிபுரசுந்தரியின் பூஜை என்ற பெயரால் அங்கே வெறுக்கத்தக்க செயல்கள் நடந்தன. பைரவருக்கு அர்ச்சனை என்ற பெயரால் அங்கே பயங்கரமான அக்கிரமங்கள் நடந்தன. அவர் அதில் ஒன்றும் தலையிட முடியவில்லை. சிவராசி குருபதவியைத் தானே பிடுங்கி நடத்த முயன்ருன். அந்த இடத்தைப் பகவான் எப்படி புனிதமான தீர்த்தஸ்தலமாக வைத்திருப்பார்?

அவர் கடவுளின் ஆணையின் ரஹஸ்யத்தை அறிய முயன்ருர். பிரபாசி அங்கே நடந்த துஷ்ட முறைகளின் காரணமாகவே ஏற்பட இருக்கிறது. பகவத் பக்தியின் இந்த முறை அழிந்து புதுமுறை ஏற்பட்டு அது வெற்றியடையப் போகிறது. இந்த வீழ்ச்சியை அவராலும் தடுக்க முடியவில்லை. அதனுல்தான் பகவான் அவரையும் தம் பாதாரவிந்தங்களுக்கு அழைத்துக் கொள்வது என்று முடிவு செய்தார்போலும்! இன்னம் ஒரே நிமிஷ நேரம்தான்!

"ஆனல், பகவானே! நீருமல்லவா இந்த யவனன் கையால் அழிவடைய நேரிடும்." அவர் உள்ளம் கரைந்தது. "ஸோமநாதா! முக்கண் படைத்து அதன் பலனுய், திரிபுரம் எரித்த நீரா இப்படி மூன்றும் கண்ணை மூடி நிற்கிறீர். என் பிரபுவே!" அவர் அலற ஆரம்பித்தார். "என்ன நாங்கள் அவ்வளவுகூடத் தவம் செய்யவில்லையா?"

அவர் உள் கோட்டையைச் சமீபித்தார். அதற்குள் வாசல் மூடப்பட்டுவிட்டது. "கடைசி நிமி

ஷத்தில் என் கடவுளைக்கூடப் பார்க்கக்கூடாதா நான்? அதற்குக்கூடப் பாக்கியம் புரியவில்லையா?" என்று அழுதுவிட்டு அருகே உள்ள ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தார். பாதி திறந்த வீட்டினுள்ளிருந்து யாரோ காயம்பட்டவன் முணகும் சத்தம் கேட்டது—" தண்ணீர்...தண்ணீர்...! "

உள்ளே சென்றார் குருதேவர். திபா கோட்டாரி தன் சாவை எதிர்பார்த்து அழைத்துக்கொண்டிருந்தான்.

" கோட்டாரி — ! "

" குருதேவரா—நான் அதிர்ஷ்டக்காரன். இந்த நேரத்தில் தங்கள் தரிசனம் கிடைத்ததே......... தண்ணீர் வேண்டுமே."

"கொஞ்சம் இரு, கொண்டுவருகிறேன்..." என்று சொல்லி, குருதேவர் தண்ணீர் கொண்டுவந்து உலர்ந்துகொண்டிருக்கும் அவன் தொண்டையில் ஊற்றி, "ஏன் அப்பா? எங்கே அடிபட்டாய்?" என்று கேட்டார்.

" பாலத்தில் சண்டை நடந்துகொண்டிருந்த போது நான் கல் சேர்க்க ஓடிக்கொண்டிருந்தேன். அங்கிருந்து சாப்பாடு தயாராகிவிட்டதா இல்லையா என்று பார்ப்பதற்காக நான் வரும் போது கணபதி கோயிலில் இருந்து சிவராசியும் யவன சேனையின் சில வீரர்களும் ஓடி வந்து கொண்டிருந்தனர். நான் அவர்களை விசாரிக்கச் சென்றபோது ஒருவன் என்னை இடைவாளால் அடித்துவிட்டான். அந்த அடி வசமாய்ப் பட்டு விட்டதனால் உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கிறது."

" கோட்டாரி கடவுளுக்கே நம் பேரில் கோபம் போலிருக்கிறது."

" மகாராஜா !..........."

" அவரை நான் பார்க்கவில்லை. எங்காவது சண்டை போட்டுக்கொண்டிருப்பார். இல்லை, ஒருகால் கைலாசவாசியாகிவிட்டாரோ !...... பகவான் எண்ணம் நடந்தே தீரும்."

" குருதேவா.........இது எல்லாம்............? "

" சம்புவின் எண்ணத்துக்குக் கீழ்ப்படிந்துதான் ஆகவேண்டும், கோட்டாரி, பூமியில் பிரளய காலம் வந்துவிட்டது."

கோட்டாரி பெருமூச்சு விட ஆரம்பித்தான்.

குருதேவர் " நம : சிவாய, சொல் நம : சிவாய" என்று சொல்லிச் சொல்ல வைத்தார். திபா கோட்டாரி குருதேவருடைய கையிலேயே உயிரை விட்டுவிட்டான்.

குருதேவர் அவன் கண்களைமூடிவிட்டு அவ்விடம் இருந்து கிளம்பினார். யவனர் எவ்விதம் வந்தார் என்பது இப்பொழுது அவருக்குத் தெரிந்துவிட்டது. உள்ளே போவதற்கு வழியும் தெரிந்துவிட்டது. உள்கோட்டை வாசலின் எதிரே உள்ள அனுமார் கோயிலின் கீழே இருந்து சுரங்கம் போயிற்று. சுரங்கத்துக்குள் காற்றுப் போகவும் சுவரில் ஓட்டைகள் இருந்தன. அவர் தைரியமாய்ச் சுரங்கத்தில் இறங்க நிச்சயித்து, கோயில் முற்றத்துக்குச் சென்றார்.

அங்கே முற்றத்தில் சண்டை வலிவாய் நடந்து கொண்டிருந்தது. அமீருடைய குதிரை வீரர்களும் குஜராத்திய வீரர்களும் செய்த யுத்த முழக்கங்கள் காதைத் துளைத்தன. மாருதியின் கோயிலின்மேல் பிராகாரத்தின்மேலே சில வீரர்கள் ஏறி, கற்களைச் சுற்றி அடுக்கிக்கொண்டு ஒரு கோட்டை தயார் செய்து அங்கிருந்து சண்டை போட்டுக்கொண்டிருந்தனர். இந்த வீரர்களின் திறமை காரணமாக அமீரின் சேனை உள்கோட்டைவாசல்வரை வரமுடியாதிருந்தது.

மற்றொரு வழியிலும் ஆரவாரம் ஏற்பட்டது. சண்டைக் கொம்புகள் ஊதப்பட்டன. யவன வீரர்கள் அந்தப் புறம் திரும்பினர். குருதேவர் மாருதியின் கோயிலை நோக்கிச் சென்றார்.

யாரோ, " குருதேவா, வாருங்கள் உள்ளே ! " என்றழைத்த சப்தம் கேட்டது.

குருதேவர்—"யாரது? வீரா சாவடாவா?"

கதவுகள் திறந்தன. குருதேவர் உள்ளே சென்றார். வீரா அழ ஆரம்பித்தான்: " குருதேவா, மகாராஜா கைலாசம் போய்விட்டாரே ! "

" என்ன சொல்கிறாய் ?"

" ஆம், குருதேவா, நூற்றுக்கணக்கான யவனர்களுக்கு எமனாக இருந்தவர் கடைசியில்..."

" போலாநாத் ! நீ எது செய்தாலும் சரி " குருதேவர் ஒரு பெருமூச்சுவிட்டு, " சரி, மகாராஜாவின் உடல் எங்கே இருக்கிறது? " என்று கேட்டார்,

" நாங்கள் ஏழுபேர் கூடவே இருந்தோம். அவர் இறந்தது தெரிந்தால் சேனை சிதறிப் போகும் என்று எண்ணி ஒருவருக்கும் தெரியாமல் இங்கே கொண்டுவந்து சேர்த்திருக்கிறோம். நாங்கள் ஏழுபேரும் செத்தால் கோயிலும் விழுந்துவிடும். பிறகு மகாராஜாவின் உடல் நாசமாகப் போனாற்போலத்தான் ! " என்று அழுத்துக்கொண்டான்.

" வீரா, மகாராஜாவின் உடல் நம்முடையதல்ல. அது சௌளாவினுடையது. எப்படியாவது அவர் உடலையும் என்னையும் உள்ளே அனுப்பிவிடு."

" எப்படி எடுத்துப்போவீர்கள் குருதேவா ? "

"இதோ பார். இங்கே இரண்டொரு முழம் தோண்டினுயானல் உள்ளே போகும் சுரங்கம்."

"சரி, கொஞ்சம் இருங்கள்" என்று சொல்லி விட்டு வீரா வெளியேசென்று தன் தோழர்களை ஜாக்கிரதையாயிருக்கச் சொல்லிவிட்டு, உள்ளே வந்தான். பிறகு குருவும் அவனும் சேர்ந்து பூமியைத் தோண்டினர். சுரங்க வாயில் தென் பட்டது.

"வீரா, நீ இங்கேயே இருக்கிருயா?"

"ஆகா! இருக்கிறேன். என் மகாராஜா போய்விட்டார். இனி எனக்கு எங்கிருந்தால் என்ன? எப்படியாவது அவருடன் போய்ச் சேர வேண்டும். அவ்வளவுதான்." என்று சொல்லி விட்டு, அவன் கடைசி முறையாகத் தன் மகா ராஜாவின் காலைத்தொட்டுக் கண்ணில் வைத்துக் கொண்டான்.

குருதேவருக்குச் சுரங்க வழி நன்ருய்த் தெரியும். அவர் கீழே இறங்கினுர். அவர் கழுத்தில் பீமதேவனுடைய உடல் இருந்தது.

ஆடி, அடிபட்டு எப்படியோ இழுத்துக் கொண்டு கணபதி கோயிலில் போய் ஏறினுர். சுரங்க வாயில் திறந்தபடி இருந்தது. அங்கே உட்கார்ந்து அவர் கொஞ்சம் களைப்பாறினுர். மகாராஜாவின் உடலில் பூராவாக அநேக காயங் கள் இருந்தன. குருதேவர் அவருடைய காயங்



களுக்குத் துணி கட்டினர். ராஜாவின் நாடி அடித்துக்கொண்டிருப்பதையும் கவனித்தார். பிறகு மீண்டும் கழுத்தில் போட்டுக்கொண்டு வெளியே கிளம்பி வந்தார். அங்கிருந்து கோட்டைப் பக்கம் திரும்பிப் பார்த்தார். அங்கே வீரர்கள் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். என்ன வீரம், என்ன பக்தி, என்ன பிடிவாதம். குருதேவருக்கே பெருமை பெருக்கெடுத்து வந்தது.

அடுத்த நிமிஷம் அவர் காதுகளில் ஒரு பயங்கரச் சிரிப்புச் சத்தம் விழுந்தது, எதிரே மேடைமேல் சிவராசி உட்கார்ந்திருந்தான்.

"ஏன்? நான் சொன்னேனே! நீங்கள் எல்லோரும் நாய்ச்சாவு சாவீர்கள் என்று? உண்மையாயிற்று இல்லையா?" சிவராசி கேட்டுவிட்டு மீண்டும் சிரித்தான்.

"ராசி, இது நீ பிறந்து வளர்ந்த இடம். இங்கேதான் உனக்குத் தீக்ஷை கிடைத்தது. இங்கேதான் வேதம் கற்றாய்; தேவனைப் பூஜை செய்தாய். இதையெல்லாம் மறந்து யவனர்களை அழைத்துக்கொண்டு இங்கே கொண்டு வந்துவிட்டாயே! மித்திரன், குரு, தேவன் எல்லோருக்கும் ஆபத்தைக் கொண்டுவந்து விட்டாய்! நீ இருக்கும் இடத்தைப் பகவானே எரித்து விடுவார் என்று நான் நம்ப ஆரம்பித்துவிட்டேன்." என்று சொல்லிவிட்டு, பீமதேவன் சடலத்துடன் குருதேவர் உள்ளே சென்றுவிட்டார்.

## 5

குருதேவர் கோட்டையுட்புறம் சென்றதும் அவர் உள்ளத்தில் ஒரு புது உணர்ச்சி ஏற்பட்டது. அவர் அறிந்த அந்தக் கோயில் வாசலில் அதன் சபா மண்டபத்தில் அவர் அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை. அங்கே அவர் தம் அகண்ட ராஜ்யம் செலுத்தியிருந்தார். மனிதர்களின் தேகம் ஆத்மா இரண்டின் மேலும் அவர் அரசு செலுத்தினர். அங்கே உட்கார்ந்து அவர் சக்கரவர்த்திகள் காணிக்கைகளையும் நமஸ்காரங்களையும் ஏற்றிருக்கிறார். அங்கே உட்கார்ந்துதான் அவர் பரத கண்டத்தின் ஸமஸ்காரம் அறிவு இரண்டுக்கும் உருக்கொடுத்திருந்தார். அவர் இந்த உலகிலே பகவான் லகுலேசருடைய வாரிசு. அவர் வாய்ச்சொல் மோக்ஷத்துக்கு மந்திரமாக இருந்தது. ஆகவே அங்கே சென்றவுடன் குருதேவர் தம் கவலையையும் அச்சத்தையும் உதறி எறிந்து, பழைய குருதேவரானார்.

கங்கா அவர் வருவதைப் பார்த்தாள். அவளும் அவள் மகளும் நடுங்கிக்கொண்டு கீழே இறங்கினர். அங்கே வந்து சௌளா பீமதேவன் கிடந்ததைப் பார்த்தாள். அவர் இறந்துவிட்டார் என்று எண்ணி அழுதுகொண்டே அவர்மேல் விழுந்து புரண்டாள். குருதேவர் அமைதியுடன் நின்று சௌளாவை அழைத்தார்.

"சௌளா, நாம் எண்ணியிருந்ததற்கு விரோதமாகக் கடவுள் நிச்சயம் செய்துவிட்டார். அம்மா, அழுவதால் இனி ஒன்றும் ஆகாது. தயாராகு. இதோ சற்று நேரத்தில் உள் கோட்டையும் விழுந்துவிடும். யவனர்கள் உள்ளே வந்து விடுவர். நீ சௌளா இல்லை. பட்டண் மகாராஜாவின் பட்டத்து ராணி. யவனர்கள் தீண்டுமுன் உன் கடமை அக்னியில் பிரவேசித்தாகவேண்டும்."

சௌளா வெறிபிடித்தவள்போல் பார்த்துக் கொண்டு நின்றாள். பீமதேவன் இறந்தபிறகு அவளுக்கு என்ன இருக்கிறது?

"மகாராஜா எப்பொழுது அடிபட்டார்?"

"இப்பொழுது கொஞ்சம் உயிர் இருக்கிறது, உனக்கு ஏற்பாடு செய்துவிட்டு அவருக்கு உயிரிருக்கிறதா என்று பிறகு பார்க்கிறேன். கங்கா, போ. சௌளாவைத் தயார் செய்து அழைத்து வா. நான் மரக்கட்டைகளைப் பொறுக்கிச் சேர்க்கிறேன். இவளுக்குப் பரலோகத்தில்தான் சுகம் கிட்டவேண்டும் என்று எழுதியிருக்கிறது போலும்! யவனர்கள் கையில் படுவதில் லாபமில்லை. நீயும் தயாராகி வா."

"சர்வக்ஞ! நான் சாக நெருப்பு வேண்டாம். என்னைப் பற்றி நீங்கள் கொஞ்சம்கூடக் கவலைப் பட வேண்டாம்."

ஒரு சாது பயந்துகொண்டு அங்கே படுத்துக் கிடந்தான். குருதேவர் அவனை அனுப்பி மரக் கட்டைகளைப் பொறுக்கிச் சேர்த்தார். தாமே சிதையை அடுக்கினர். கங்கா சௌளாவைச் சந்தனம் பூசி அழைத்து வந்தாள்.

சௌளாவின் கண்கள் உலர்ந்துவிட்டன. அவள் குருதேவர் சொல்கிறபடி யந்திரம்போல் செய்துகொண்டே இருந்தாள்.

ரத்தத்தில் ஓட்டிக்கொண்டிருந்த மகாராஜாவின் தலைமயிரை அப்புறப்படுத்திவிட்டு, சௌளா வெகுநேரம் மகாராஜாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். அவளே சவம்போல் ஆய்விட்டாள். அவள் முகம் அழகு குன்றிக் காய்ந்துவிட்டது. கண்கள் கண்ணாடிபோல் அழகிழந்து கண்டன.

அவள் மகாராஜாவின் பாததுளியைத் தலையில் தரித்துக்கொண்டாள். தாயைக் கால் பிடித்தாள். குருதேவரை நமஸ்கரித்தாள். அவர் பதற்றமே இல்லாமல் நெருப்புவைக்கத் தயார் செய்துகொண்டிருந்தார். இவ்வளவில் மந்திரி விமலன் வெளியே இருந்து ஓடிவந்தான். அவன் உடலிலும் இரண்டொரு காயங்கள் பட்டிருந்தன.

"குருதேவா! இனி இங்கிருந்து சென்றுவிடுவதுதான் சரி. உள் கோட்டை இதோ விழுந்துவிடும். அதற்குப் பிறகு அடுத்த சுவர் விழுவதற்கு அதிக நேரம் ஆகப்போவதில்லை."

# வெகு நேர்த்தியான ருசியுள்ள பான்கேக்கள்







## இவ்விதம் தயாரிப்பதில் கஷ்டமில்லே!

# டால்டாவில் தயாரித்தவை!

டால்டா தித்திப்பு பண்டங்களையும், ஆகாரவகைகளையும் மிகருசிகரமாகவும், மேன்மையாகவும் செய்கிறது. எவ்வித சமையலுக்கும் உபயோகப் படக்கூடிய, சுத்தமான, ஊட்டம் அளிக்கும் கொழுப்பு, கைகள் படாமல் சீல் செய்த டின்களில்தான் விற்பனை ஆகின்றன




எவ்வித மாவிலும், தயிர், உப்பு, சமயல் சோடா உப்பு கலந்து, மெல்லிய வட்டங்களாக செய்யவும் வேகவைத்ததும், மசாலேகள் நிறைந்த, இரைச்சி துண்டுகளேயோ, பிசைந்த, உருளைக்கிழங்கையோ, முட்டை பணியாரத்தையோ, வட்டங்களின்மேல் பரப்பவும். கெட்டியாக சுருட்டி காய்ந்த சிறு ரொட்டித் துண்டுகளின்மேல் உருட்டு. பிறகு ஒரு அங்குல துண்டுகளாக நறுக்கி, சூடான டால்டாவில் முருகலாகும்வரை சுடவும். எலுமிச்சம்பழ ரசத்தைபிழிந்து வழங்கவும்.

### இதை வாங்காமல் இராதே!

புதி டால்டா சமையல் புத்தகம்.—ஆங்கிலத்தில்—சித்திரஙகள் நிறைந்தது—ஆர்ட் காகிதம்—80 பக்கங்கள்—300 சமையல் வகைகள்—தேகசுகம், சுகாதாரம், சமையலறை பற்றிய குறிப்புகள்—ஒருரூபாய்தான், தபால் செலவு 8 அணு தனி.



தி டால்டா அட்வைஸரி சர்வீஸ்
தபால்பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 145-173 TM

"ஆம். நான் சௌளாவுக்கு நெருப்பு இட்டு விடுகிறேன். பிறகு அமீரைச் சந்திக்கத் தயார்."

"அட, இது என்ன? மகாராஜா போய்விட்டாரா?"

"இல்லை, இன்னம் கொஞ்சம் உயிர் இருக்கிறது. ஆனால் கொஞ்சநேரம்தான் இருப்பார்."

விமலன் உதட்டைக் கடித்தான். அது அழும் சமயமல்ல.

"குருதேவா நீங்களாவது சொல்வதைக் கேளுங்கள். ஓடிவிடுங்கள்."

"அதுமட்டும் முடியாதப்பா. என் கடவுள் இருக்குமிடத்தில்தான் நானும் இருப்பேன்."

விமலன் பெருமூச்சு விட்டான். குனிந்து மகாராஜாவின் கால்களைத் தொட்டு நமஸ்கரித்தான்.

இவ்வளவில் சாமந்தன் இரைக்க இரைக்க ஓடி வந்தான்.

"சாமந்தா? நீ எப்படி வந்தாய்?"

"ஆம், பிரபாசி விழுந்துவிடும் என்று தெரிந்துகொண்டேன். அதனால்தான் ஓடிவந்தேன். வாருங்கள், பின் கதவு திறந்திருக்கிறது. ஓடமும் தயாராயிருக்கிறது. வாருங்கள் சீக்கிரம்."

"குழந்தாய், உன் வீரத்துக்கு எல்லையே கிடையாது. சௌளா, கடவுளே உன்னை அக்னிக்கு இரையாக்கக் கூடாது என்று நிச்சயித்திருக்கிறார் போலும். நீ சாமந்தனுடன் போய் விடு. சாமந்தா, நீ மகாராஜாவையும் எடுத்துச் செல். அவர் எவ்வாறாவது பிழைத்து எழுந்தால் மீண்டும் பிரபாசியை ஸ்தாபித்து விடுவார்."

"சரி, நடவுங்கள் சீக்கிரம். விமலா! நீ எங்கே போகிறாய்?"

"எனக்கு உள் கோட்டையிலேதான் இருக்க வேண்டும்."

"இல்லை, நீங்கள் என்னுடன்தான் இருக்கவேண்டும். பீமதேவன் அவசியம் பிழைத்து எழுவார். எழாவிட்டாலும் மகமூத்தை அவர் பெயர் சொல்லாமல் அழிக்கமுடியாது. உங்களுடைய உதவியில்லாமல் குஜராத் பலம் குன்றிப்போகும். ஆகவே வாருங்கள் என்னுடன்."

"விமலா, சாமந்தன் சொல்வதுதான் சரி. மகாராஜனும் நீயும் இருந்தால் குஜராத் தன் சாம்பலிலிருந்தும்கூட மீண்டெழும். போ நீ ..."

"ஆனால்........."

"ஆனாலுமில்லை கீனாலுமில்லை........... என் கட்டளை அது, போ" என்று குருதேவர் உத்தரவிட்டார்.

"ஆனால், குருதேவா! தாங்கள்......"

"போ. நேரத்தை வீணாக்காதே. நான் இங்கேதான் இருக்கப்போகிறேன்."

சாமந்தனும் விமலனும் மூர்ச்சையாயிருந்த பீமதேவனைத் தூக்கி எடுத்தனர். பின் வாசல் வழியாக ஓடிவிட்டனர்.

"சர்வக்ஞரே, மற்ற எல்லா ஏற்பாடும் ஆய்விட்டது. இனி என் ஏற்பாடுதான் பாக்கி."

"என்ன அது?"

கங்கா முழங்கால் மண்டியிட்டு "நீங்கள் தான் என் உயிர், குரு, கடவுள். தங்கள் காலடியில் இவ்வளவு நாள் இருந்திருக்கிறேன். தங்கள் காலடியிலே சாகும் பாக்கியத்தையும் கொடுக்க வேண்டும்."

அதற்குள் இடிவிழுந்தாற்போல் சத்தம் கேட்டது. அல்லாஹோ அக்பர் என்ற முழக்கத்துடன் யவனவீரர்கள் உள்ளே நுழைந்தனர்.

"இனி சமயம் குறைவாக இருக்கிறது. இதுதான் என்னுடைய வேண்டுகோள். நீங்கள் வாழ்நாள் முழுவதும் ஒருவருக்கும் ஹிம்சை செய்ததில்லை, ஒருகால் என் கையால் நான் சாக முடியாதுபோனால் நீங்களே உங்கள் கையால் எனக்கு மோக்ஷம் தந்துவிடவேண்டும்" என்று சொல்லி, கங்காதேவி அவர் கால்களில் விழுந்தாள்.

சர்வக்ஞர் இதயத்தில் ஒரு அலை அடித்து எழுந்தது. கங்காதேவியின் முகத்தில் ஒரு ஜன்மம் பூராவின் சாதனையையும் பக்தியையும் கண்டார். அவர் கீழே குனிந்து கங்கையின் மயிரை அன்புடன் கோதித் தடவிக்கொடுத்தார். "கங்கா நீ கைலாசமே அடைவாய்."

உள் சுவரின் வெளியே ஆரவாரம் அதிகமாயிற்று. அல்லாஹோ அக்பர். எதிரிகள் வாசலில் நுழைந்துகொண்டிருந்தனர்.

கங்கை தலையிலிருந்து தங்கச் சீப்பை எடுத்தாள். அதன் பற்களில் கூர்மையைப் பரீக்ஷித்தாள். தன் கழுத்திலே வைத்து நன்றாய் அழுத்திக்கொண்டாள். ஒரு கதறல்...... ஒரே சத்தம், பல்லைக் கடித்துக்கொண்டு கீழே விழுந்து உருண்டுவிட்டாள். சாகும்பொழுதும் கூட அவள் தன் நாதனுடைய கையால் ஹிம்சை செய்விக்கவில்லை.

## 6

பிரபாசியில் ஒரு ஜாம நேரம் இரத்தவெள்ளம் ஓடிற்று. எவனாவது உயிருடன் தங்கியிருந்தால் அது விதிவசமாகத்தான் இருந்திருக்கும். ஊரில் எங்கேயும் அதே முறைதான். கொலையுடன் கொள்ளையும் அடித்தனர். ஆனால் மகமூத் கட்டளையின்றி ஒருவரும் கோட்டை மேல் ஏறவில்லை.

கஜினி அமீர் மாலை வேளையில் கோவிலுக்குள் முதல் அடி வைத்தான். அங்கேயிருந்த ராஜ புத்திர வீரர்களைப் பலி கொடுத்தான். கோயி லின் உட்கதவை உடைக்க உத்தரவு கிடைத்த தும் அது மிகவும் சுலபமாக நிறைவேறிவிட்டது. உள்ளே மாட்டியிருந்த ஒரு சிறு தாழ்ப்பாள் எங்கே? பலம்கொண்டு வீசப்படும் கோடாரி எங்கே?

குதிரையைத் திருப்பி மகமூத் உள்ளே செல்ல ஆரம்பித்தான். அதே சமயம் சிவராசி கையை நீட்டித் தடுத்துக்கொண்டு எதிரே நின்றுன்.

"அமீர், நான்தான் உன்னை அழைத்துவர ஆள் அனுப்பினேன்." என்று இரைந்த குரலில் சொன்னுன். ஆயிரக் கணக்கான வீரர்கள் இறந்ததைப் பார்த்தபிறகும் தைரியமாய்வந்து உலகைவென்றவன் எதிரே நிற்பதைக்கண்ட அமீருக்கே சிரிப்பு வந்துவிட்டது.

"திலக், இவன் என்ன சொல்கிறுன்?"

திலக் சிவராசியைக் கேட்டு முழு விஷயத்தை யும் கஜினி அமீரிடம் சொன்னுன்: "ஜஹாம் பனுஹ்—இவன் நான்தான் சுரங்க வழி காட்டித் தங்கள் ஆட்களை அழைத்துவரச் செய்தேன். நீங் கள் என்னையும் என் கடவுளையும் காப்பாற்றுவ தாக வசனம் கொடுத்திருக்கிறீர்கள். உங்களுக்கு எவ்வளவு பணம் வேண்டுமோ தருகிறேன்" என் கிறுன் என்று சொல்லிக்கொடுத்தான்.

அமீர் சிரித்தான். "அட காபிர், மகமூத் விக்ர ஹங்களை விற்கிறவனல்லடா! அவன் விக்ரஹம் உடைப்பவன்" என்று சொல்லியவாறே கஜினி சுல்தான் வாளை எடுத்து, சிவராசியின் தலைமேல் ஓங்கி அடித்தான்.

குதிரையைத் தூண்டி அவன் உள்ளேவந்து சேர்ந்தான், அருகில் நின்ற வீரர்களும் சிரித்துக் கொண்டே அவனைத் தொடர்ந்தனர். சிவராசி அங்கேயே உருண்டு மயக்கமாய்க் கிடந்தான்.

உள்ளே வந்த மகமூத் அங்கே மனித வாசனையே அற்றிருப்பதைக்கண்டு ஆச்சரியமடைந் தான். ஆனாலும் எல்லா விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. மணி புதைத்த எல்லாத் தூண் களிலிருந்தும் பல வர்ணம்கொண்ட ஒளி வெளி யேறி, சபா மண்டபத்தை மெழுகிக்கொண்டிருந் தது.

மகமூத் அநேக கோயில்களைப் பார்த்திருந்தான். அநேகத்தை உடைத்தும் இருக்கிறுன். அஸ்த மிக்கும் சூரியனின் ஒளியில் இப்படி பிரகாசிக்கும் ஒரு கோயிலை அவன் இதுவரை பார்த்ததேயில்லை.

ஒரு நிமிஷம் குதிரையை நிறுத்தி அந்த அழ கைப் பருகிவிட்டுப் பிறகு கீழே இறங்கினுன் அமீர்.

ஆயிரக்கணக்கான வீர ராஜபுத்திரர்களைப் பலி யாகப் பெற்று அந்தக் கோவில் புனிதமடைந் திருந்தது. கங்க சர்வக்ஞர் தனியாய் நின்று மூர்த் திக்கு ஆரத்தி எடுத்துக்கொண்டிருந்தார். அங்கே

அவரும் அவருடைய மூர்த்தியும் மட்டுமே இருந்த னர்.

அமீர் அந்தக் கிழவருடைய பெருமையைப் பார்த்தான். அவனுல் ஒரு பேச்சும் பேச முடியவில்லே. குருதேவர் ஆரத்தியை எடுத்துப் பூமியில் வைத்துவிட்டு இடுப்பில் கையைத் தாங்கி அப்படியே நின்ருர் கௌரவத்தின் ஒளியுருவம் போல!

அமீர் உதட்டைக் கடித்து, "ஏ கிழமே ஒதுங்கி நில்' என்று கர்ஜித்தான்.

"முடியாது." குருதேவர் அமீருடைய அர்த்தத்தைக் கைச் சைகைகளால் அறிந்துகொண்டார். அமைதியை இழக்காமல் "யவனு! நானும் என் கடவுளும் சேர்ந்தேதான் இருப்போம். அழிவிலும் அமரர்—ஆதி அந்தமற்றவர்—"என்ருர்.

அமீர் அப்பொழுது பேசும் நிலேமையில் இல்லே. ஒரு குதி குதித்து அவரை நெருங்கினுன். வாள் மின்னிற்று.........

குருதேவருடைய தலே உடலேவிட்டுத் தனியே சென்று விழுந்தது. தலே தனித்த உடல் கொஞ்ச நேரம் குதித்து அடங்கிற்று.

மற்ரெரு தாவலில் அவன் கர்ப்பத்துவாரம் வந்துசேர்ந்தான். ஒரு பெருமூச்சுவிட்டு அருகே நின்ற வீரன் கையிலிருந்து ஒரு இரும்புக் கதையை வாங்கினுன். அதைச் சுழற்றி லிங்கத்தின்மேல் அடித்தான்.

சிருஷ்டி காலத்தில் ஏற்பட்ட அந்தச் சிவலிங்கம் மூன்று துண்டாகி ஓடிற்று.

(அடுத்த இதழில் முடிவுறும்)



# இயற்கையின் விளம்பரம்

நா. கி. நாகராசன்

தற்கால நாகரிகத்தை மனம் போனவாறு ஆட்டிவைக்கும் சக்திகளில் விளம்பரமும் ஒன்று. ஒரு நாட்டினரின் உடையிலும் உணவிலும் தொன்றுதொட்டுவந்த பழக்க வழக்கங்களை விளம்பரம் விரைவில் அடியோடு மாற்றிவிடக்கூடும். விளம்பரத்திற்குப் பேர்போன அமெரிக்காவில் இதற்காக மட்டும் ஆண்டிற்குச் சுமார் ஆயிரம் கோடி ரூபாய் செலவிடப்படுகிறது. உலகெங்கும் விற்கப்படும் சில அமெரிக்கப் பொருள்களின் விலையில் அரைக்கால் பங்கு விளம்பரச் செலவுகளுக்காகச் சேர்க்கப்பட்டது. முதலாளித்துவ நாடுகளில் இவ்வாறு ஆகும் பணச்செலவை அநியாயமாக மக்கள் ஈடு கட்டவேண்டியிருக்கிறது என்று சோஷலிஸ தத்துவம் குறை கூறுகிறது.

ஆனால் வியாபாரப் போட்டியில் வெற்றி பெற விளம்பரம் அவசியந்தான். அதைப் போலவே உயிரினங்களின் வாழ்க்கைப் போட்டியில் வெற்றியடைய இயற்கை யன்னை பல விளம்பர முறைகளைக் கையாளுகிறாள். கண்ணைக் கவரும் வர்ண ஜாலங்களும், கருத்தைக் கவரும் நறுமணமும்கொண்ட பூ, "என்னிடத்தே இனிய பானம் உள்ளது; வந்து அருந்திவிட்டுப் போ" என்று தேனீயை வரவேற்கிறது. 'என் சோப்பையே வாங்கிச் சுகம்பெறு' என விளம்பரம் செய்யும் வியாபாரி, 'அதனால் என் சட்டைப் பையை நிரப்பு' என்று கூறுகிறானா? அதைப் போலவே தேனீயின் வருகையால் மகரந்தச் சேர்க்கை என்னும் இலாபத்தைப்பற்றிப் பூவும் ஒன்றும் கூறுவதில்லை. இது எவ்வளவு சிறந்த முறை!

தான் விற்கும் பொருள்களைப் பொதுமக்கள் வாங்குமாறுசெய்ய வியாபாரி பெரும்பாலும் அவர்களது காட்சிப் புலனைத்தான் நம்பியிருக்கிறான். அழகிய படங்களையும் ஆசைகாட்டும் சொற்களையும் கண்டு பொது மக்கள் வியாபாரி விற்கும் பொருளின்மேல் மோகங்கொள்கிறார்கள். சில ஆண்டுகளுக்கு முன் சென்னையிலுள்ள சினிமாத் தியேட்டர் ஒன்றில் இடைவேளையின்போது பிரயல வாசனைப் பொருளொன்று தெளிக்கப்பட்டது. கொட்டகையில் வீசிய நறுமணத்தை நுகர்ந்து அப்பொருளை மக்கள் வாங்கலாம் என்ற நோக்கத்துடன் இவ்வாறு செய்யப்பட்டது. இவ்வாறு வாசனைப் புலனைத் தூண்டும் வேறுவகை விளம்பர முறைகளும் அமெரிக்காவில் கையாளப்படுகின்றன. மணமுள்ள மையில் அச்சான விளம்பரங்களைப் பத்திரிகைகளில் போட்டு வாசகர்களது கருத்தைக் கவருகிறார்கள். பூக்களின் மணமனைத்தும் விளம்பர வகையைச் சேர்ந்தவை. "கோபாலா எங்கே போறே" என்று தொடங்கிச் சிறுவர்கள் கூக்குரலிட்டுச் செல்லும் நம் நாட்டு விளம்பர முறையும், ரேடியோவில் சோப்பையும், பௌடரையும் பற்றிக் கதை கதையாய்ச் சொல்லும் அமெரிக்க வியாபார முறையும் நமது செவிப் புலனின் வழியே நமது கவனத்தை இழுக்கின்றன. பறவைகளின் இன்னிசை இத்தகையதுதான்.

இயற்கையன்னையின் கலையுணர்ச்சியைக் கவிஞர்கள் போற்றுகின்றனர். ஆனால் இயற்கை காட்டும் கலைத்திறனுக்குள் இனப் பெருக்கம், தற்காப்பு என்னும் இரு பெரு நோக்கங்கள் மறைந்து கிடக்கின்றன என்பதை நாம் மறத்தலாகாது. 'கலையைக் கலைக்காகவே பயிலவேண்டும்' எனக் கதைப்போர் இயற்கையில் இக்கூற்றுக்கு இடமே இல்லை என்பதை உணரவேண்டும். குறிப்பிட்டதொரு நோக்கத்துடன் தோன்றி அது நிறைவேறியவுடன் மறைந்துவிடுவதுதான் இயற்கை பழகும் கலை. தோகை விரித்தாடும் மயிலும், ஓயாது இசை பாடும் பிள்ளைப் பூச்சியும், நடனமாடும் நரியும், நறுமணம் வீசும் பூவும் இனப் பெருக்க நோக்கத்துடன்தான் இக் காதல் விளம்பரங்களைச் செய்கின்றன. இதன் தேவை முடிந்ததும் விளம்பரமும் மறைந்துவிடுகிறது. காதல் பருவமான வசந்தத்தில் மட்டும் இயற்கை

அளவற்ற வனப்பைப் பெற்றுத் திகழ்கிறது. பட்டுப் பூச்சிகளும், பல பறவை இனங்களும் இப்போது விசேஷ நிறங்களை அணிந்து தமக்கு ஜோடி தேட முனைகின்றன. மற்றச் சமயங்களில் சிக்கனமே குறிக்கோளாக வாழும் தாவரங்களுங்கூட அப்போது மட்டும் வரம்பு மீறிப் பூக்களை வாரி இறைக்கக் காண்கிறோம். இவ்வாறு அவை செய்வதால் அவற்றில் ஒரு சிலவேனும் மகரந்தச் சேர்க்கை பெற்று இனம் பெருக உதவுகின்றன.

"மயிலின் தோகைதான் எவ்வளவு கனமானது என்று சிட்டுக் குருவி இரங்கிற்றும்" என நம் நாட்டுக் கவியரசர் டாகூர் ஓரிடத்தில் கூறுகிறார். இதன் உட்பொருள் ஒருபுறமிருக்க இவ்வமைப்புச் சில சமயங்களில் மயிலுக்குப் பெருந் தொல்லையாக இருக்கலாம் என்பதை மறுக்க முடியாது. ஆனால் இவ்வளவு விரிவான விளம்பர அமைப்புகள் இல்லாவிட்டால் போட்டி மலிந்த வாழ்க்கையில் வெற்றிபெற முடியுமா? தற்காலத்தில் விளம்பரத்தில் சிக்கனம் பிடிக்கும் எவனும் வியாபாரத்தில் வெற்றி காண முடியாது. இந்த இரகசியத்தை இயற்கை அறிந்துள்ளது. அதனால் அதன் விளம்பரங்களில் சிக்கனத்தையே நாம் காண முடியாது.

"பூக் கடைக்கு விளம்பரம் எதற்கு" என்பார்கள் (என் வீட்டிற்குப் பின்புறமிருக்கும் நெய்க் கடைக்கும் விளம்பரம் வேண்டியதில்லை! ஏனெனில் அங்கு நெய் காய்ச்சும் போது கிளம்பும் துர்நாற்றம் இங்கே வயிற்றைக் குமட்டுகிறதே!) ஆனால் பசியோடு வீதி வழியே நான் சென்றுகொண்டிருக்கும் போதும் "மும்தாஜ் கபே" என்ற போர்டைப் பார்த்தால்தான் நான் அதற்குள் நுழைந்து முதலாளிக்குச் சிறிது பணம் கொடுக்க முடியும். ஒரு கடையில் என்ன கிடைக்கும் என்று அறிய அடையாளமாக விளம்பரம் தேவையாகிறது. இயற்கையிலும் இத்தகைய அடையாள விளம்பரங்கள் உண்டு. பூச்சிகளிலும் பறவைகளிலும் ஒவ்வொரு இனத்திற்கும் சிறப்பான நிறங்களும், நிற அமைப்பும் உண்டு. ஒரே இனத்தைச் சேர்ந்த இரு உயிர்கள் ஒன்றையொன்று அடையாளந் தெரிந்துகொள்ள இவை உதவுகின்றன. முயலின் வால் பால்போன்ற வெண்ணிறமானது. இது தன் குட்டிகளுடன் வெளியே இரைதேடச் செல்லுகையில் ஏதேனும் ஆபத்து வரவிருந்தால் வாலைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறது. அதைக் குட்டிகள் கண்டு பின் தொடர்ந்து சென்று தப்ப, முயலின் வால் உதவுகிறது. ஆகையால் இவ் விளம்பரம் தற்காப்பு நோக்கத்துடன் செய்யப்படுவது. சாதிக் குறிகளால் ஒன்று சேரும் உயிர்களோ இனப் பெருக்க நோக்கத்துடன் இவ் விளம்பரச் சாதனத்தைப் பெற்றுள்ளன. (சாதிப் பூசல்கள் மலிந்த இந்த நாட்டில் வாழும் நாம் உயிரினங்களின் சாதிக்குறி ஒரு நல்ல நோக்கத்துடன் உள்ளது என அறிந்தேனும் சிறிது ஆறுதலடையலாம்!)

"இது பொது வழியல்ல. மீறி நடப்பவர் தண்டிக்கப்படுவார்கள்" என்று பிழை மலியக் காணப்படும் எச்சரிக்கை விளம்பரங்களை நாம் பல இடங்களில் காண்கிறோம். இத்தகைய விளம்பரங்கள் இயற்கையிலும் உள்ளன. கொடிய கொடுக்கையுடைய குளவியின் மேனி நல்ல பளபளப்பான செந்நிறத்துடன் இருப்பது ஒரு அபாய அறிவிப்பாகும். "கிட்ட வந்தால் கொட்டுவேன்" என்று இது மற்ற உயிர்களை எச்சரிக்கிறது. காடு அதிரக் கர்ச்சிக்கும் சிங்கம் தன் குரல் முழக்கத்தால் வனராஜன் என்ற தன் பட்டத்தை நிலை நிறுத்திக்கொள்கிறது. விஷப் பாம்பு வகைகளும், சில கம்பளிப் புழுக்களும் தெளிவாகப் புலனாகும் எச்சரிக்கை நிறங்களைக் கொண்டுள்ளன. ஆகையால் மற்ற உயிரினங்கள் அவற்றை அணுக அஞ்சுகின்றன.

"போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்" என்ற விளம்பரம் இயற்கையிலும் பொருத்தமானதுதான். கொடிய நஞ்சையும், உண்ணத் தகாத பொருள்களையும் தம்மிடத்தே கொண்டுள்ள உயிர்கள் பகைவரிடமிருந்து தப்புவதைக் கொண்டு, தாமும் அதே நிற அமைப்பையும், தோற்றத்தையும் மேற்கொண்டு தம்மைப் பாதுகாத்துக்கொள்ளும் உயிர்களும் உள்ளன. நஞ்சற்ற சில பாம்புகள் தோற்றத்தில் விரியனை ஒத்திருக்கும். சில பட்டுப் பூச்சிகள் தேனீக்களையும், குளவிகளையும் ஒத்த தோற்றங்கொண்டவை. ஒரு வகை இலைப் பேன் தோற்றத்தில் எறும்பைப்போலிருக்கும். வெட்டுக்கிளியின் வாழ்க்கை முழுதும் போலித் தோற்றத்தில் கழிந்துவிடுகிறது! இளம் பிராயத்தில் இது எறும்பையும், பெரிதான பிறகு இலையையும் ஒத்த தோற்றங்களைக்கொண்டு இது தன்னைப் பாதுகாத்துக்கொள்கிறது. ஆகையால் இத்தகைய போலி விளம்பரங்கள் இயற்கையில் ஒரு நல்ல தற்காப்புச் சாதனமாக விளங்குகின்றன.

பொய்யான விளம்பரங்களைக் கண்டு எத்தகைய புத்திசாலியும் சில சமயங்களில் ஏமாந்துபோகிறான். அதைப் போல் இயற்கையும் ஏமாற்று வித்தையை மிகவும் சாதுர்யமாகக் கையாளுவதைப் பார்க்கிறோம். அழகிய தோற்றமுள்ள பூவையுடைய சில தாவரங்கள் அவற்றிற்கு இயற்கையான சைவ உணவைவிட்டுப் 'புலால்' உண்ணும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளன! பூவின் வனப்பால் கவரப்பட்டு அதில் தேன் பருகவரும் பூச்சிகள் அதற்குள் புகுந்ததும் அதன் இதழ்கள் எலிப் பொறியின் வாயிலைப்போல் மூடிக்கொண்டுவிடும். உள்ளே சிறைப்பட்ட பூச்சிகள் தாவரத்திற்கு உணவாகவேண்டியது தான். ஆசைகாட்டி மோசம் செய்யும் வித்தைக்கு இதைவிட நல்ல உதாரணம் வேண்டுமா?

இரு கூட்டாளிகள் பணம் சம்பாதிக்க ஒரு புதுமுறையைக் கையாளுகிறார்கள். ஒருவன் மைதானத்தில் சர்க்கஸ்வித்தை செய்கிறான். அதைக் காணக் கூட்டம் கூடுகிறது. கூட்டத்தினரது கவனமெல்லாம் வித்தையில் இருக்கும்போது அவன் கூட்டாளி அவர்களது சட்டைப் பைகளைக் காலி செய்துவிடுகிறான்! இந்தக் கதையைச் சில நாட்களுக்குமுன் படித்தேன். இதைப் போன்றதொரு முறையை விலங்குகளும் கையாளுவது விந்தையே. வீஸல் (Weasel) என்ற காட்டுப் பூனை இரை தேட இம்முறையைக் கடைப்பிடிக்கிறது. ஓரிடத்தில் நின்றுகொண்டு அது தன்னையே மறந்து போய் நடனமாடிக்கொண்டிருக்கும். இந்த விந்தையைக் காண முயல் முதலிய பிராணிகள் மெல்ல அதை நோக்கிவரும். அவை அருகே வந்ததும் காட்டுப் பூனை அவற்றைப் பிடித்துக்கொண்டுவிடும்! மாதரது நடனத்தால் அறிவிழந்து அதற்குப் பலியான மாந்தரது வரலாற்றை இது நினைவூட்டுகிறதல்லவா?

குச்சியையும், இலையையும் ஒத்த அமைப்புக்கொண்டு தம் இரையையும் பகைவரையும் ஏமாற்றும் பூச்சிகளை நாம் பொதுவாகக் காண்கிறோம். இதுவும் ஓர் ஏமாற்று விளம்பரந்தானே! அழுகும் இறைச்சியை ஒத்த நிறத்தைக்கொண்டு, அதே மணத்தை வீசி, ஈக்களைக் கவர்ந்து தம் காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் தாவரங்கள் உள்ளன. ஏமாற்று வித்தையில் கைதேர்ந்த வியாபாரியுங்கூட இத் தாவரங்களிடம் பிச்சை வாங்க வேண்டியதுதான் என்று தோன்றுகிறதல்லவா?

நகரச் சுவர்களில் ஒட்டப்படும் விளம்பரங்களும், விலங்குணர்ச்சியைத் தூண்டும் மட்டரகமான விளம்பரப் படங்களும் நமக்கு அருவருப்பைத் தருகின்றன. ஆகையால் விளம்பரக் கலையில் அழகின்மையும், ஆபாசமுமே அதிகமாக உள்ளன என்று கருதுவோரும் உண்டு. அதைப்போலவே இயற்கையின் விளம்பர இலாகாவிலும் நோக்கம் நிறைவேறுவதற்காக அருவருப்புத் தரும் விளம்பரங்கள் வெளியாகலாம். கொசுவின் ரீங்காரம் அதன் ஜோடிக்கு இசையாகலாம். ஆனால் நமக்கென்னவோ அது பெருந் தொல்லையாகத்தான் உள்ளது. பஞ்சவர்ணக் கிளி அழகுதான். அதற்காக நான் பஞ்சவர்ணக் கிளிபோல் உடை யணிந்து காரியாலயத்திற்குச் சென்றால் என்ன நினைப்பார்கள்? ஆனால் நோக்கம் நிறைவேறினால் சரி, விளம்பரத்தின் அழகைப்பற்றி அக்கறையில்லை என்றுதானே வியாபாரி நினைக்கிறான். அதைப்போலவே இயற்கையும் ஏதோவொரு விளம்பரத்தால் தன் நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்கிறது.

பழங்காலத்தில் இருந்து இப்போது அடியோடு அழிந்துபோன தாவரங்களையும், விலங்குகளையும் ஆராய்ந்தால் அவை வாழ்க்கைப் போராட்டத்தில் ஏன் வெற்றிபெறவில்லை என்பதையும், அன்று முதல் இன்று வரை உள்ள வேறு உயிர்கள் எம்முறைகளால் வெற்றி பெற்றுள்ளன என்பதையும் அறியலாம். சரியான விளம்பர முறைகளைக் கையாளாத உயிரினம் போராட்டத்தில் விரைவில் மடியும் என்ற உண்மை இதிலிருந்து தெளிவாகும். ஓர் உயிரினம் மற்றவைகளோடு போட்டியிட்டு வெற்றியடையக் கையாளும் முறைகளை ஆராய்வதை வாணிப நூலின் ஒரு பிரிவாகக் கற்பது மிகப் பொருத்தமானதும் பயன் தருவதுமாகும். ஏனெனில் வாணிபப் போட்டியும், வாழ்க்கைப் போராட்டமும் ஒரே நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டன்றோ நடைபெறுகின்றன?



# போலி நாணயம்

ரா. பாலாஜி







வறுமை வாயிற்புறம் நுழைந்தால்,
பொறுமை சன்னல்புறம் பறந்தோடிவிடும்!

மனிதன் வாழப்பிறந்தான்! வாழ்ந்தாக வேண்டும் என்ற அவசியத்தை யுணர்ந்து, அறிஞன் வறுமையோடு பெரும் போராட்டம் நடத்தி வாழ்ந்து காட்டினான். மேற்கூறிய அனுபவசாலியான அறிஞனின் மறுக்க முடியாத முடிவைக் கந்தசாமி பொய்யாக்கிவிட்டான்!

கந்தசாமி காற்றாடி. காற்றாடி பறந்து கொண்டுதானிருக்கிறது. காற்றான ஊமைச்சி உயிருடன் இருக்கும் வரை கந்தசாமி என்கிற காற்றாடி பறந்துகொண்டுதானிருக்கும். வறுமைப்புயல் கந்தசாமி என்கிற காற்றாடியை அறுத்துவிட்டு அல்லலுறச் செய்ய முடியாது!

கந்தசாமியின் மனைவி பெயரளவில் மட்டும் ஊமைச்சியல்ல. நிலையிலும் ஊமைதான். எல்லோருக்கும் பேச வாயிருந்துதான் என்ன சாதித்துவிடுகிறார்கள்? சாதித்துக் கொண்டிருக்கிறார்கள்? சாதிக்கத்தான் போகிறார்கள்? என்று எண்ணி, துணிந்து தானே ஊமைச்சியைக் கந்தசாமி மணந்து கொண்டான்? பெண்ணாகப் பிறந்தவள் கணவனுடன் வாழ்வதைச் சமுதாயம் கை கூப்பி வரவேற்கிறது என்ற கருத்தை ஞானோதயம் பெற்றதைப்போல் உணர்ந்து கொண்ட ஊமைச்சி, கன்னிமார் நிலையத்து அடிமை வேலையை உதறித் தள்ளிவிட்டு, கந்தசாமியின் ஆசை நாயகியாய் மாறிவிட்டாள் போலிருக்கிறது!

கந்தசாமிக்குத் தன்மீதே நம்பிக்கையில்லை. முழுநம்பிக்கை ஊமைச்சியிடமுண்டு! உள்ளத்து உணர்ச்சிகளை, உடனுக்குடன் வெளிப்படுத்தவியலாத நிலையைக் குறித்து வருந்த வேண்டுமேயொழிய, மற்றெந்த விதத்திலும் வருந்தவேண்டிய அவசியத்தைக் கந்தசாமி ஊமைச்சிக்கு ஏற்படுத்திவைக்க வில்லை. ஊமைச்சியின் அங்க அசைவுகள் மூலம், மன நிலையைக் கந்தசாமி எளிதில் புரிந்துகொண்டுவிடுவான்.

ஒன்று பேசும் நடைப்பிணம், மற்றொன்று பேசமுடியாத நடைப்பிணம். இரண்டு நடைப் பிணங்களும், ஒன்றையொன்று தெளிவாகப் புரிந்து கொண்டுவிட்டன. நிலையைத் திறமையாகச் சமாளித்துக் கொள்ளுகின்றன!

நகைக்க வேண்டியவர்களைக் கண்டு சமுதாயம் மௌனம் சாதிக்கச் சோம்பேறியா என்ன? இணைந்த நடைப்பிணங்களைக் கண்டு மற்றுமுள்ள நடைப்பிணங்கள் நகைத்தன. ஒரு சில நடைப்பிணங்கள் ஆச்சரியப்படாமலும் போகவில்லை. ஏன்? ஒருசில நடைப் பிணங்கள் பொறுமையும் பட்டன! வாழ்க்கை நாடகத்தில் கடைசிப் பகுதியை நடத்திக் கொண்டிருக்கும் சில கிழநடைப்பிணங்கள் "ஊமைச்சி—கந்தசாமி" இருவரின் இணைந்த வாழ்க்கையைக் கண்டு ஆச்சரியமடைந்தன!

பொறுமைப் பட்டவர்களில், கோடிவீட்டுக் கோவிந்தம்மாளை அவசியம் குறிப்பிடவேண்டும்! கோவிந்தம்மாளுக்குக் கந்தசாமியின்மீது

நெடுநாளாகவே ஒருகண். குழாயடியில் உள்ளத்தைத் திறந்துகாட்டி, எத்தனையோ நாட்கள் நாடகம் நடித்திருக்கிருள். வெற்றியின் வாயிலைக்கூட எட்டிப்பார்க்கவில்லை! இப் பட்டியலில் சேர்க்கவேண்டியவர்கள், ஒத்துவராத கணவனை கட்டிக்கொண்டு வாழும் காளி, மருதை, அங்கமுத்து முதலியோர்! முடிவாகச் சொல்லப்போனல், அந்தப் பகுதியிலே வாழும் இளம் வாலிபர்களுக்கே கந்தசாமியின்மீது நோட்டம்!

பொறுமையின் எல்லைக்கல் கந்தசாமி. காதலி ஊமைச்சியிடம் மௌனம் சாதித்துச் சாதித்து எதிலும் பொறுமையை வெளிப்படுத்துவது இயல்பாகவே யமைந்துவிட்டது போலும்? அத்தி பூத்தாற்போல் சிரிப்பொலி அந்தப பகுதியில் கேட்கிறது என்ருல், அவ்வொலி கந்தசாமியின் குடிசையிலிருந்து தான் எழுந்தது என்று நிச்சயமாகக் கூறலாம்.

*   *   *

பொழுது விடிந்தது. மனிதக்காக்கைகள் விழிப்புற்றன. உழைப்பை விற்ருல்தான் வேளா வேளைக்கு உண்ணமுடியும் என்று அறிவறிந்த பருவமுதல் உணர்ந்துகொண்ட மனிதக் காக்கைகள் உழைப்பு விலைபோகும் இடத்தை நோக்கிப் பறக்க ஆரம்பித்துவிட்டன! கந்தசாமியோ முன்னமேயே சென்றுவிட்டான்.

கூலி—உழைப்பு! கூலி—உழைப்பு!! புகைவண்டி நிலயத்தின் முச்சந்தி வாயிலில், உழைப்பு விலைக்கு விடப்பட்டிருக்கிறது. விலைபேசி வாங்குபவர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும், மௌனம் சாதிப்பவர்களின் எண்ணிக்கையே மிகுதி! உழைப்பு விலை போகாததைக் குறித்து உள்ளங்கள் நொந்துகொள்ளுகின்றன.

அந்தி சாய்ந்தது, உழைப்பு விலைபோனவர்களின் கையில், பணம் என்கிற பாவை பலவிதங்களில் நடமாடிளுள். பணத்தைக் கண்ட உள்ளங்கள் கொத்துவைத்தோம் என்று மனத்திருப்தியடைந்தன.

உழைப்பு விலை போகாதவர்களின் உதடுகள், ஆதரமில்லாது குறை கூறிக்கொண்டன. உழைப்பை விற்கவந்தவர்களில் சிலர் உண்ணு விரதம், உழைப்பு விலை போகாத காரணத்தால்!

ஒரு வேளை—இரு வேளை—இரு வேளைக்குமேல் கந்தசாமி—ஊமைச்சி இருவருக்கும் உண்ணு விரதமேயிருந்து பழக்கமில்லை. நமது கந்தசாமி பொறுமையின் எல்லையாயிற்றே. நெருக்கடியான சமயங்களில் குறைந்த விலைக்கு உழைப்பை விற்று நிலையைச் சமாளித்துக்கொண்டுவிடுவான். இவனது செய்கையால் உழைப்பின் தரம் குறைந்துவிடுகிறது என்று எண்ணியோ — பொருமையினுலோ, அவனுடைய சகாக்கள் வெறுத்தனர். ஏன்? காரணமில்லாமல் வம்புச் சண்டைக்கும் இழுத்தனர். பொறுமை எனகிற கந்தசாமிப் போர்வீரனிடம் வம்புச் சண்டைகள் சரணுகதியடைந்தன.

*   *   *   *

பொழுது விடிந்தது. விழிப்புற்ற மனிதக் காக்கைகள் பறக்கத் துடித்தன. விளுடிக்கு ஒருமுறை விக்கியும், ஒப்பாரிவைத்தும் அழும் வியாதிக்காரக் குழந்தையைப் போல் மழை பெய்துகொண்டிருந்தது. வறுமையால் ஏற்படும் வாழ்க்கைப் போராட்டத்தைப் பொறுமையாகச் சமாளிக்கச் சக்தியற்ற எத்தனையோ "கணவன் மனைவிமார்கள்" காரணமில்லாமல் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். இவர்களின் வறுமைக்கு, மூலகாரணம் அளவு மீறிய குழந்தைகள். அறிந்தோ, அறியாமலோ அப்பாவி ஆண்டவன்மீது குற்றம் சாட்டினர்!

கந்தசாமி இன்னும் தந்தையாக மாறவில்லை. ஊமைச்சியும் தான் தாயாக மாருததைக் குறித்து வருந்துவதாகத் தெரியவில்லை! மழை பெய்துகொண்டிருந்தது கந்தசாமியின் நிலைக்குச் சாதகமாகவேயிருந்தது. இரண்டொரு நாட்களாகவே ஊமைச்சிக்கு உடல் நலமில்லை. இருக்கும் கொஞ்ச நஞ்ச உணவையும், உண்ணுமல் வெறுப்பதைக் கண்டு சஞ்சலமடைந்தான் கந்தசாமி!

அடிவயிற்றைப் பிடித்துக்கொண்டு, ஊமைச்சி அலறுவதைக் கண்டு வயிற்றுவலியுள்ளதென்பதை எளிதில் உணர்ந்துகொண்டான். விளுடிக்கொருமுறை வாந்தியெடுக்கப் பிரயாசைப் படும் பொழுது, கந்தசாமி, முரட்டுக் குழந்தை கையில் கிடைத்த கிளியைப்போல் தவித்தான்!

கோடிவீட்டுக் கோவிந்தம்மாளின் மாமியார், அந்தப் பகுதிக்கே கைராசியுள்ள வைத்தியக்காரி! பதினுறு குழந்தைகள் பெற்றெடுத்துச் சலித்துவிட்ட அனுபவத்தின் மூலம், பிறருக்கு வரும் நோயின் காரணங்களையும் நிலையையும் எளிதில் உணர்ந்துகொண்டு விடுவாள். எளிய முறையில் நோயையும் போக்கிவிடுவாள். "உன்னைப் போல் உலகத்தில் உண்டா" என்று மறைக்காமல் பொய் சொன்னுல் அழைப்பை மறுக்கவே மாட்டாள்!

மழையிலும், கந்தசாமியின் அழைப்பை மறுக்கவில்லை விடைபெற்றுப் பிரியும்பொழுது, கந்தசாமியைக் களிப்புக்கடலில் ஓட்டினுள். "ஏலே! எண்ணிக்கோ ஏழுமாசம், மூக்கும் முழியுமா ஒன் பொண்டாட்டி குழந்தையை பெத்துக் கொடுப்

பாள்" என்று சொல்லிக்கொண்டே வானத்தையும் கந்தசாமியின் முகத்தையும் மாறி, மாறிப் பார்த்தாள். கந்தசாமியின் மடியிலிருந்த 'ஓரணு' கோடிவீட்டுக் கோவிந்தம்மாளின் மாமியாரின் கைக்கு மாறியது. "தூறல்தான் விழுகிறது" என்று சொல்லிக்கொண்டே விடைபெற்றாள். வழியனுப்பிவிட்டு நின்றிருந்த கந்தசாமி சிந்தனை செய்யத் துவங்கிவிட்டான். ஊமைச்சியின் அழைப்பால் சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைக்க நேர்ந்துவிட்டது. ஊமைச்சியைக் கர்ப்பிணி யென்று எப்படியோ உணரச் செய்துவிட்டான் கந்தசாமி! அளவில்லாத ஆனந்தமடைந்தாள். தாயாகப் போகிறோம் என்ற பூரிப்பு. உள்ளத்தைத் திறந்து காட்டத்தான் பேசும் சக்தியில்லை!

கோடிவீட்டுக் கோவிந்தம்மாளின் மாமியார் காசில்லா விளம்பரச் சுவரொட்டி! (Wall Poster) என்று சொல்ல மறந்துவிட்டேன். காசில்லா விளம்பரம், அதிலும் பெண்ணின்மூலம் பரவுகிறது என்றால் சொல்லவா வேண்டும்? மற்றொருவன் வீட்டுச் சங்கதியென்றால் அறிந்து கொள்வதில் அந்தப் பகுதியில் உள்ளவர்களுக்கு அலாதி பிரியம்.

* * *

ஊம்! பயன்படுத்திக் கொள்ளமுடியாத சோம்பேறிகளைப் பார்த்து, ஏழு மாதங்களை விழுங்கப்போகிறேன் என்று எச்சரித்தது. ஏழு மாதங்களாய் உழைப்பை விற்கிறான் கந்தசாமி, அவனால் மூன்று நாட்கள்தான் உழைக்காமல் உண்ணமுடிந்தது, அன்றாடம் உழைத்துப் பிழைப்பவர்களின் வாயில் மண்ணைப்போடும் மழை மூன்று நாட்களாகத் தொடர்ந்து பெய்துகொண்டிருந்தது. நான்காம்நாள் மழை நின்றது. இரவு சாப்பிட்டுக்கொண்டிருக்கும் பொழுதே இனி உழைப்பு விலை போனபின்னர்தான் வயிற்றுப் பாட்டைக் கவனிக்கமுடியும் என்பதை முடிவு செய்துகொண்டான் கந்தசாமி.

கந்தசாமி, ஆப்பக்கடையைக் கடந்துகொண்டிருக்கும்பொழுதுதான் கோவிந்தம்மாளின் மாமியாரைக் கண்டான். ஏலே! "இப்பத்தான் நாளு; எதாச்சியும் ரொக்கமாய்ச் சேர்த்துவைச்சிருக்கையா?" என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள் கோவிந்தம்மாளின் மாமியார். கந்தசாமியும் சிரித்தான்! இருப்பிருந்திருந்தால், வயிற்று வலியால் வேதனைப்படுகிறேன் என்று அபிநயித்தும், உழைப்பைவிற்க வந்துகொண்டிருப்பானா?

பட்டினியோடுவரும், கணவனுக்குக் கஞ்சியாவது காய்ச்சி வைப்போம் என்ற எண்ணத்துடன், தகரடப்பை எடுத்துக்கொண்டு எதிர்வீட்டு எல்லாமாளிடம் சென்றாள். ஊமைச்சியைக் கண்டாலே அலாதிப்பிரியம், அடக்க ஒடுக்கமுள்ள பெண் என்ற காரணத்தால்! எதற்கெடுத்தாலும் எரிந்துவிழும் சுபாவம் படைத்த எல்லம்மாள், ஊமைச்சியின் விஷயத்தில்மட்டும் சாந்தமாய் நடந்துகொள்வது, அப்பகுதியில் உள்ளவர்களுக்கே ஆச்சரியமாயிருந்தது!



அந்தப் பகுதியிலே ஆண்களிலாகட்டும், பெண்களிலாகட்டும் எல்லம்மாள் ஒருத்திதான் எழுதப்படிக்கத் தெரிந்தவள். அந்தப் பகுதி அறிவாளிகளே எல்லம்மாளை அறிஞளாகவே முடிவுசெய்து விட்டார்கள்!

எல்லம்மாளின் வீட்டையடைந்தாள் ஊமைச்சி! இடைவிடாது நொந்துகொண்டிருந்த வயிறு, சற்று அதிகமாகவே வலிக்க ஆரம்பித்தது. வலி தாளமுடியாமல் விக்கி, விக்கி குழந்தையைப்போல் அழத் துவங்கிவிட்டாள். படும் அவஸ்தையைக் கண்டு, எல்லம்மாளின் கண்களில் கண்ணீர் கரைபுரண்டோடலாயிற்று!

கூட்டம் கூடிவிட்டது. கந்தசாமிக்கு ஆளை அனுப்புங்கள் என்று ஒருவர் பிரேரேபிக்க, கூடிவிட்ட கூட்டமே ஆமோதித்தது! எந்தப் பகுதியிலே வேலை செய்கிறான், என்ற புதிர் எல்லோரையும் சிந்திக்கச்செய்தது. கூட்டம் அதிகமாகிக்கொண்டுதானிருந்தது. கந்தசாமியை அழைத்து வர யாரும் முயலவில்லை.

பலர் யோசனை கூறியும் வைத்தியசாலைக்கு அழைத்துச்செல்லத் தயங்கினாள் எல்லம்மாள். கணவனைக் கலந்தாலோசித்து எதையும் செய்ய வேண்டுமென்பதே அவள் தயக்கத்திற்குக் காரணம். அந்தப் பகுதியைச்சேர்ந்த அனுபவ லேடி டாக்டர், எண்ணெய் காய்ச்சித்தர அருகில் உள்ள கிராமத்திற்குச் சென்றிருந்தாள். விநாடிக்கு விநாடி வயிற்றுவலி அதிகமாகியது. ஊமைச்சியின் அலறல் எல்லம்மாளின் குடிசையையே தூக்கிக்கொண்டு செல்லும்போலிருந்தது! சுற்றுமுற்றும் பார்ப்பதுமாய், பரபரப்புடன் எதையோ அரைகுறையாய்ச் செய்வதுமாய் அவதிபட்டுக்கொண்டிருந்தாள் எல்லம்மாள். நிலைமை எல்லை மீறவே துணிந்து வைத்தியசாலைக்கு அழைத்துச் சென்று விட்டுவிட்டு, கந்தசாமியின் வரவை எதிர்நோக்கிக்கொண்டிருந்தாள்.

* * *

பசி! மனிதன் நிலையைக் குறித்து இலட்சியம் செய்வதில்லை. மனிதன் எத்தனையோ நல்ல சந்தர்ப்பங்களில், தவறிவிடுகிறான். இது தவறித் தொலைந்தால்தானே? கந்தசாமி கடந்த இரவு பூராவும் அரைப்பட்டினி. காலை ஒன்பதுமணி வரை முழுப்பட்டினி வேறு. பசித் தொல்லையைச் சமாளித்துக்கொள்ளவோ, உழைப்பு விலை போகவில்லை.

டீக்கடை மீரான் சாயபு கண்டிப்பான பேர்வழி. அவரைவிட அவருடைய நாய் ஒரு பங்கு மேலென்று சொல்லவேண்டும். சாயபு தமது செல்ல நாய்க்கு, பாலில் ரொட்டியை நனைத்தூட்டிக்கொண்டிருந்தார், நாயின் நிலையையும் தன் நிலையையும் எண்ணிப்பார்த்து வீணுகப் பெருமூச்சு விட்டான் கந்தசாமி, கந்தசாமிக்கு, மீரான் சாயபுவிடம் நெடுநாளாகவே பழக்கமுண்டு. பழக்கமிருந்தும் கடன் கொடுப்பாரா என்ற சந்தேகம் வலுக்க, வலுக்கப் பசித்தொல்லை இரட்டிப்படைந்தது! துணிந்து கேட்டுவிட்டான் கடன் என்கிற காரணத்தால் "வெல்ல டீ சர்க்கரை டீயாகமாறியது." மீரான் சாயபு கண்டிப்பான பேர்வழி!

சுவைத்தவுடன் நாக்கு உண்மையைத் தயங்காது கூறிவிட்டது. தனது நிலையைச் சிறிதுநேரம் எண்ணிப்பார்த்தான். மௌனமாகக் கோப்பையிலிருந்த டீயை உறிஞ்ச ஆரம்பித்தான். காலக் குவியலிலே சில விநாடிகள் கூடின கந்தசாமியின் கண்கள், காலையில் நடமாடும் தெய்வங்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தன! இந்த நேரத்தில் உழைப்பு விலைபோகுமா என்ற நம்பிக்கை! நம்பிக்கை வீண்போகவில்லை!! தூக்கமுடியாத மூட்டை முடிச்சுகளைத் தூக்கிக்கொண்டு, ஒரு வாலிபர் சுற்றுமுற்றும் கண்களைச் சுழற்றியவாறே நடந்து சென்றுகொண்டிருந்தார். உழைப்பை விலை கொடுத்து வாங்கத்தான் சுற்றுமுற்றும் பார்க்கிறார் என்று முடிவுசெய்துவிட்டான். கண்ணடிக் குவளையில் ஆடி அசைந்துகொண்டிருந்த வெல்ல டீயை ஒருமுறை உற்று நோக்கினான். "என்னை விட்டுவிட்டா ஓடப்பார்க்கிறாய்? உனக்காக நான் காத்துக்கொண்டிருக்கமாட்டேன். அதோ பார், தூங்கிவிழுந்துகொண்டிருக்கிறானே அவன் என்னை, சாக்கடையில் கொண்டுசேர்த்து விடுவான். பிறகு உன் வயிறு காயத்தான்வேண்டும்" என்று எச்சரிப்பது போலிருந்தது. டீயை உறிஞ்ச ஆரம்பித்தான். மறுமுறையும் அவனை அறியாமல் கண்கள் சாலைப்பக்கம் பாய்ந்தன. தன்னைப்போல் உழைப்பை விற்கும் ஒருவன், வாலிபர் தூக்கிவந்த மூட்டைகளைத் தூக்கிக்கொண்டிருந்தான். வழக்கமாக வரும் போட்டிதானே என்று கந்தசாமியினுள்ளம் சமாதானமடைந்தது! டீக்கடையைவிட்டு வெளியேறும் பொழுது, 'சர்க்கரை டீ கவனமிருக்கட்டும்' என்றார் கண்டிப்புப் பேர்வழி மீரான் சாயபு. வெளியேறிய கந்தசாமி எதையோ நினைத்துக்கொண்டு சற்றே சிரித்தான்!

காலம் கடந்துகொண்டிருந்தது. உழைப்பு விலை போகவில்லை. மறுபடியும் பசித் தொல்லை வாட்டத் துவங்கிவிட்டது. அந்தி மறைய ஆரம்பித்தது. இருள் படர்ந்துகொண்டே வந்தது. போலிக் கண்வைத்து பல ஆயிரக்கணக்கான மக்களை, ஏமாற்றிவரும் சாமியார் சகதர்மிணியிடம் இரண்டுரூபாய் பதின்மூன்றணு சம்பாதித்துவிட்டதாகப் பெருமையடித்துக்கொண்டான். இதனை அரைகுறையாயுணர்ந்த கந்தசாமியினுள்ளம் தவிப்புப் புயலில் சிக்கி, சீரழிந்தது.

இருள் பெருகப் பெருக ஊமைச்சியின் நினைவுகள் கந்தசாமியின் நெஞ்சில் புகுந்து கொடிய வேதனை தந்தன, சாமியாருக்குக்கிடைத்த வருமானத்தில் பாதியாகிலும்—ஏன் கால் பாகமாகிலும் கிடைத்திருந்தால், கந்தசாமி நிம்மதிக் கடலில் நீந்திக் கொண்டிருப்பான். பூரண கர்ப்பிணியைப் பல வேளை பட்டினிபோட்டுச் சாகடிக்கிறோம், என்ற

நினைவு கந்தசாமியைப் பித்தனாக்கிவிடும்போலிருந்தது!

உழைப்பை விற்றவர்கள்—விலை போனவர்கள் மகிழ்ச்சியின் பிரதிபிம்பங்களாய், காட்சியளித்தனர். கந்தசாமியின் கண்கள் என்றுமில்லாமல் அன்று கண்ணீரை வெளிப்படுத்திக்கொண்டிருந்தது. குடிசையை நெருங்க, நெருங்க ஊமைச்சியின் நினைவு கந்தசாமியினுள்ளத்தில் பெரும் போராட்டத்தைத் துவக்கிவைத்துவிட்டது,

பாலத்தைத் தாண்டிவிட்டால், அடுத்து அடுத்து மூன்று சாக்கடைத் தேக்கங்கள். அதனைச் சுற்றிலும்தான், கந்தசாமி போன்றவர்கள் வாசம் செய்யும் உல்லாச விடுதிகள்! கந்தசாமி பாலத்தைக் கடக்கும்பொழுதுதான் எதிர்பாராத முறையில் அவனுழைப்பை விலைக்கு வாங்க, தர்மப்பிரபு ஒருவர் முன் வந்தார். தர்மப்பிரபு, முன்னே செல்ல, கந்தசாமி பின்னால் சென்றான். மகிழ்ச்சி என்பதற்கு யார் யாரோ என்ன என்னவோ பொருள் கூறியிருக்கிறார்களே, விளங்கவில்லையென்றால் சற்றே கந்தசாமியின் முகத்தை வந்து பார்க்கட்டுமே. எவ்வளவு கிடைத்தாலும் ஊமைச்சியின் உள்ளத்தைத் திருப்திப்படுத்த வேண்டுமென்பதே கந்தசாமியின் முழு நோக்கம்!

*  *  *  *  *

இரும்புக் கட்டுப்பாடு அமுலுக்கு வந்தபின்னர் இருசப்ப பிள்ளையின் வியாபாரம் இரவோடு இரவாய் நடந்துகொண்டிருந்தது. கோடீசுவர முதலியார் கட்டும் எட்டடுக்கு மாடி வீட்டுக்கு, இரும்பு வினியோகிக்கும் முழுப் பொறுப்பையும் துணிவோடு ஏற்றுக்கொண்டிருக்கிறார் இருசப்ப பிள்ளை. ஆரம்பப்பள்ளி தலைமையாசிரியர், "தமிழப்பன்" மாணவர்கள் தோட்ட வேலைசெய்ய கடப்பாறை வேண்டும் என்று கெஞ்சிக் கூத்தாடிவிட்டார்! இரும்புக் கட்டுப்பாடு என்று கையை விரித்துவிட்டார்! எத்தனையோ திருப்பங்கள் நடந்தார்கள், கந்தசாமியும் தர்மப் பிரபுவும். கடைசியாக இலாரியருகில் கொண்டுவந்து நின்றனர் இருவரும்! "கணக்கப் பிள்ளை ஏதாச்சியும் கூலி பேசினீங்களா?" என்று நபர் கேட்கவே இடதுசாரி நின்றிருந்த நபரைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினான் கந்தசாமி. "ஓ! பெரிய இரும்புக்கடை முதலாளி" என்று உதடுகள் துடித்து நின்றன. ஒருமுறை தன்னைச் சுற்றிப் பார்வையைச் செலுத்தினான். கும்மிருட்டில் இவ் இலாரி இங்கு வரக் காரணம் என்ன என்பதைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தான். கந்தசாமியால் நிலையைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

"என்னப்பா கூலி கேக்கிறே?" என்ற இருசப்ப பிள்ளையின் வினயமான கேள்வி, கந்தசாமியின் சிந்தனையைத் தட்டுப்படுத்தியது! "கஷ்டத்தைப் பார்த்து கொடுங்க எசமான்" என்றான். காலம் வேகமாகக் கடந்தது கந்தசாமியின் பெருமுயற்சியால் பத்திரப்படுத்தப்பட்டிருந்த இரும்புத் தளவாடங்கள் இலாரியில் சேர்ப்பிக்கப்பட்டன.

சொட்டை விழுந்த தலையை அழகுபடுத்தும் பட்டுத் தலைப்பாகை; வட்டவடிவமான சந்தனப் பொட்டு; மனிதனைக் கௌரவப்படுத்தும் கோட்டு; பஞ்சகச்ச வேஷ்டி; பொன் சட்டமிட்ட மூக்குக் கண்ணாடி; உடலின் பலவீனத்தை ஓரளவு சமாளித்துக்கொள்ள வெள்ளிப் பூண் போட்ட கைத்தடி; பேச்சிலே படபடப்பு; மறந்தேவிட்டேன், குள்ளநரித்தனம்! இத்தனை அம்சங்களும் பொருந்திய எழிற்சித்திரம்தான், இரும்புக்கடை இருசப்ப பிள்ளை!

மணி பத்தடித்தது! "புதிதாய் வந்திருக்காரே சப் இன்ஸ்பெக்டர், வியாபாரிங்க விசயத்தில் ரொம்பவும் கண்டிப்பாய் இருக்கிறார். என்னைப் போன்றவர்கள் மீது ஓயாத சிந்தனையாம்" என்று படபடத்தார் இருசப்ப பிள்ளை! புன்சிரிப்புக்காட்டி இலாரியை முடுக்கிவிட்டார் டிரைவர். சாலையை உரிமையாக்கிக்கொண்டு இலாரியும் பறந்துகொண்டிருந்தது.

பார்வை கந்தசாமியின் மீது பாய்ந்தது. கந்தசாமிக்குக் கூலிபெறப் போகிறோம் என்ற எக்களிப்பு! பையைத் தடவினார் இருசப்ப பிள்ளை! மூத்த பையன் முத்துலிங்கம் விட்டெறிந்த (போலிப் பணம்) எட்டணா கைக்குத்தட்டுப்பட்டது. அதனை எடுத்துக்கொண்டு திரைப்படம் பார்க்கச் சென்று வந்து வேதனையோடு குமுறிய காட்சி அவர் கண் முன்பு தோன்றத்தான் செய்தது. இருசப்ப பிள்ளையின் உள்ளம் கல்லாயிருக்கும்பொழுது, காட்சிகள் என்ன செய்ய முடியும்?

போலிநாணயம் கந்தசாமியின் கைக்கு மாறிவிட்டது! வழக்கமாகச் செலுத்தும் வணக்கத்தைச் செலுத்தத் தவறவில்லை கந்தசாமி!

கந்தசாமி வணக்கம் செலுத்தினான். காரியவாதி இருசப்பபிள்ளை சிறிது சிரித்தார்! இருசப்ப பிள்ளையின் புன்சிரிப்பில் பொருளிருக்கிறது. ஏன், ஏமாற்றிவிட்ட இலக்கியமே பொதிந்து கிடக்கிறது! கந்தசாமி நடந்தான், நடந்துகொண்டிருக்கிறான்!

உடல் நடந்துகொண்டிருக்கிறது. உள்ளம் போராடிக்கொண்டிருக்கிறது. போராட்டத்தில் பலவித எண்ணங்கள், தீவிரமாகப் போராட்டத்தை நடத்தி வெற்றியும் பெற்றன. வெற்றி பெற்ற எண்ணங்கள், செய்கையின் அடிப்படையாக அமைந்தன!

சோற்றுக்கடை சோணாசலம் நெய்யுணவு என்றால், ஊமைச்சிக்கு வெகு பிரியம். எட்டணாவைச் சோணாசலத்திடம் நீட்டி, துணியை விரித்தான் கந்தசாமி. கந்தசாமியின் பணத்தை வாங்கிய சோணாசலம், கந்தசாமியையும், நாணயத்தையும்

மாறிமாறி முறைக்க ஆரம்பித்தான். எதைப் புரிந்துகொள்ள முடியாமல் சஞ்சலப்படுகிருர் என்று கந்தசாமியால் உணர்ந்துகொள்ளமுடிய வில்லை.

நல்ல நேரத்தில் "ஏட் 315" வந்து சேரவே அமோக வரவேற்பளித்தார் சோணுசலம்! வீட்டில் மல்யுத்தம் நடத்திவிட்டு வந்திருக்கும் 315க்கு, சோணுசலத்தின் வரவேற்பு திருப்திகர மாயிருந்தது. சோணுசலத்திடமிருந்த கந்தசாமி யின் எட்டணு போலிநாணயம், 315-ன் கைக்கு மாறியது. 315 நாணயத்தை முறைத்தார். முறுக்கிவிட்ட மீசை துடிக்க ஆரம்பித்தது! "ஏலே! ஏதுடா இந்த எட்டணு?" என்று 315 கேட்பதற்குள் இறக்கைகள் துண்டிக்கப்பட்ட பறவையைப்போல் துடிக்க ஆரம்பித்தான். இரும்புக்கடை இருசப்பபிள்ளை தன்னை ஏமாற்றி விட்டாரே என்று எண்ணும்பொழுதே திடீர் என மின்சாரத்தால் தாக்குண்டவனைப்போல் தத் தளித்தான் கண்முன்பு மட்டிலும், இருசப்ப பிள்ளை யிருந்திருந்தாரேயானுல் கந்தசாமி கொலை காரனுக மாறியிருப்பான். அக்கணமே அவனுள் ளம் குமுறும் எரிமலையானது!

கந்தசாமி நிலையைச் சமாளித்துக்கொண்டு, வாய் திறப்பதற்குள் இரண்டு நிமிடங்கள் வேகமாய்க் கடந்துவிட்டன. அந்த இரண்டு நிமிடங்களில் 315-ன் கோபம் அதிகமாகிக்கொண்டிருந்தது. பெரிய இரும்புக்கடைக்கார முதலாளி கொடுத் தார் என்று உண்மையைச் சொன்னுன் கந்தசாமி. மௌனம் சாதித்துக்கொண்டிருந்த சோற்றுக் கடை சோணுசலம் பேசும் தெய்வமாக மாறிவிட் டார்! "ஊரிலே இருப்பது ஒரே ஒரு பெரிய இரும் புக்கடை, அதுவும் நம் பிள்ளையுடையது. இரும் புக் கட்டுப்பாடு அமுலுக்கு வந்தபின்னர் வியாபா வியாபாரம் செய்யமுடியாது என்று மனுசன் கடையை மூடி தொலைச்சுப்புட்டாரே" என்று அப்பேச்சை நிறுத்தினர் சோணுசலம். அப் பொழுது பரந்தவெளியில் லாரியில் இரும்புத் தளவாடங்களை ஏற்றிய நினைவு கந்தசாமிக்கு ஏற் படத்தான் செய்தது. சோணுசலத்தின் பேச்சு முடிந்தது. கந்தசாமியின் மௌனம் குற்றவாளி யென உறுதிப்படுத்தியது. 315-ன் உறுமல் ஆரம்பமாகியது. தனது உழைப்பு போலி நாண யத்தால் பாழாக்கப் பட்டதைக் குறித்துச் சிறி தும் வருந்தவில்லை. பட்டினிப் பிணியிலிருந்து தானும், ஊமைச்சியும் எப்படித் தப்புவது என் பதைக் குறித்துத்தான் வருந்தினுன்—வேதனைப் பட்டான். அவன் வாழ்க்கையிலேயே அன்று தான் அத்தனை சுடு சொற்களையும் கேட்டான்!

315-ன் கைகள் கந்தசாமியின் உடலை பதம் பார்க்கத் அடித்தன—பார்த்தும் விட்டன கந்த சாமியினுள்ளத்தில் பதுங்கிக் கொண்டிருந்த கோபவெறி விமிர்ந்து நிற்கலாயிற்று! அதன் விளைவு கந்தசாமி 315ஐ முரட்டுத்தனமாக அடிக்கத் துவங்கிவிட்டான். சோற்றுக்கடை சோணுசலம் கூட்டம் கூட்டுவதில் முனைந்திருந் தார்!

"என்னதான் சொல்லியிருந்தாலும், போலீஸ் காரரை அடித்தது மறுக்கமுடியாத குற்றம்" என்று கந்தசாமிக்கு மக்கள் தீர்ப்பளித்தனர். சோற்றுக்கடை சோணுசலம், எட் 315ன் மூக்கி லிருந்துவழியும் இரத்தத்தைத் துடைத்துக்கொண் டிருந்தார் இக்கூட்டத்தை வேகமாய்க் கடந்து கொண்டிருந்தது, இருசப்ப பிள்ளையின் நாகரிக வாகனம்! (கார்). எதைப்பற்றியோ திட்டம் திட்டிக்கொண்டிருக்கும் இருசப்ப பிள்ளை இதை எங்கே கவனிக்கப்போகிருர்!

போலி நாணயத்தை ஏமாற்ற முயலும் பொழுது, மிரட்டவந்த அரசாங்கப் பாதுகாவல னைப் படுகாயப்படுத்திவிட்டதாகக் கந்தசாமியின் மீது குற்றச்சாட்டு! "நீ என்ன சொல்லுகிருய்?" என்று நீதிபதி கேட்கும்பொழுது கந்தசாமியின் சிந்தனை, ஊமைச்சி என்ன பாடுபடுகிருளோ— நிலையை யார் எடுத்துச் சொல்வது என்பதில் இலயித்திருந்தது. கந்தசாமியின் கண்ணீருக்கு நீதியோ—சட்டமோ இரக்கம் காட்டமுடியுமா? நிரபராதிகளின் விஷயத்தில் பெரும்பாலும் சட் டங்கள் சிறை வாசத்தைத்தானே தீர்ப்பளிக்கின் றன!

காலம் கந்தசாமியின் சிறைவாசத்தை கடத்திக் கொண்டிருந்தது. விநாடிக்கு விநாடி கந்தசாமி விடும் பெருமூச்சு, போலி நாணயத்தால் தான் அடைந்துவரும் இன்னலை எதிரொலிக்கச் செய் தது.

* * *

சிறையிலே வாழும் கந்தசாமி. இரண்டு குழந் தைகளுக்குத் தந்தையாகி விட்டான். தாயாகிவிட்ட ஊமைச்சி உலகமே இருண்டுவிட்ட தாக முடிவு செய்துவிட்டாள். வைத்தியசாலையில் உள்ள சிப்பந்திகளுக்கெல்லாம். ஊமைச்சி சிரிப் பூட்டும் கருவியாகத் தோன்றினுள்!

ஒரு நாள்... இரண்டு நாள்...... கந்தசாமி வராத தைக்கண்டு கலங்கினுள் அடிக்கடி வந்து பார்த் துக்கொண்டிருந்த அந்தப் பகுதிப் பெண்களும், தங்கள் வருகையை அடியோடு நிறுத்திக்கொண் டார்கள். எழுதப் படிக்கத் தெரிந்த எல்லம்மாள் ஊமைச்சியைக் காப்பாற்றும் பொறுப்பு எங்கே தன் மீது விழுந்து விடுகிறதோ என்று அச்சப்பட் டாள். "பாவி மகனுக்கு இந்த நிலையில் விட்டோட எப்படித்தான் மனசு துணிந்ததோ தெரியவில்லை" என்றனர் கோடி வீட்டுக் கோவிந்தம்மாளின் மாமி யார் நிலையிலுள்ளவர்கள்.

நாட்கள் நான்கும் கடந்தன. "எங்கே அந்த வாய்செத்த பயலைக் காணோம்?" என்று சொல் லிக்கொண்டிருந்தார் கண்டிப்புள்ள பேர்வழியான மீரான் சாயபு!

கந்தசாமிக்கு எதிலும் சிந்தனையில்லை. கண் களிலிருந்துவரும் கண்ணீரைத் துடைப்பதற்கே

நாள் பூராவும், சரியாகவிருக்கும்பொழுது எதைப் பற்றிச் சிந்தனைசெய்ய முடியும்? காலம் கந்தசாமி வேதனையால் குமுறுவதைப் பத்து நாட்களாகப் படம் பிடித்துக் காட்டியது.

கந்தசாமியைப்பற்றி, ஊமைச்சி வைத்திய சாலையில் உள்ளவர்களையெல்லாம் தனது அங்க அசைவுகளால் சலியாது கேட்டுவிட்டாள். நகைத்தவர்களை அவள் பொருட்படுத்தவில்லை. அவளைப் பொருட்படுத்தி யார் பதில் கூறப்போகிறார்கள்?

பிரசவித்து வீட்டுக்கு அனுப்பப்பட்ட நோயாளிகளில் ஊமைச்சியும் ஒருத்தி. தூக்கமுடியாது இரண்டு குழந்தைகளையும் ஊமைச்சி தூக்கிக் கொண்டு வரும்பொழுது, 'அனாதை! அனாதை! என்று யார் யாரோ எப்படி எப்படியோ இரக்கப் படும்படியெல்லாம் கூறுகிறார்களே, எங்களைப் பாருங்கள்! நன்றாகப் பாருங்கள்!! நாங்கள்தான் அனாதைகள்' என்று கூறுவதுபோலிருந்தது. கந்தசாமி இந்த நிலையில் கைவிடுவான் என்று ஊமைச்சி கற்பனை செய்துகூடப் பார்த்திருக்க மாட்டாள். நம்பிக்கை இழந்துவிட்டாள் ஊமைச்சி; வாழவே விரும்பவில்லை.

வைத்தியசாலையைவிட்டுப் பத்தடிகள் கடந்திருக்கமாட்டாள். எத்தனை, எத்தனை முகங்கள் தன்னைப் பார்த்து சுளிப்பதையும், இளிப்பதையும் உணர்ந்தாள். வாயிருந்தாலாவது அனாதைக் குழந்தைகள் என்று கூறி, ஊமைச்சி இராச வாழ்வு வாழலாம். தன்னைக்கண்டு நகைத்தவர்கள் எல்லோரையும், கணவனில்லாமலே குழந்தைகளுக்குத் தாயாகிவிட்டோம் என்று எண்ணித்தான் நகைப்பதாக முடிவுசெய்திருக்கவேண்டும் ஊமைச்சியினுள்ளம்.

காலம் வீணாய்க் கடப்பதை, ஊமைச்சியும் உணர்ந்துகொண்டாள். தங்க விக்ரகம் போலிருந்தது என்று எதை எதையோ வர்ணிக்கிறார்களே, சிறிது நேரத்திற்கு முன்பு ஊமைச்சி கழுத்தை நெறித்து, கடலில் வீசி எறிந்தாளே அதைக் கண்டு என்ன சொல்லுவார்களோ? ஊமைச்சிக்கு அழுகை பீறிட்டு வருகிறது, அழ நேரமேது? மற்றொரு பெண் குழந்தையைக் கழுத்தைப் பிடித்து, நெறிக்கும்பொழுது குழந்தையின் முக அசைவைக் கண்டு நடுநடுங்கிப் போனாள். இரண்டு குழந்தைகளையும் எனக்குக் காணிக்கையாக்கிவிட்டாய். இனி என்ன செய்யப்போகிறாய் என்று கடல் அழைப்பதுபோலிருந்தது.



"நீயாவது என்னைப் போன்றவர்களை, வஞ்சனையில்லாமல் அடைக்கலப் படுத்திக் கொள்ளுகிறாயே" என்று பேசும் சக்தி மட்டிலுமிருந்தாலும், அவசியம் கூறியிருப்பாள். கடலை அணைத்துக்கொள்ளும் பொழுது தற்செயலாக அப்பக்கம் வந்த ஏட் 315ன் கையில் சிக்கிக்கொண்டாள்.

தற்கொலை செய்துகொள்ள முயன்றதாக ஊமைச்சியின் மீது 315ன் குற்றச்சாட்டு விலங்கு—315 போன்றாரின் உறுமல் இவையெல்லாம் ஊமைச்சிக்கு விளங்காப் புதிராகவே தோன்றின. பச்சைக் குழந்தைகளைக் கொன்றுவிட்ட ஊமைச்சியால் கண்ணீரைத் தவிர வேறெதையும் காரணமாக வெளிப்படுத்த முடியவில்லை. கண்ணீர் இடைவிடாது சிந்துவதன் பொருள் தெரிந்தால் நீதிபதிகளுக்குக் குற்றப் பட்டியல் நீண்டுகொண்டே போகும்!

எதற்காக ஊமைச்சி கண்ணீர் சிந்துகிறாள்? நீதி சபை புரிந்துகொள்ளவில்லை! புரிந்துகொள்ள முயலவுமில்லை. குற்றவாளிகளின் கண்களில் வழியும் வழக்கமான கண்ணீர் என்று கருதிவிட்டார் போலிருக்கிறது சட்ட நுணுக்கங்கள் அறிந்த நீதிபதி! இல்லாமலா தற்கொலை செய்துகொள்ள முயலுபவர்களுக்கு அளிக்கும் தீர்ப்பை, ஊமைச்சிக்கும் அளித்தார்? காலம், ஊமைச்சியின் தண்டனை நாட்களை ஒவ்வொன்றாகக் குறித்துக்கொண்டிருந்தது. பச்சிளம் குழந்தைகளின் நினைவு மறையும் வரை, ஊமைச்சியின் கண்ணீருக்கு ஓய்வே கிடையாது!

சிறைக்கம்பிகளுக்கிடை வாழும் கந்தசாமி அரைப் பயித்தியமாகிவிட்டான். ஊமைச்சி! ஊமைச்சி! இவைதான் ஏககாலம் உதடுகளில் துடிப்பவை. தண்டனை பூர்த்தியடைந்தது. வெளிவந்த கந்தசாமி முழுப் பைத்தியமாம்!

கோடீசுவர முதலியாரின் கட்டிடத் திறப்பு விழாவில் பங்குகொள்ள, இருசப்ப பிள்ளையின் நாகரிக வாகனம் (கார்) காற்றையும் மிஞ்சிப் பறந்துகொண்டிருக்கிறது. சாய்ந்தவாறே உட்கார்ந்திருந்த இருசப்ப பிள்ளை, தம் பொன் சட்டமிட்ட மூக்குக் கண்ணாடியைச் சரிசெய்துகொண்டிருந்தார். கந்தசாமி என்கிற பைத்தியம் தியணைக்கும் யந்திரத்தையணைத்துக்கொள்ளவிருந்தது.

“ஏய்! நடுச்சாலையில் என்ன உன் அட்டகாசம்?” என்று ஏட் 315 கர்ஜித்தார். ஆடாமல் அசையாமல் நின்றிருந்த கந்தசாமியை ஏட் 315 அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. முகத்தில் காடுபோல வளர்ந்திருக்கும் தாடியைப் பார்த்தால் ஊமைச்சியால்கூட, கந்தசாமி என்று கண்டுபிடிக்க முடியாது! அடுத்து, அடுத்த பல நாகரிக வாகனங்களின் முன்னறிவிப்பான (ஹாரன் ஒலி) தொடர்ந்து கேட்டன. நடுச்சாலையில் நின்றிருந்த கந்தசாமிப் பைத்தியத்தை, தன் கைத்தடியால் அடித்தார் 315! சாலை காலியானது. போலி நாணயத்தால் வாழ்வு குலைந்த மாஜி பொறுமையின் எல்லையான கந்தசாமி, சிரித்துக் கொண்டோடுகிறான்! போலி நாணயம் செலாவணியாகிவரும்வரை கந்தசாமி போன்றவர்கள் சிரித்துக்கொண்டு—ஏன் — அலறியழுதுகொண்டு ஓடிக்கொண்டேயிருக்கவேண்டும். ○



# தெய்வம் தந்தது

மாயாவி

என் நினைவு டேயின் முடிவு எல்லாவற்றையும் உண்மையென நிரூபித்து விட்டது, இரவு நடந்த மன மயக்கச் சிகிச்சை. எட்டு மணிக்குச் சரியாக டேயின் முன் ஆஜர் ஆனதும் என் மனம் மாறிவிட்ட நிகழ்ச்சியைக் கூறினேன். 'இது ஒன்றும் ஆச்சரியமல்லவே, ராம்; இப்பொழுது மாறு விட்டால், இன்னும் சிறிது நேரத்துக்குப் பிறகு அது மாறியிருக்கும்' என்றார் அவர்.

பிறகு அன்றைச் சிகிச்சைக்கான ஒத்திகைகளை ஒரு தடவை நடத்திக்காட்டினார். அவை முடிந்ததும் சொன்னார்: "ராம், நமது முடிவுப்படி ஐயரின் மன மாற்றம் மனைவிமீது ஏற்பட்ட சந்தேகத்தினால் தோன்றியிருக்குமானால், அவர் தெய்வத்திடம் மன்னிப்புப் பெறக் கோவிலுக்கு வந்திருக்க மாட்டார். கலியாணம் நடந்த அன்றிரவு அவர் மனைவியுடன் கோவிலுக்குச் சென்றதைப் பலரும்

உண்மையென்று அறிவித்திருப்பதால் வேறு ஏதேனும் ஒரு நிர்ப்பந்தமே அவரை அங்கே போகத் தூண்டியிருக்கவேண்டும். ஆகவே அவர் செலுத்துவது நிச்சயமாக மன்னிப்புப் பிரார்த்தனையாக இருக்காது, அனேகமாக அது ஒரு குறைபாடாகவே இருக்கும். அன்று என்ன வார்த்தைகளைக் கூறினரோ, அல்லது மனத்திலும் நினைத்து நின்றரோ, அதே வார்த்தைகள்தாம் இன்று அவரிடமிருந்து வெளிப்பட்டுவரும். இதை நன்ருக நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். தேவையிருந்தால் மாத்திரம் சாதுரியமாக, அவருடைய நினைவு தவருனதுஎன்பதை உணர்த்தும்படியாகத் தெய்வமாகிய நீங்கள் திருவாய் மலர்ந்து அருளவேண்டும். தகுந்த பதில் எதுவும் சட்டென அகப்படவில்லை

மறு நிமிஷம் உண்மை வெளிவரத் தொடங்கிற்று.

"ஆம்" என்ற பதிலுக்கு எதிராக, "சேவிக்கவா வந்திருக்கிறேன்?" என்ற சொற்கள் ஐயரிடமிருந்து வந்தன.

"பின் ?"

"இதுதானு, ஆத்மார்த்தமாக, ஓர் பெண்ணைக் காக்கமுயன்ற எனக்கு நீ அளித்த கைம்மாறு என்று கேட்கவல்லவா வந்திருக்கிறேன்?"

"ஆம்; ஆம்; அதற்காகத்தான் வந்திருக்கிறீர்கள். கேளுங்கள் நன்ருக. மணமுடிந்த மறு நிமிஷமே மனைவி தனது ஆசை நாயகனை அணைந்து



என்ருல், பதிலின்றி வேண்டுமானுலும் இருந்துவிடுங்கள், குற்றமில்லை; ஆனுல், ஏறுமாருக உளறிச் சிகிச்சையைச் சிக்கலடையச் செய்துவிடாதீர்கள்" என்று எச்சரித்து, என்னை மறைத்துவைத்தார்.

ஒன்பது மணிக்குச் சற்று முன்பே ஐயர் வந்துவிட்டார். உடனே சிகிச்சையும் ஆரம்பிக்கப்பட்டுவிட்டது. ஒத்திகைப்படி யாவும் சரியாகவே நடந்தன. சோதனைச் சாலையின் பிரகாசமான விளக்குகள் அனைத்தையும் அணைத்தார், டே. ஐயரின் மனதை மயக்கினுர். சுந்தரேசரின் சந்நிதானத்தில் இருப்பதாக அவருக்கு உணர்த்தினுர். பிறகு, "இப்போழுது நீங்கள் பத்மினியை மணந்த கோலத்தோடு தெய்வத்தைச் சேவிக்க வந்திருக்கிறீர்கள், அல்லவா?" என்ற ஆணிவேரைக் கிளப்பும் கேள்வியைப் போட்டார்.

நிற்பதைக் காணவா, இந்த வயதில் அவளை மணந்துகொள்ளும் நிலைக்கு என்னை விரட்டினுய் என்று நன்ருகக் கேளுங்கள்."

"இல்லை, தவறு; தெய்வத்திடம் பொய்சொல்ல மாட்டேன். அவர்கள் அணைந்து நின்றதை நான் காணவில்லை."

"பின் எதைக் கண்டீர்கள்? எதற்காக மனைவியென்று ஏற்றுக்கொண்ட பிறகு அவளை விலக்கினீர்கள் ?"

"ஏற்றுக்கொண்ட பிறகல்ல; ஏற்றுக்கொள்ளு முன்பே — தாலியைக் கட்டுமுன்பே—அவளை விலக்கித்தான் வைக்கவேண்டுமென்பது எனக்குத் தீர்மானமாகிவிட்டது."

டேயோ, நானே எதிர்பாராத புதிய உண்மை ஒன்று வெளிவருவதைக் கண்டு, காதைத் தீட்டிக்

கொண்டு கேட்கலானேன். விலாமுட்ட அடைத்துத் தைக்கப்பட்ட தானிய மூட்டையில் ஒரே ஒரு சிறு துவாரம் இட்டாலும், அதன் வழி அத்தனை தானியமும் 'நான் முந்தி—நீ முந்தி' என்று வெளிவர முயலுவதுபோல, ஐயர் மனத்தில் அடைத்துநின்ற ரகசிய மூட்டையில் டேபாபு துவாரமிட்டதும் அதன் அடக்கமும் 'பொல-பொல'வெனக் கொட்ட ஆரம்பித்துவிட்டது.

ஐயர் சொல்லிக்கொண்டிருந்தார்: "ஆம்; தெரிந்தே பிழை செய்யும் நிர்ப்பந்தத்துக்குத் தான் விரட்டப்பட்டேன், பெண்ணைத் தெய்வமெனப் பூசித்துவந்த நான், என் அன்பைப்பெற்ற குல தெய்வத்தை அலங்கோலமே செய்யவேண்டியிருந்தது.

பத்மினியை எதற்காக மணக்க இசைந்தேன்? சமூகம் என்ற பாழுங் கிணற்றில் விழுந்து தத்தளித்து நின்ற அந்த அபலைப் பெண்ணை, அதன் இடிந்து சரிந்த படிக்கட்டுகளின் வழியே வெளியேற்றிவிட முயன்றேன். ஆனால் பாசி படிந்த அப் படிகள் ஒன்றுகூட அவளை ஏற்காமல் வழுக்கித் தள்ளிவிட்டன. என் கரங்களுக்கு எட்டும்படியாகத்தான் விழுந்து கிடந்தாள். எனினும், இக் கிழக் கரங்களுக்கு அவளைத் தாங்கி வெளியேற்றும் வலுக் கிடையாதே. அதை அவளும் நன்றாக அறிந்திருந்தும், வேறு வழியில்லை என்றானபோது, 'உங்கள் கரங்களையாவது தாருங்களேன்;' அதைப் பிடித்துக்கொண்டு வெளியேறிவிடுகிறேன்' என்று கதறினாள். என்னைவிட வலிமை மிகுந்தவளை ஜாக்கிரதையாகக் கரை சேர்த்துவிட முடியுமா என்ற தயக்கம் இருந்தபோதிலும், இயல்பாகப் பெண்ணுக்கு இரங்கும் என் மனது 'முயன்றுதான் பாரேன்' என்று ஊக்கிற்று; கையை நீட்டினேன். ஆனால், இளமையின் வலிவு சற்றும் எதிர்பாராதவாறு, பிடிப்பற்று நின்ற என்னை அக் கிணற்றிலே இழுத்துத் தள்ளிவிட்டது.

தெய்வத்தை நம்பி, மற்றொரு தெய்வத்தைக் கரைசேர்க்கக் கைகொடுத்த எனக்கு இத் தண்டனையானால், நான் எந்தத் தெய்வத்தைத்தான் நம்புவது?

நாளைப் பொழுதுவிடிந்தால் பத்மினிக்கு மாலையிட்டுவிடவேண்டும். இதுவரை திடமாக இருந்துவந்த என் மனது கிட்ட நெருங்க நெருங்க ஏனோ கலங்கலாயிற்று. 'அவள் உற்சாகமாகத்தான் நடமாடி வருகிறாள்; ஆயினும், அந்த உற்சாகத்தில் உணர்ச்சி இல்லையே? வெறும் நிழல் தானே தென்படுகிறது. உண்மையில் இப்பெண்ணுக்கு நான் செய்யப்போவது வாழ்க்கை அலங்காரமா? அல்லது, அலங்கோலமா?' என்று இவ்வாறு பலவிதமாக எண்ணிக் கொந்தளித்தது என் மனது.

மறுநாள் விசேஷத்துக்கான ஏற்பாடுகள், இரவு தடபுடலாக நடந்துகொண்டிருந்தன. பெண்களும், ஆண்களும் குறுக்கும் நெடுக்கும் ஓடி ஏதேதோ பரபரப்பாகச் செய்துகொண்டிருந்தனர். ஆனால் இத்தனைக்கும் அடிப்படையான நான் கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்துகொண்டிருந்தேன். ஒன்றிலுமே எனக்கு உற்சாகம் பிறக்கவில்லை. என் நிலையைக்கண்டு ஒருவர் இருவர், 'ஏன் ஒருமாதிரி இருக்கிறீர்கள்?' என்றுகூட விசாரிக்க ஆரம்பித்தனர். 'சரி; இனி இங்கே உட்கார்ந்திருக்கலாகாது' என்று காற்றாட வெளியில் புறப்பட்டுவிட்டேன். தெருக்களைக் கடந்து, வைகையை நோக்கிக் கால்கள் என்னை இழுத்துச் சென்றன.

பௌர்ணமியை நெருங்கிக்கொண்டிருந்த இரவு. எனவே பால்போன்ற நிலவு வீசிற்று. வைகை ஆற்றின் வெள்ளை மணற்பரப்பில் துண்டை விரித்து அண்ணாந்து படுத்துக்கொண்டு, கட்டிப்போட்டிருந்த மனதை அவிழ்த்துவிட்டேன். அது என்னை எங்கு எங்கெல்லாமோ இழுத்துச் சென்றது. அதன் போக்கில் போய்க்கொண்டே, கேட்டேன். 'நான் செய்யப்போவது தவறா? தவறானால் திடமாகச் சொல்லிவிடேன். கலியாணத்தை நிறுத்திவிடுகிறேன்; அங்கும் இன்றி இங்கும் இன்றி என்னை இப்படி அலைக்கழிக்காதே!'

கடிவாளத்தை வெட்டி இழுத்ததும் நிற்கும் குதிரையைப்போல அது சட்டென்று நின்றது. 'கலியாணத்தை நிறுத்தவா? குடியைக் கெடுத்தாயே. இவ்வளவும் ஆனபிறகா? ரொம்ப நல்ல செய்கைதான், போ.'

'பின் என்னைப்போட்டு ஏன் இப்படி வதைக்கிறாய்? வாக்குக்கொடுக்கத் தூண்டினாய், கொடுத்துவிட்டேன். ஏற்பாடுகள் எல்லாம் முடிந்துவிட்டன. தாலியைக் கட்டவேண்டியதுதான் பாக்கி என்ற நிலைக்குவந்த பிறகு இப்படித் தளர்ந்துபோகிறாயே? தவறோ? சரியோ? ஒன்றில் இறங்கிய பிறகு அதை முடித்துவிடும் திடம்வேண்டாமா?'

"ஆம்; நீ சொல்வது சரிதான்; நல்லது; பரோபகாரம்? என்று கருதித்தானே இதைச் செய்யத் தூண்டினேன்? இனி அது, தவறானாலும் கலங்கி என்ன பயன்?"

இப்படித்தான் என்னை நான் தேற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. கிட்டத்தட்ட பதினொரு மணியிருக்கும், அலை பாய்ந்த மனதை அமைதிப்படுத்திக்கொண்டு நான் வீட்டுக்குக் கிளம்பிய போது.

பரபரப்பு மிகுந்த மதுரை நகரம் உறங்க ஆரம்பித்துவிட்டது. வற்றா நதியாக ஓடும் அதன் வீதிகளில் மனித வெள்ளம் வடிந்துவிட்டது. அங்கொன்றும், இங்கொன்றுமாகச் செல்லும் பாதசாரிகளையன்றி அது உறங்கிக்கொண்டு தானிருந்தது.

வந்த வழியே திரும்பிக்கொண்டிருந்தேன். ஏதோ ஒரு சந்தில் நுழைந்து பெரியதெரு வழி

யாக நடந்து சர்மாவின் வீட்டைப்போய் அடைய வேண்டும். சந்து நிர்ச்சலனமாக, சிறிது இருள் பரவி இருந்தது. அதன் இரு கோடிகளில் மாத்திரம், இரு காந்த விளக்குகள் உண்டு. அவற்றில்கூட ஒன்று—பெரிய தெருவின் தொடக்கத்தில் இருந்த விளக்கு—என்ன காரணத்தாலோ, எரியாதிருந்ததை வரும்போது பார்த்திருந்தேன்.

அன்றை நிலவுக்கு விளக்குகள் அவசியம் இல்லைதான். ஆனால் சந்தில் நுழைந்த சமயம் பார்த்துச் சந்திரன் மேகத்தினுள் மறைந்து இருளைப் பரப்பிவிட்டான். ஆயினும் எனக்குப் பயமா என்ன? பல தடவைகள் ஆற்றுக்குப் போய் வந்த பாதைதானே, அது? சாதாரணமாகவே நடந்துகொண்டிருந்தேன். பெரிய

எந்தக் காதலரோ? என்ன இருள் நாடகம் நடிக்கிறார்களோ? நாம் குறுக்கே சென்று அதைக் கெடுப்பானேன் என்று வந்த வழியே திரும்ப நினைத்தேன். ஆனால், அங்கே கேட்ட பெண் குரல் என்னை ஒருகணம் உலுக்கி நிறுத்திற்று. நிறுத்திற்று? இல்லை; அவர்களை நெருங்க விரட்டிற்று!

சில அடிகள் அவர்களை நோக்கி முன்னேறிய போது சந்தேகமறத் தெரிந்துவிட்டது. விடிந்தால் எனக்கு மனைவியாகவேண்டிய பத்மினிதான் அந்தப் பெண்!

" என்னை மன்னிக்க மாட்டாயா, பத்மி? உன் இளமனதில் ஆசைக் கனலைக் கிளப்பிக் கெடுத்த



தெருவின் விளக்கு வெளிச்சத்தில் அங்கே போவோர் வருவோரை இங்கிருந்தே காணமுடிந்தது. என் பார்வை அங்கே பதிந்தபோது யாரோ ஒரு பெண் அத்தெருவழியே போய்க் கொண்டிருந்தாள். அவள் பின்னால் விழுந்தடித்து ஓடினான் ஒரு வாலிபன். ஒரு நிமிஷம் அவர்கள் அத்தெருவிலே நின்றார்கள். பிறகு இருவரும் இச்சந்துக்குள் புகுந்து எனக்கு எதிராக வந்தார்கள். இருளில் மறைந்தார்கள். என்னைத்தாண்டிச்செல்லப் போகிறார்கள் என்று எதிர்பார்த்தவாறு நடந்துகொண்டிருக்க பேச்சுக்குரல்தான் கேட்டதேயன்றி அவர்கள் என்னைக் கடந்துசெல்லவே இல்லை. இருளிலே நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள் போலும்.

இந்தப் பாவி.........!" என்று அந்த வாலிபன் பேசிக்கொண்டிருந்தான்.

தெள்ளத்தெளிய இருந்த என் மனத்தில் ஒரு கணத்தில் புகையடித்தது. 'இது என்ன பேரிடி, புதிதாக?' என்று ஒரே அடியாக இருண்டுவிட்டது, அது.

பத்மினி பேசினாள்: 'உங்களைத் தெய்வம் மன்னிக்கும்; ஆனால் என்னைத்தான்.........'

அவன் இடைமறித்தான்: 'இன்னுங்கூட நான் தயாராகவே இருக்கிறேன் பத்மி; உன் பாவத்தைக் கட்டிக்கொள்ளாமல், இப்போது விரும்பினாலும், எங்கேயாவது அழைத்துச் சென்றுவிடுகிறேன்.'

'போறும்; போறும்' என்றாள் அவள், சலிப்புடன். 'நான் பட்ட அவகேடு போறாதா? இன்னும் என்னைப் பாவக்குழியில்வேறு இழுத்துத் தள்ள முயலாதீர்கள். எட்டாக் கனியென்பதை உணர்ந்திருந்தும், நீங்கள் ஊட்டிய லாகிரியில் அதை மறந்து, எட்ட முயன்று கீழே விழுந்து கால்களை ஒடித்துக்கொண்டது போறும். மூன்றாவது மனிதர் அறியாமல் நீங்கள் செழித்து வளரச் செய்த காதல் என்று உங்கள் தந்தையின் முன் தோற்றதோ, எப்பொழுது அதை எதிர்த்து நிற்கச் சக்தியற்ற பேடியாக்கி உங்களை ஊரை விட்டு விரட்டியதோ, அப்பொழுதே என் மனம் செத்துவிட்டது. விவாகம் என்பதை இனிச் சிந்திக்க முடியாத ஏமாற்றத்தை அடைந்து விட்டாலும், சமூகத்தின் பழிச்சொல்லுக்கு அஞ்சி, இந்த மனமற்ற உடலை ஏற்பவர் இருந்தால் அளித்துவிடத் துணிவடைந்தேன். அதுகூடப் பொறுக்கவில்லை, புண்ணியவாளர் உங்கள் தந்தைக்கு. இல்லாத நோய் இருப்பதாகக் கதைகட்டி வந்த வரன்களையெல்லாம் கலைத்து விரட்டியவர். வெளியோருக்கு வேண்டுமானால் மர்மமாக இருக்கலாம்; ஆனால் அவரே இதன் காரண கர்த்தா என்பதை நான் அறியமாட்டேனா? உங்களுக்கென்ன? அன்று ஓடிப்போனீர்கள்; உடனே திரும்பி வந்தீர்கள்; என்னைவிட அழகியை, என்னிலும் பணக்காரியை, என் தோழியையே மணந்துகொண்டீர்கள்; இன்பமாக இருக்கிறீர்கள்; அப்படியே இருக்கலாகாதோ! இடையே இதென்ன கோணல் புத்தி? நான்தான் கெட்டேன்; நீங்களுமா கெடவேண்டும்; ஏற்கனவே ஒரு உத்தமருக்குச் செய்யவிருக்கும் துரோகம் போதாதென்று, என் உயிர்த் தோழிக்கும் துரோகம் செய்யத் தூண்டுகிறீர்களா? வேண்டாம் பாஸ்கரன்; நம் காதல் இருளில் முளைத்தது; இருளிலே அழிந்தது. அதை அறிந்தவர் உங்கள் தந்தை ஒருவரை அன்றி வேறு எவரும் இல்லை; அதனால்தான், இந்தக் கிழவரையாவது நான் மணக்க முடிந்திருக்கிறது. உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன், தயவுசெய்து இனியாவது நல்லவராக நடந்துகொள்ளுங்கள். என்னையும் நடக்க விடுங்கள். சந்தேகத்துக்கு விதை யூன்றி, பழைய வாழ்வுகளை அம்பலத்துக்குக் கொண்டுவந்து இந்த வாழ்வையும் அலங்கோலமாக்கி விடாதீர்கள், நானும் எல்லாவற்றையும் கனவென்று ஒதுக்கிவிட்டேன்; சமூகத்தின் பரிகசிப்புக்கு ஆளாகிவிடலாகாதென்ற ஒரே நல்லெண்ணத்துடன் என்னைக் கைபிடிக்க இசைந்திருக்கும் இந்த உத்தமருக்கு, இவ்வூத்தை உடலை அளித்து ஏமாற்றத் துணிவடைந்துவிட்டேன். வேறு என்ன செய்வது......?'

அவர்கள் மேலே பேசியதை என் உள்ளமோ செவிகளோ, ஏற்கவில்லை. என்னைச்சுற்றிக் 'கெட்டவள்' 'ஊத்தை உடல்' என்ற பத்மினியின் வார்த்தைகளே சுழன்றன.

கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாகி விட்டது என் நிலை. வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? அவர்கள் இருவரும் ரகசியமாகக் காதல் செய்தார்கள். அவன் அவளை மணக்க வாக்களித்துக் கெடுத்து வந்தான். இறுதியில் அவன் தந்தை அந்த இணைப்புக்கு மறுத்தார். உடனே இவள் முகத்தில் விழிக்காது ஓடிப்போனான். பிறகு, தானே திரும்பிவந்தான். யாரையோ மணந்துகொண்டான். இப்போது அவள் அலுத்து விட்டாள்போலிருக்கிறது; இவளைக் கூட்டிக் கொண்டு மறைந்துவிடலாமென்று வந்திருக்கிறான்.

ஆனால், இந்தப்பெண்; அடேயப்பா! இவள் நெஞ்சு அழுத்தம்! எல்லாவற்றையும் ஒரேயடியாக மூடிவிட்டு, நல்லவளைப்போல என்னை மணக்கவந்திருக்கும் இவள் துணிவு!

சரி; அது எக்கேடும் கெட்டுப்போகட்டும். இப்பொழுது நான் செய்யவேண்டியதென்ன? என்ன என்று கேட்பானேன்; இந்த வயதில் ஒரு ஊத்தை உடலையா ஏற்கவேண்டும்? மனத்தை எப்பொழுதோ சாக அடித்துவிட்ட ஒரு பெண்ணையா மணந்தேன் என்று பெயர்கொள்ளவேண்டும்?

'வேறு வழியில்லை, அப்பனே; அப்படித்தான் செய்தாகவேண்டும்.' என்று மறுபடியும் குதித்தெழுந்த என் மனம் கூவிற்று,

'ஏன்?'

'ஏனா? பெண்ணைத் தெய்வமென்று இதுகாறும் கருதி ஆராதித்து வந்தது உண்மையானால், இந்த ஊத்தைப் பத்மினியையும் நீ ஏற்கத்தான் வேண்டும். ஏற்கனவே ஒரு தடவை கலியாணம் நின்று பின்னும் பலதடவைகள் வந்த வரன்கள் எல்லோரும் ஏற்க மறுத்துத் திரும்பிச்சென்ற பிறகே, கிழமாகிய நீ ஏற்கச் சம்மதித்திருக்கிறாய் என்பது ஞாபகமிருக்கட்டும். அந்த நிலையில் தாலியிடச் சிலமணி நேரமே முன்னிருக்கையில் நீயும் உதறிச் சென்றாயானால், அப்புறம் அவள் வாழ்க்கைக்கு விடிவேது? 'கிழவன்; தந்தைக்கு ஒப்பானவன்; எவருமே மணக்க முன் வராததால் தான் நான் மணக்கப்போகிறேன்.' என்றெல்லாம் பறைசாற்றிய நீயே கடைசி நேரத்தில், அவளைக் கைவிட்டால், உலகம் என்ன நினைக்கும், அப்பனே? அவள் கெட்டவள்ளாகவே இருக்கட்டுமே; இருந்தாலும் உலகம் அதை அறியாதவரை அதன் கண்களுக்கு நல்லவள்தானே? இப்பொழுது நீ அவளைக் கெட்டவள் என்று கூறினால்கூட எல்லோரும் உன்னைப் பார்த்துத்தான் சிரிப்பார்கள். அதோடு அவளை அடியோடு கெடுத்து, அடங்கா அவமானத்துக்கும் கோர முடிவுக்கும் ஆளாக்குவதுதான் நீ கண்ட பலனாகும். வாழ்நாளெல்லாம் பெண்ணைப் பூசித்து வந்தும், பெண்ணின் பரிதாப நிலைக்காகவே அவளை மணக்க முன்வந்தும், கடைசி சமயத்தில் 'பெண்ணைக் கொல்லக் காரணமாக நின்றபாவி' என்ற அவப்பெயர்தான் உன்னை வந்து சூழும்.

எனவே இதிலிருந்து தப்ப நான் ஒருவழி சொல்லுகிறேன், கேள்: பேசாமல் அவளுக்குத் தாலியைக் கட்டி மனைவியாக்கிக்கொண்டு தொடாதிருந்து விடு. அவமானமும், சமூகத்தின் நகைப்பும் ஆவது அவளுக்கு இல்லாது போகும். பெண்ணைப் பூசித்துவந்த உன் லட்சியமும் நிறைவேறியதாகும். ஆம்; கன்னியிலே கற்பிழந்து, மணப்பாரின்றி நின்றவளைத் தீரத்துடன் மணந்த பெருமையோடு, ஓர் ஆணுடலையன்றிப் பிறிதொன்றைத் தீண்டாத கற்புநிலையில் நிறுத்தி, அவள் பெருமையையும் அழியாமல் காத்தவனுவாய்''

எனக்குச் சிந்திக்கப் பொழுதில்லை. சிந்தித்திருந்தாலும் இதைவிடச் சிறந்தவழி தென்பட்டிருக்காது. இதுதான் அவள் தலைவிதி. என் விதியும் கூட இதுவேதான். நானும், அவளும் அதை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

இந்த நிச்சயத்துடன் மனத்தை நிலைப்படுத்தி மறுநாள் அவளுக்குத் தாலியைக் கட்டிவிட்டேன். ஆனுல் கழுத்தில் சரடேற்றியபிறகு வேறொரு கேள்வி என்னை வாட்ட ஆரம்பித்தது.

ஆமாம், ஆரம்பத்தில் சில நாட்கள் வேண்டுமானுல், தன்னைத் தொடாதிருப்பதை அவள் சகித்திருப்பாள். பிறகு அவள் உள்ளம் குமுறுமே; காரணத்தை அறிய விழைவாளே; என்ன காரணத்தைக்கூறுவேன்? உண்மையைச் சொல்லிவிடுவதா? இவ்வளவும் செய்து அவள் மானத்தைக் காத்துவிட்ட பின்னர் அதைக்கூறி, அவள் மனத்தைப் புண்படுத்துவதால் என்ன பலன்? மேலும் அவள் அந்தரங்கத்தை நான் அறிந்துகொண்டேன் என்பது தெரிந்துவிட்டால், மனச்சாட்சியே அவளை வதைத்துக் கொன்றுவிடாதா? பின் என்ன செய்வது?

அன்று பகல் முழுவதும் அதைப்பற்றியே ஆலோசித்துக்கொண்டிருந்தேன், கலியாணச் சந்தடி நிறைந்த வீட்டில் அமைதியாக மனதை ஓடவிட்டு இதற்கு ஒரு வழி காண இயலாததாக இருந்தது. எனவே 'இரண்டு மூன்று வீடுகளுக்கப்பால் இருந்த சர்மாவின் உறவினர் ஒருவர் வீட்டிற்குச் சென்று படுத்துக்கொண்டு சிந்திக்க ஆரம்பித்தேன். அந்த அகத்துக்காரர்கள் அனைவரும் கலியாண வீட்டில் இருந்ததால், மனதை நீள ஓடவிடப் போதுமான தனிமை கிட்டிற்று. மாலை நான்கு மணிவரையில் உள்ளத்தை எங்கெங்கு சுற்றவிட்டும், சரியான வழியே தென்படவில்லை. மிஞ்சி வந்தால், வயதின் காரணமாக இல்லற இன்பத்தில் நாட்டம் இழந்துவிட்டேனென்றும், சமூகத்தின் ஏசலிலிருந்து மீட்கவேண்டும் என்பதை மாத்திரம் குறிக்கோளாகக்கொண்டு அவளை மணந்தேனென்றும், கூறித் தட்டிக் கழித்துவிடுவது என்ற நிச்சயத்துடன் வெளிக்கிளம்பினேன்.

கதவை அடைத்துக்கொண்டு தெருவில் இறங்கியதும், எதிர் வீட்டிலிருந்து ஒரு கூக்குரல் கேட்டது. 'அடே கிழவா, இரண்டு பெண்களின் வாழ்வைக் குடித்தது போதாதென்று, இந்தப் பிராயத்தில், இன்னெரு பெண்ணைத் தேடத் துணிவடைந்தாய்? மூன்றுமவளை இனி மனத்தால் நினைத்தாலும், அந்த நிமிஷமே உன் உயிரை உறிஞ்சிவிடுவேன்!'

ஒரு கணம் என்னைத்தான் யாரேனும் பரிகசிக்கிறார்களோ என்ற பிரமை அடைந்தேன். ஆனுல், மறுகணம், அவ் வீட்டிலிருந்து பேய்பிடித்தபெண் ஒருத்தியைச் சிலர் கையைப்பிடித்து வெளியே அழைத்து வந்ததையும் அவளே திரும்பத் திரும்ப இதே வார்த்தைகளைக் கூறிக்கொண்டிருந்ததையும் கண்டேன். மதுரையில் மூன்று மாதங்களாகத் தங்கியிருந்ததால் அப் பெண்ணின் வரலாறு என் காதுகளுக்கு எட்டியிருந்தது. இளையதாரமாக என்னிலும் வயதான கிழவர் ஒருவருக்கு வாழ்க்கைப்பட்டிருந்த அவளை மூத்ததாரத்துக்காரி பேயாகப் பிடித்து ஆட்டிவந்தாள். ஆனுல், மணந்துகொண்டவர் அவளைப் பிறந்தகமாகிய மதுரைக்கு அனுப்பிவிட்டு வேறு கலியாண முயற்சியில் இறங்கிவிட்டார். 'இதை அறிந்ததுமுதல் இரவும் பகலும் அவள் இப்படித்தான் புலம்பிக் கொண்டிருந்தாள் எனவும், பெற்றோர் அவளை அன்று தொடங்கி, கோவிலில் தவமிருக்க அழைத்துச் செல்லுவதாகவும்,' விசாரித்தபோது அண்டை வீட்டுக்காரர் ஒருவர் சொன்னுர்.

எனக்குச் சட்டென ஒரு வழி தோன்றிற்று. 'இவள் புலம்பல் நமக்கும் ஒருவாறு பொருந்தியிருக்கிறது. நாம் தெய்வபக்தி மிகுந்தவர் என்பதைப் பத்மினி முதல் எவரும் அறிவர். இப்பொழுது இவளைக் கோவிலுக்கு இட்டுச் செல்லுகிறுர்கள். நாமும் பத்மினியுடன் அங்கே போவோம். சந்நிதியில் இருக்கும் இவள் அருகில் நின்று தெய்வத்தைச் சேவிப்போம். அதாவது, இதே வார்த்தைகளை ஒருமுறையேனும் கூறும் வரையில் அங்கே நிற்போம். பிறகு வீடு திரும்பி, பத்மினி, தன்னைத் தொடாதிருப்பதன் காரணத்தை வினவும்போது, அவளை மணந்தது தவறு என்ற நினைவு தாலி கட்டியபிறகு பிரமாதமாக எழுந்து வருத்தியதாகவும், தெய்வத்திடம் மன்னிப்புக் கோரி, கோவிலுக்குச் சென்றதாகவும் ஆனுல் தெய்வ வாக்கு இப்படிப் பிரதிகூலமாக வந்துவிட்டதால், அவள் மாங்கல்யத்தைக் காப்பதற்காகத் தீண்டாதிருப்பதாகவும் கூறிவிடுவோம்,' என்று நிச்சயித்துக் கொண்டேன்.

அதன்படி யாவும் சரியாகவே நிகழ்ந்தன. பம்பாய்க்கு வந்து இரண்டொரு நாட்களுக்குப் பிறகு அவள் தன்னை நெருங்காதிருப்பதின் காரணத்தை வினவினுள். முதலில் இதைக் கூறியதும் நகைத்தாள். பின்னர் அவள் சுமங்கலி வாழ்க்கையைக் கேவலம் உடல் இச்சைக்காக விஷப்பரீட்சை செய்யமாட்டேன் என்று கூறியபோது வாயடைத்துப் போய்விட்டாள். என்னை ஏமாற்ற முயன்றதற்குத் தெய்வம் தன்னை இப்படி ஏமாற்றிவிட்டதே என்று அவள் அதைச்

சபித்திருப்பாள், ஏன்? எனக்குக்கூட தெய்வத்திடமிருந்த நம்பிக்கை ஓரளவு புரண்டுதான் போயிற்று. எப்பொருளிலும் பரம் பொருளைக் கண்டு தொழுது வந்த நான், இப்போது தெய்வம் எங்குமே இல்லையென்ற முடிவுக்கு வந்து வந்துவிட்டேன். ஆம்; அது இந்த உலகில் எங்காயினும் இருந்ததானால் தன் பக்தன் ஒருவனை இவ்வாறு ஏமாறச் செய்திருக்குமா? எவரேனும் தெய்வம்—தெய்வம் என்று பேசினால்கூடப் பொறுக்க இயலாத நிலைக்கு என் மனப்போக்கு மாறிவிட்டது. என் மனந்தான் இப்படி மாறிற்றேயன்றி, அதனால் பத்மினிக்கு எவ்விதக் குறைபாடும் நேர்ந்துவிட விட்டுவிடவில்லை. அவள் மறைத்துவிட்ட மர்மச் செய்கை எனக்குத் தெரிந்துவிட்டதாக மறந்துங்கூட காட்டிக்கொண்டதில்லை. மாறாக, அவளுக்கு என் நிராகரிப்புத் தோன்றாதிருக்குமாறு, முன்னிலும் அன்புடன் நடத்தி வந்தேன்.

இந்த நிலையில் சர்மா மரணாவஸ்தையிலிருப்பதாக ஒருநாள் தந்தி வந்தது. மதுரைக்குப் போவதை நான் கொஞ்சமும் விரும்பவில்லை. 'அங்கே போனால், எப்படியும் என் நிராகரிப்பு வெளியாகிவிடும். இங்கே வேண்டுமானால் அவள் மறைத்துக்கொண்டிருப்பாள்; அங்கே சுற்றத்தாரைக் காணும்போது தனது அவல வாழ்வை வெளியிடாது அவளால் இருக்கமுடியாது' என்று கவலைகொண்டபோதிலும், மரணாவஸ்தையிலிருக்கும் மாமனாரைக் காணப்போகாமல் இருப்பது எப்படி? எனவே புறப்பட்டுச் சென்றேன். அங்கே ஒரு பெரிய சோதனை நிகழப் போகிறதென்றுதான் போனேன். அவ்வாறே நிகழவும் நிகழ்ந்தது. சர்மா, நாங்கள் போன மறுநாள் இறந்துபோனார். அவர் இறந்த இரண்டொரு நாட்களுக்கெல்லாம் அது ஆரம்பித்தது. சர்மாவின் சகோதரரும் அவர் பிள்ளைகளும் சேர்ந்து கொண்டு என்னிடம் ஒரேயடியாகப் போர் தொடுக்க ஆரம்பித்துவிட்டனர். அவர்களுக்குச் சரியாக நானும் போரிட்டிருக்கமுடியும். ஆனால் நான் ஆவேசங் கொண்டேனாயின் எங்கே என்னை அறியாமலே பத்மினியின் பெண்மையை இழிவுபடுத்திவிட்ட ரகசியத்தை வெளியிட்டு விடுவேனோ என்று பயந்து, அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு ஒன்றும் சரிவரப் பதில் அளிக்காது, கோபமுற்றவன்போல அவளையும் அழைத்துக் கொண்டு பம்பாய்க்குத் திரும்பிவிட்டேன். அதோடு, மனைவி என்ற எரிமலை கொந்தளிக்க ஆரமபித்து விட்டதென்றும், இனித்தான் நான் சர்வ ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டுமென்றும் எச்சரிக்கை அடைந்தேன்.

அவ்வாறே அவள் என்னை ஆண்மையற்றவன் என்று ஊரார் ஒருமுகமாகக் கூறுவதாகச் செய்தி வந்திருப்பதாகவும் அதற்குச் சிகித்சை செய்து கொள்ளவேண்டுமென்றும் தூண்டினாள். அது ஒன்றும் உண்மையல்ல வென்றும் ஈசுவர சாபமே அவளைவிட்டு விலகியிருக்கச் செய்திருக்கிறதென்றும் மீண்டும் உறுதிகூறினேன்; அவள் அதை இப்பொழுது நம்ப மறுத்தாள். அவளுடைய மனச்சாந்திக்காக விரும்பிய வைத்தியரிடமே போய், என் ஆண்மைத்தனத்தை நிலைநாட்டிக் கொண்டேன்.

சில நாட்களுக்குப் பிறகு அவள் மீண்டும் ஆரம்பித்தாள். இச்சமயம், எனக்கு மனப்பிராந்தி ஏற்பட்டிருக்கிறதென்றும், அதற்கு மன வைத்தியம் செய்துகொள்ளவேண்டுமென்றும் வேண்டிக் கொண்டாள். அதையும் நான் மறுக்கவில்லை. எந்த வைத்தியரும் என் அந்தரங்க மனநோயைக் கண்டுபிடித்துவிட முடியாதென்றும், கண்டு விட்டாலும் அது உண்மை நிகழ்ச்சியிலிருந்து தோன்றியதாகையால், அதற்கு மாற்று அளிக்க முடியாதென்றும் உறுதியாக இருந்தேன். எனவே அதற்கும் இணங்கினேன். மரைன் லைன்ஸில் நரேஷ் குமார் டே என்றொரு வங்காள மனத் தத்துவ வைத்தியர் இருந்தார், அவரிடம் அவள் என்னைக் கூட்டி வந்தாள்.........."

அவர் மேலே பேசுமுன்பு டே பாபு கோயிலைத் திரையிட்டு மூடிவிட்டு, ஹாலின் விளக்குகளையும் போட்டுவிட்டார்.

ஐயரின் மன மயக்கம் போய்விட்டது. சுய நினைவடைந்ததும், "என்ன? நான் எங்கே இருக்கிறேன்?" என்று மிரள விழித்தார் அவர்.

"டே பாபுவின் வைத்திய நிலையத்தில்" என்றார் டே.

"புரொபசர், என்னை இந்நேரமாக இங்கே நிறுத்தி என்ன செய்தீர்கள்? உள்ளத்தின் கனம் குறைந்துவிட்டதுபோன்றதொரு உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறதே. ஏன்? மயக்க மருந்தைக் கொடுத்து, நெஞ்சை ஆப்ரேஷன் செய்து எதையாவது தோண்டி எடுத்துவிட்டீர்களா?" அவர் தமது சட்டைப் பொத்தான்களை அகற்றி மார்பை ஒரு தடவை கவனித்துப் பார்த்தார்.

"ஆம், மிஸ்டர் ஐயர்; ஆபரேஷன் இன்றியே உங்கள் உள்ளத்தை அடைத்திருந்த ரகசியக் குப்பையை வெளியேற்றிவிட்டேன்" என்று கூறினார் டே.

பிறகு அவர், "மிஸ்டர் ராம், இனிநீங்கள் வெளி வரலாம். வரும்பொழுது அந்தத் திரையையும் விலக்கிவிட்டு வாருங்கள்" என்றார்.

திரை விலகியதும், ஐயர், கோவிலையும், அதனுள்ளிருந்து வெளிவந்த என்னையும் கண்டு ஒரே ஆச்சரியத்தில் மூழ்கிப்போனார். "ஸார், நீங்கள்.........? இங்கே.........? எப்படி.........? இது மதுரைக் கோவில் கர்ப்பக்கிரகம்போல் அல்லவா இருக்கிறது?"

டே தமது இயல்பான நகைப்புடன் சொன்னார். "இவர் என் நண்பர்; உங்களுக்கு இப்பொழுது நடத்திய சிகிச்சைக்கு உதவியாக இருந்தவர்:

அதோடு பம்பாய்க்குக் கோவில் வேண்டுமென்று கட்டுரை எழுதி உங்கள் வசவுகளை வாங்கிக் கட்டிக்கொண்டவர்.''

ஐயரைப் பின்னும் திகைப்பு வந்து மூடிற்று. என்ன? நீங்களா ''மாயாவி'' சரியான பெயர் தான் ஸார் உங்களுக்கு; ஒரு தடவைக்கு இரண்டு தடவை என்னுடன் பேசிப்பழகியும் ஆளைக் காட்டிக்கொள்ளாமல் மாயமாக......; அதிருக்கட்டும், புரொபஸர் ஸார்; என் உள்ளத்திலிருந்து ஏதோ ரகசியக் குப்பையைக் கிளறி வெளியேற்றிவிட்டதாகக் கூறினீர்களே! மனத்தின் வசமிழந்த நிலையில் நான் என்னென்ன உளறினேன்?''

''உளறவில்லை மிஸ்டர் ஐயர்; உண்மைகளைத் தான் கக்கிவிட்டீர்கள். தெய்வத்திடம் நம்பிக்கை இழந்த உங்களை அந்தத் தெய்வத்தின் முன் நிறுத்தியே எல்லாவற்றையும் கூறச்செய்துவிட்டேன். என் கேசுக்கு மூளையையும் கண்டு, அதற்கு வெற்றிப்பாதையையும் கண்டுவிட்டேன். மிஸ்டர் ஐயர் உங்கள் மனைவி பத்மினி பிழையற்றவள்!''

ஐயர் கேலியாகச் சிரித்துவிட்டு, ''எப்படி புரொபஸர்?'' என்றார்.

''எப்படியென்பதை நான் இப்பொழுது விளக்கத் தயாராயில்லை. முதலில் உங்களை ஒரு கேள்வி கேட்கப்போகிறேன்; அதற்குப் பதில் சொல்லுங்கள். என் மனமயக்கச் சிகிச்சை உங்கள் உள்ளத்தில் பரம ரகசியமாக ஒளித்து வைக்கப் பட்டிருந்த உண்மையை வெளிக்கொண்டுவந்து விட்டது என்றபோதில், அது அவ்வாறே எவர் உள்ளத்திலிருந்தும் உண்மையைக்கொண்டுவர வல்லது என்பதை நீங்கள் நம்புகிறீர்களா?''

''ஆம்; இனி நம்பித்தான் ஆகவேண்டும்.''

''அப்படியானால், நீங்களே உங்கள் மனைவி தூய்மையானவள் என்பதை நேரில் கேட்டுத் தெரிந்துகொள்ளுவீர்கள், இனி உங்களுக்கு நான் எவ்விதச் சிகிச்சையும் செய்யப்போவதில்லை. உங்கள் மனைவி ஊரிலிருந்து வந்ததும், அவளைத் தான் மனமயக்கச் சிகிச்சைக்கு உட்படுத்தப் போகிறேன். அவள் எப்பொழுது ஊரிலிருந்து திரும்புவாள்?''

''பத்து நாட்களுக்குள் வந்துவிடுவாள்.''

''சரி, வந்த அன்றே என்னிடம் அழைத்து வாருங்கள்.''

## 12

ஆக்கப் பொறுத்தவனுக்கு ஆறப் பொறுக்க வில்லையா? என்று 'வசனம்' சொல்லுவார்கள். ஆனால் பெரும்பாலும் நமக்கு ஆறப் பொறுப்பதில்லைதான். அதிலும் வாசக அன்பர்கள் இருக்கிறார்களே, அவர்கள் நாக்கை வெண்டுமானாலும், சுட்டுக்கொள்ளத் தயார்தான். ஆறப் பொறுக்க மாத்திரம் அவர்களால் முடியவே முடியாது. ரசமான கதையை முக்கால்வாசி, விரிவாகப் படித்துவிட்ட அவர்களுக்கு முழுவதையும் விரிவாகப் படிக்கப் பொறுமை இருப்பதே இல்லை. கதை ஒருவாறு புரிந்துவிட்டதும், சட சடவென்று பக்கங்களைத் தள்ளிவிட்டுக் கடைசிப் பாராவுக்கு வந்து நிற்பதைப் பல வாசகர்களிடம் கண்டு அநுபவம் அடைந்திருக்கிறேன்.

எனவே இக்கதையில் வாசகர்களை அந்தச் சங்கடத்தில் மாட்டி வைக்க விரும்பவில்லை. இறுதியாக நடந்ததைச் சுருக்கமாகவே சொல்லிவிடுகிறேன்.

என் தம்பி குருவுடனும், தனது தங்கை சாந்தியுடனும் ஐயரின் மனைவி பத்மினி ஒரு வாரத்துக்கெல்லாம் ஊரிலிருந்து பம்பாய் வந்துசேர்ந்தாள். டே எச்சரித்திருந்ததால், அவளிடம் ஐயரின் சிகிச்சை முடிவைப்பற்றி நாங்கள் எதுவும் கூறவில்லை. அவளையும் அன்றைச் சிகிச்சைக்கு அழைத்துவரச் சொல்லியிருக்கிறார் என்று மாத்திரம்கூறி அழைத்துச்சென்றோம். தகுந்த சூழ்நிலையை அமைக்கப் போதிய அவகாசம் இல்லாததால், இருட்டிலே அவளுக்கு மனமயக்கச் சிகிச்சையை நடத்த ஐயரின் அநுமதியைப் பெற்றுக்கொண்டார், டே.

பரிசோதனை ஹாலில் நாங்கள் அனைவரும் உட்கார்ந்து கொண்டோம். டே, சாதாரணமாகச் சம்பாஷித்து வருபவர் போலப் பத்மினியிடம் ஊர்ச் செய்திகளைக் கேட்டுக்கொண்டே அவள் மனத்துக்கு மயக்கத்தை உண்டுபண்ணி, தம் வசமாக்கிக்கொண்டார். உடனே பட்டென்று விளக்குகளையும் அணைத்துவிட்டார். பாஸ்கரனும், அவளும் முதலில் சந்தித்த நிகழ்ச்சிக்கு அவளை இழுத்துச் சென்றார். அங்கிருந்து அந்த உள்ளத்தைக் குடைய ஆரம்பித்தார். வழக்கம்போல, புற்றிலிருந்து வெளியேறும் ஈசலைப்போல, உண்மைகள் ஒன்றன்பின் ஒன்றாக வெளிவந்தன. அதன் சாரம் இதுதான்.

பத்மினியின் பெரியப்பாவிடம் டியூஷன் வைத்துக் கொண்டிருந்தான், பாஸ்கரன். அவர்கள் வீட்டுக்குக் காலையிலும் மாலையிலும் வந்து போவான். அப்போதுதான் அவர்கள் காதல் முளைவிட்டது; ரகசியமாக வளரவும் வளர்ந்தது எல்லோரையும்போல இவனும் பத்மினியை மணந்து கொள்ளுவதாக வாக்களித்தான். வாக்களித்ததோடு மாத்திரமல்ல; ஆத்மார்த்தமாக அதற்காக அதற்கான முயற்சிகளிலும் ஈடுபட்டான். ஒரு நாள் துணிந்து, பத்மினியையும் அழைத்துக் கொண்டு தன் தந்தையின்முன் போய்நின்று 'இவளைத்தான் கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன்' என்றான்.

பாஸ்கரனின் அப்பா மதுரையில் கொள்ளை கொள்ளையாய்ப் பணம் ஈட்டிவந்த ஒரு பிரபல நூல் வியாபாரி. அவருடைய அந்தஸ்துக்காகப் பாஸ்கரனை மாப்பிள்ளையாக அடைய உள்ளூரிலே பல பணக்காரர்கள் முயன்று கொண்டிருந்

தனர். ஆகவே கால் காசுக்கு விதியற்ற ஏழைப் பெண் பத்மினியை, மகன் மணக்க அவர் சம்மதம் தந்துவிடவில்லை. அப்பாவுக்கும் பிள்ளைக்கும் வாக்குவாதம் முற்றிற்று. பாஸ்கரன்தான் தோற்றான். உடனே எவரிடமும் சொல்லிக்கொள்ளாது பம்பாய்க்கு ஓடிப்போய் விட்டான். கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டு ஏமாந்தது, அப்பொழுதுதான் சிறுமி பத்மினிக்குத் தெரிந்தது. எனவே, அவள் அந்த நிகழ்ச்சியையே மறந்துவிட்டாள்.

ஆனால் பாஸ்கரனால் அவளை மறக்க முடியவில்லை. பம்பாயில் நிலையான வேலை ஒன்றைத் தேடிக்கொண்டதும், பத்மினியை அங்கே கூட்டிச் சென்று. அவள் பெற்றோரின் முன் மணந்து கொள்ளுவது என்று ஊருக்கு வந்தான். மகன் திரும்பியதை, அவன் மன மாற்றத்துக்கு அடையாளமாக எடுத்துக்கொண்டார், பாஸ்கரனின் தந்தை. அவன் சம்மதத்தைக்கூடக் கேட்காமல் இப்பொழுது ஒரு பெண்ணை அவன் கழுத்தில் கட்டிவிடுவதென்ற முடிவுடன், உள்ளூரிலே தம் அந்தஸ்துக்கு ஏற்ற இடத்தில் கலியாணம் நிச்சயித்துவிட்டார். அப்படி நிச்சயித்த பெண்தான், துளசி. துளசியும் பத்மினியும் பள்ளித் தோழிகள்.

தந்தையின் நிச்சயதார்த்தத்தைப் பாஸ்கரன் சற்றும் கவனம் செய்யவில்லை. அவன் பத்மினியுடன் பம்பாய்க்கு ஓடுவதிலே நாட்டம் கொண்டிருந்தான். ஆனால் அவள் நேர்மையை விரும்பினாள். தன் தோழிக்குத் துரோகம் செய்யவும் சம்மதிக்கவில்லை. அவளே பாஸ்கரனுக்குப் புத்திமதி கூறி, துளசியை மணந்துகொள்ளச் செய்தாள். மணம் முடிந்ததும் பாஸ்கரன் மீண்டும் பம்பாய்க்குத் திரும்பிச்சென்றுவிட்டான்.

இந்த இடையில்தான் பத்மினியின் தாய் இறந்தாள். சர்மா ஊருக்கு வந்து அவளுக்குக் கலியாண ஏற்பாடுகளைச் செய்யலானார். விரும்பிய மகனுக்குப் பணக்காரப் பெண்ணைக் கட்டி வைத்துவிட்டாலும், அதை இத்தனை சங்கடமாக்கிவிட்டவள் என்று பத்மினியின் மீது, பாஸ்கரனின் தந்தைக்கு ஒருவித நிரந்தர வெறுப்பு ஏற்பட்டிருந்தது. எனவே அவளுக்கு நல்ல இடத்தில் எவ்வித சிரமமுமின்றி, எவரோ ஒருவர் பண உதவி செய்ய. விவாஹங்கூடப்பது சகிக்கக்கூடாததாக இருந்தது. மனதில் எழுந்து நின்ற அர்த்தமற்ற வெறியினால் தூண்டப்பட்டு, பத்மினியை மணக்க வந்திருந்த சம்பந்திகள் கும்பலில் ரகசியமாக, அவளுக்குக் காக்கை வலிப்புநோய் உண்டு என்ற பொய் வதந்தியைப் பரவவிட்டுக் கலியாணத்தை நிறுத்திவிட்டார். பின்னர் அவளைப் பெண் பார்க்க வந்தவர்களையும் அப்படியே கலைத்து விரட்டிக்கொண்டிருந்தார். கடைசியில் அவள் ஒரு கிழவருக்கு வாழ்க்கைப் படுகிறாள் என்றறிந்த பிறகுதான் அவருக்கு மனச் சமாதானம் ஏற்பட்டது.

ஆனால் அவ்விஷயத்தைத் தனது மனைவி எழுதிய கடிதத்தின்மூலம் அறிந்த பாஸ்கரன் துடிதுடித்துவிட்டான். எப்படியும் அக் கலியாணத்தை நிறுத்திவிடவேண்டுமென்று ஊருக்கு ஓடிவந்தான். அப்பொழுது, மீண்டும் பத்மினியைத் தன்னுடன் வந்துவிடும்படி அழைத்த சம்பாஷணையைத்தான் ஐயர் கேட்டுவிட்டுச் சந்தேகம் அடைந்தார். எந்த வார்த்தைகள் அவருக்குச் சந்தேகத்தைக் கிளப்பினவோ, அதே வார்த்தைகள் இந்தக் கதையோடு சேர்ந்து பத்மினியிடமிருந்து வந்தபோது, விகற்பமற்றதாகவே தோன்றின. என்னைக் கெடுத்தாய் என்று அவள் கூறியது தனது அப்பழுக்கற்ற காதலைத் திரஸ்கரித்ததையே குறித்ததென்றும், 'ஊத்தை உடல்' என்ற வார்த்தை உள்ளம் செத்துக் காலியாக நின்ற வெற்றுடலைக் குறித்ததென்பதையும் இச்சந்தர்ப்பத்தில் எதிர்க் கேள்விகள் கேட்டு இன்னும் நன்றாகத் துலக்கிவிட்டார் டே.

பத்மினி பம்பாய்க்கு வந்துவிட்ட பிறகு, பாஸ்கரன் ஒருதடவை அவளைக் காணச் சென்றிருந்தான். அப்பொழுதுதான் அவள் கிழவரை மணந்தும் இல்லற இன்பத்தைப் பெறவில்லை என்பதை உணர்ந்தான். ஐயர் துளியேனும் தங்கள் தொடர்பைப்பற்றி அறிந்திருப்பார் என்று அவர்கள் சந்தேகிக்கவே இல்லை. எனவே அவனுக்கு அவர் ஒருகால் ஆண்மையை இழந்திருப்பாரோ என்ற ஐயமெழுந்தது. எனவே அவரை ஸ்பெஷலிஸ்டிடம் உடற் பரிசோதனைக்குப் போகச் செய்யுமாறு பத்மினியைத் தூண்டிவிட்டான். பிறகு டேயிடமும் அவர் கேசைக் கொண்டு வந்தான். மூன்றாம் மனிதரானாலும், டே ஒரு மனத்தத்துவ ஆராய்ச்சியாளர் ஆதலால், தான் ஓர் அந்நியனா



கவோ, பத்மினியின் நண்பனுகவோ அவரிடம் அறிமுகப்படுத்திக்கொண்டால், வீண் சந்தேகங்களுக்கு இடமேற்படும் என்று கருதி, தன்னை அவள் அண்ணு பாஸ்கரன் எனக் கூறிக்கொண்டான்.

இத்தனை உண்மைகளும், மனமயக்கச் சிகிச்சையினுல் பத்மினியின் உள்ளத்திலிருந்து வெளியேற்றப்பட்ட பிறகு ஐயருக்குத் தமது சந்தேகம் அஸ்திவாரமற்றது என்பது உறுதியாகிவிட்டது.

அப்புறம் என்ன ? அவர் மனக்கசப்பு மறைந்து போயிற்று. மனைவியை மனைவியாக ஏற்றுக்கொண்டார். உலகை விட்டு ஓடிய தெய்வம் திரும்பி வந்துவிட்டதாக அவருக்குத் தோன்றிற்று.

* * *

### பின் குறிப்பு

சென்ற செவ்வாயன்று டேயின் நிலயத்தில் உட்கார்ந்திருந்தபோது ஐயர் அங்கே வந்தார். அவர் அங்கு வருவார் என்பது எனக்குத் தெரியும்; வரவேண்டிய காரியம் இருந்தது. அதைச் சொல்லத்தான் நானும் அங்கு வந்தேன். அதற்குள் அவரே வந்துவிட்டார்.

"டே பாபு, நானே உங்களுக்கு என் வீட்டில் விருந்து" என்ருர் அவர்.

"சிகிச்சை முடிந்து ஆறு மாதங்களான பிறகா எனக்கு விருந்து அளிப்பது?" என்று டே பாபு கேட்டார்.

"ஆம்; சிகிச்சையின் பலன் இப்பொழுதுதான் பரிபூரண மாயிற்று" என்று வெட்கச் சிரிப்புச் சிரித்தார் ஐயர்.

டேக்குப் புரியவில்லை போலும்; அவர் என்னை வியப்புடன் நோக்கினுர்.

"நானே அவருக்குச் சீமந்தம்" என்றேன் நான்.

"ஓ, அப்படியா ? 'கங்க்ராச்சுலேஷன்ஸ்' மிஸ்டர் ஐயர்" டே அவர் கையைச் சந்தோஷத்தோடு குலுக்கிக்கொண்டே, "கடைசியில் பத்மினி அம்மாளுக்கு இல்லறப்பயனைக் கைமேல் தந்து விட்டீர்களென்று சொல்லுங்கள்" என்ருர்.

"அதை அவளுக்கு நான் தந்தேன் என்று பெருமையடைய முடியாது. மிஸ்டர் டே, தெய்வம் தந்தது" என்ருர் ஐயர்.

அவர் சொற்களில் அப்பொழுது பக்தி பரவசம் மிதந்தது ! ●

முற்றிற்று

Edited & Published by N. R. Ramanujan & Printed by S. Rangaswami
at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

